சகல ஐஸ்வர்யங்களையும் அள்ளித் தரும்

# அக்ஷயத் திதியும்

(4 - 5 - 03)

# அதிர்ஷ்டம் தரும் ஷாப்பிங்கும்



4 - 5 - 2003 (ஞாயிற்றுக்கிழமை) அன்று அக்ஷயத் திதி வருகிறது. அன்று. நீங்கள் வாங்கும் தங்கமும். வைரமும். வெள்ளியும். அதிர்ஷ்ட ராசிக் கற்களும் ஆண்டு முழுவதும் மேற்கொண்டு மீண்டும் மீண்டும் அவற்றை வாங்கும் சக்தியை உங்களுக்குத் தரும் என்பது எல்லோருடைய அசைக்க முடியாத நம்பிக்கை.

வாருங்கள் இந்த ஆண்டும். எங்கள் நகைகளும் வைரங்களும். உபசரிப்பும். பிரைவசியும். உங்களுக்காகவே.

நெரிசல் இல்லாத. வாகன பார்க்கிங் பிரச்சினையே இல்லாத. உபசரிப்பில் பொய்முகம் இல்லாத. தரத்தில் சமாதானங்கள் இல்லாத. ஒரு பிரத்யேக ஷாப்பிங் அனுபவம் காத்திருக்கிறது.

புது வரவுகள் :

ஒரே காரட்டில் ஒரு வைர செட். ரூ.14000/-க்கு ஒரு செட் 7கல் தோடு.
ரூ.990க்கு வைர மூக்குத்தி . ரூ.2000க்கு வைர மோதிரம். etc.,



SWARNALAYA

Jewellery



5, Bazulla Road, T.Nagar, Chennai - 600 017. Tel : 28156386, 28157787, 28158144.

கவர்ச்சி
ஜிகு...
ஜிகு...!
68,69



யாரெல்லாம்
இன்று சண்டியர்கள்? 82,83



'பொசுக்' என்றால்
பொடாவா?
4,5

கல்கி
4.5.2003

# நடக்குமென்பார்; நடக்கும்!



**மேஷம் :** எடுத்த காரியத்தில் வெற்றி, தெய்வபலம், முக்கிய மானவங்க ஆதரவு கிடைக்கும். எதிர்ப்புகள் மறையும். புது வேலை தேடுகிறவங்களுக்கு இது நல்ல நேரம். வீடு கட்ட, வாங்க வாய்ப்பிருக்கு. ரியல் எஸ்டேட் பிசினஸ் ஆதாயம் தரும்.



**ரிஷபம் :** லேட்டான பிரச்னைகள் இப்போ டப்புனு முடியும். எந்தக் காரியமும் வெற்றி தரும். வேலை விஷயமா வெளியூர் / வெளிநாடு போக வாய்ப் பிருக்கு. கொடுக்கல் வாங்கல் ஓ.கே. முன்ன பின்ன தெரியாத வங்கக்கிட்ட மூச். பெண்களுக்கு உற்சாக வாரம்.



**மிதுனம் :** பணவசதி, புதியவங்க அறிமுகம், தெய்வீக ஈடுபாடு கிடைக்கும். கருத்து வேறு பாடு எதிர்ப்பு மறையும். ஊதிய உயர்வு, இடமாற்றத்துக்கு சான்ஸ். சினிமா, நாடகம் போன்ற கலைத்துறை, எலக்ட்ரானிக், இயந்திரம், பத்திரிகை துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு முன்னேற்றம் உண்டு. கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான முயற்சிகள் கைகூடும்.



**கடகம் :** தாராள பணவசதி, தெய்வ பக்தி, எதிர்பார்த்த நல்ல செய்தி, எல்லாம் தேடி வரும். அலுவலகத்தில் உற்சாகம், உதவி, பாராட்டு, ஆதரவு, ஒத்துழைப்பு உண்டு. கடன் தொல்லைகள் ஜூட். நண்பர்கள், உறவினர்கள் உதவுவாங்க. வழக்கு விவகாரங்கள்ல சாதகமான திருப்பம் வரும். வீண் அலைச்சலை ஒத்திப் போடுங்க.



**சிம்மம் :** முக்கியமானவங்க தொடர்பு, காரிய வெற்றி, அனுகூல பயணம் கிடைக்கும். வெளிநாட்டிலிருந்து உறவினர் வருகை, பிரிந்தவர்கள் ஒன்று சேர்வது, எல்லாம் நடக்கும். இதனால குடும்பத்துல விருந்து உபசாரம், ஜாலி டூர் உண்டு. அரசியல்வாதிகள் மதிப்பு கூடும் அலுவலகத்தில் இதுவரை இருந்த குழப்பம், சஞ்சலம் விலகும். வேலை விஷயமா வெளிநாடு போக வாய்ப்பிருக்கு.



**கன்னி :** தாமதமாகி வந்த காரியம் வெற்றி பெறும். எடுத்த காரியத்தை தலைகீழா நின்னாவது முடிச் சுடுவீங்க. அலுவலகப் பணியாளர்களுக்கு உற்சாகமான வாரம். எதிர்ப்புகள் மறையும். பதவி உயர்வு, இடமாற்றம், பாராட்டு, புகழ் கிடைக்கும். புது முயற்சி கைகூடும். குடும்பத்துல ஒற்றுமை கூடும். பெண்களுக்கு உல்லாசம் கலந்த உற்சாக வாரம்.



**துலாம் :** தடை, குறுக்கீடுகள், பிரச்னைகள், டென்ஷன்கள் மாயமாகும். சுய தொழில் பண்றவங்களுக்கு பொருளாதாரச் சிக்கல் விலகும். சிலர் புதிய தொழில், வியாபாரம் ஆகிய வற்றில் ஈடுபடும் வாய்ப்பிருக்கு. குடும்பத்துல சுபமங்கள காரியங்கள் நடக்க வாய்ப்புண்டு. ஜாலி டூர் அடிக்க சந்தர்ப்பம் இருக்கு. வழக்கு விவகாரங் கள்ல அனுகூலமான திருப்பம் வரும்.

**டீ.வி. நடிகர் சேத்தன் (கடகம்) எதிர்பார்த்த நல்ல செய்தி வருமாமே!**



**விருச்சிகம் :** பணவசதி, எடுத்த காரிய வெற்றி, முக்கியமானவங்க தொடர்பு ஆகியவை ஏற்படும். அலுவலகத்தில் சுமுகமான சூழல், பதவி உயர்வு, இட மாற்றம் கிடைக்கும். புதிய வேலை முயற்சிகள் கைகூடும். வரவேண்டிய பணம் வந்து சேரும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு தேடி வரும்.





**தனுசு :** வீண் அலைச்சல், தடைகள், குறுக்கீடுகள், எரிச்சல் இருந்தாலும் இறுதியில் வெற்றி உண்டு. தெய்வீக காரியத்தில் மனம் ஈடுபடும். எதிர்ப்புகள் மறையும். புதிய தொழில்முயற்சி கூடி வரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ் பாராட்டு கிடைக்கும். எதிர்பாராத நல்ல சந்திப்பு நிகழும். மாணவர்களுக்கு முன்னேற்றம் உண்டு.

**மகரம் :** தெளிவான மனநிலை, தன்னம்பிக்கை, புதியவங்க அறிமுகம், வழக்கு விவகாரங்கள்ல வெற்றி எல்லாம் கிடைக்கும். கடன் தொல்லை நீங்கும். இயந்திரம், உலோகம், மருத்துவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு ஆதாயம் கொட்டும். சிலர் புது வீடு வாங்க, கட்ட வாய்ப்பிருக்கு. பெண்களுக்கு எல்லா வகையிலயும் அனுகூலம் உண்டு.





**கும்பம் :** எதிர்பாராத பயணம், வழக்கு விவகாரங்கள்ல வெற்றி, பதவி உயர்வு, இடமாற்றம். பாராட்டு, புகழ் எல்லாம் கிடைக்கும். திறமை, சாதுர்யம், புத்தி சாலித்தனம் வெளிப்படும். சிலர் வெளிநாடு செல்லும் வாய்ப்பிருக்கு. குடும்பத்தில் பிரிந்து இருந்தவர்கள் இப்போ ஒன்று கூடுவாங்க. பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**மீனம் :** எதிர்ப்புகள் மறையும். தன்னம்பிக்கை பிறக்கும். பிரபலங்களின் நட்பு கிடைக்கும். இதனால பயன் உண்டு. வேலை விஷயமா வெளிநாடு போக வாய்ப்பிருக்கு. குடும்பத்துல சுபகாரிய நிகழ்ச்சி நடக்கப் போகுது. கருத்து வேறுபாடு மறையும். குடும்பத்தோட உல்லாசப் பயணம் போக வாய்ப்பிருக்கு.



## அக்னிசர்மா பக்கம்

## ஏப்ரல் 30 முதல் மே 6 வரை




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**செ. ஏக்நாத் ராஜ்**
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.330/-**
**ஆறு மாதம் : ரூ.165/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யுஎஸ். டாலர்
**இலங்கை : ரூ.2000/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# துஷ்பிரயோகத்தைத் துரத்தியடிப்போம்!

## 'பொடா' சட்டம் :

*''தமிழ்நாட்டில் இன்று மிகச் சுலபமாகவும், மிகக் கொடுமையாகவும், நடப்பது 'பொடா' கைதுகள்தான். ''இந்தச் சட்டம் தேவையில்லாதது. பல மனித உரிமை மீறல்களுக்கு வழிவகுக்கக்கூடியது'' என்று எதிர்க்கட்சிகள் சொல்கின்றன.*

*''தீவிரவாதச் செயல்களுக்கு எதிராகக் கொண்டு வரப்பட்ட சட்டம், தமிழகத்தில் அரசியல் ரீதியாக பழிவாங்கப் பயன்படுகிறது'' என்று குற்றச்சாட்டுக்கள் எழுந்திருக்கின்றன. எந்தக் குற்றமும் செய்யாத ஒரு நபர் 'பொடா' சட்டத்தில் பாதிக்கப்படும் போது அவருக்கு கிடைக்கும் நிவாரணம் என்ன? யாரை வேண்டுமானாலும் 'பொசுக்'கென்று பொடாவில் பிடித்து விடலாமா?''— விளக்குகிறார் வழக்கறிஞர் விஜயன்.*

''இப்போதுள்ள குற்றயியல் சட்டப்படியே இருவிதமான கைதுகள் இருக்கின்றன. Cognizable offence என்று சொல்லப்படும், திருட்டு, மோசடி, வழிப்பறி ஆகிய குற்றங்களின் அடிப்படையில் ஒருவரை வாரண்ட் இல்லாமல் விசாரணைக்காக கைது செய்ய முடியும். ஆனால், அப்படிக் கைது செய்தால் இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் நீதிபதியின் முன் ஆஜர் செய்து ரிமாண்ட் செய்ய வேண்டும். சிறு குற்றங்கள் செய்ததாகச் சந்தேகிக்கப்படும் நபரை, வாரண்ட் இல்லாமல் கைது செய்ய முடியாது. அப்படிச் செய்தவுடன், ஒருவருக்கு நீதிமன்றத்தில் ஜாமீன் பெறும் உரிமை உள்ளது. 'பொடா' சட்டத்தின் கொடுமையான அம்சமே, அதன் 'ஜாமீன்' பற்றிய ஷரத்துக்கள்தான். Cognizable offenceல் ஒரு குறிப்பிட்ட காலவரம்புக்குள் அரசுத் தரப்பு குற்றப் பத்திரிகையை தாக்கல் செய்யாவிட்டால், நீதிமன்றம் தானாகவே ஜாமீன் கொடுத்து விடும். இந்த கால வரம்பு என்பது அதிகபட்சம் அறுபது நாட்கள்தான். ஆனால் 'பொடா' சட்டத்தில் இந்த கால வரம்பு நூற்றியெண்பது நாட்களாக உயர்த்தப்பட்டிருக்கிறது. எனவே 'பொடா' கைதி நூற்றியெண்பது நாட்களுக்கு ஜாமீன் பற்றி மூச்சு விடவே கூடாது. ஆறு மாதத்திற்குப் பிறகு ஒரு வருட காலம் வரை, சிறப்பு நீதிமன்ற நீதிபதி ஜாமீன் கொடுக்க முகாந்திரம் இருக்கிறது என்று கருதினால் கொடுக்கலாம். இருந்தும், 'விசாரணை முடியவில்லை'' என்ற பல்லவியைப் பாடி, ஒரு வருடம் வரை காவலை நீட்டிக்கும் வாய்ப்பு அரசுத் தரப்புக்கு உண்டு. இதற்குச் சாதகமாக 'பொடா' சட்டத்தின் பிரிவு 49(7) இருக்கிறது. இந்தப் பிரிவின்படி "ஒரு வருடம் வரை ஜாமீன் கிடையாது" என்று தொனிக்கும் வாசகங்கள் இடம் பெற்றுள்ளன. வைகோ வழக்கில் மத்திய அரசு வழக்கறிஞர் வாதாடும் போது, ''அந்தப் பிரிவை அப்படிப் பார்க்கக் கூடாது" என்றும் ஒரு வருடத்திற்கு முன்பே ஜாமீன் தரலாம்" என்றும் சொல்லியுள்ளார். ஆனால் இந்த அபிப்பிராயம் நீதிமன்றத் தீர்ப்பாக வரும் வரை, ஜாமீன்





கோர்ட்டில் பின்னர் நிரூபிக்க வேண்டும். சிரம மான காரியம்தான். போதைப் பொருள் தடுப்புச் சட்டத்திலும் இந்த அம்சம் இருக்கிறது. ஆனால் மற்ற சட்டங்களின் கீழ் ஜோடனை செய்து போடப் படும் வழக்குகளை ஒரு திறமையான வழக்கறிஞர், அனுபவமுள்ள நீதிபதியின் துணையுடன் உடைக்க முடியும். இது தவிர, பாதிக் கப்பட்டவர்

• வைகோ கைது!



• கோபால் கைது!

கொடுப்பது பற்றிய போதுமான நிவாரணம் சட்டத்தில் இல்லை என்ற நிலைதான் நீடிக்கும்.

"அடுத்தபடியாக சாட்சிகள் சட்டத்தில் பல மாற்றங்கள் செய்து 'பொடா'வில் பொருத்தியிருக்கிறார் கள். இவைகளை அமல்படுத்தும் போது மனித உரிமை மீறும் செயல்கள் நடக்கும் வாய்ப்பு நிறையவே இருக் கிறது. குறிப்பாக மற்ற சட்டங்களில், குற்றம் சாட்டப்பட்டவர்கள்; மற்றும் வழக்கு தொடர்பானவர்கள் நீதிமன் றத்தில் கொடுக்கும் வாக்குமூலம்தான் செல்லும். ஆனால் பொடாவில், "ஒரு போலீஸ் அதிகாரியின் முன் கொடுக்கப் படும் வாக்குமூலமே கோர்ட்டால் ஏற்றுக் கொள்ளப்படும். இதன் காரணமாக போலீஸ், உருட்டி, மிரட்டி, பலவந்தப்படுத்தி வாக்கு மூலம் வாங்குவதற்கான வாய்ப்பு இருப் பதை மறுக்க முடியாது. பொடாவின் மற்றொரு கொடுமையான அம்சம், "ஆயுதங் கள் ஒரு நபரிடமிருந்து பறிமுதல் செய் யப்பட்டதாக கைது செய்யப்பட்டால், "அது தவறு; அப்படிப்பட்ட ஆயுதங்கள் ஏதும் என்னிடமிருந்து எடுக்கப்பட வில்லை" என்று சம்பந்தப்பட்ட நபர்தான் தனது வழக்கறிஞரிடம் சொல்லும் விஷ யங்களை, அந்த வழக்கறிஞர் நீதி மன் றத்தில் சொல்ல வேண்டும் என்று பொடா சட்டப் பிரிவு சொல்கிறது. இதுவும் குற்றம் சாட்டப்பட்டவர்களைப் பொறுத்தவரை பாதகமான அம்சம் மட்டுமல்ல, வழக் கறிஞர்களின் தொழில் தர்மத்திலும்

- விளாசுகிறார் வழக்கறிஞர் விஜயன்

எட்டிப் பார்க்கும் அம்சமாகும்.

"இந்தச் சட்டத்தில் பல பாதுகாப்பு அம்சங்கள் இருப்பதாக மத்திய அரசு சொல்கிறது. அது அப்படிச் சொல்வதைத் தவிர வேறு வழியில்லை. 'பொடா'வில் ஒரு பிரிவின்படி, ஒருவர் மீது தவறாக வழக்கு போடப்பட்டது" என்று நிரூபண மானால் சம்பந்தப்பட்ட போலீஸ் அதிகாரி மீது வழக்குப் போட முடியும். ஆனால் நடைமுறையில், ஒரு தனிப்பட்ட நபருக்கு இது சாத்தியமல்ல. ஒரு மாநிலத்தில் வழக்கு சுதந்திரமாக நடக்காது என்று பாதிக்கப்பட்டவர் கருதினால், வேறு மாநிலத்துக்கு வழக்கை மாற்ற மனு தாக்கல் செய்யலாம் என்றும் ஒரு பிரிவு இருக்கிறது. ஆனால் இந்த ஷரத்து நீதிமன்றத்தில் பரீட்சை செய்து பார்க்கப்படும் போதுதான் நிவாரணம் சாத்தியமானதா என்பது தெரியவரும்.

"தீவிரவாதத்தை ஒடுக்குவதற்கு ஒரு சட்டம் தேவை என்று அனைவரும் ஒப்புக் கொள்வார்கள். ஆனால் எது தீவிரவாதம், எவை, எவை, தீவிரவாதத்தை ஆதரிக்கும் செயல்கள் என்று பகுக்கும் போது, இடையில் உள்ள கோடு மிக மெலிதாக உள்ளது. இதன் காரணமாக அரசியல் எதிரிகளும், கட்சிக்கு வேண்டாதவர்களும் பாதிக்கப்படுகிறார்கள். ஒரு தீவிரவாத இயக்கத்தின் செயல்பாடுகளைப் பற்றி கூட்டத்தில் பேச்சாளர் விவரித்து வரும்போது, அந்த இயக்கத்தை ஆதரிக்கும் 'தொனி' தெரியக்கூடிய வகையில் ஏதாவது அம்சம் இருக்கிறதா? என்று நிர்ணயிப்பதில் பலவித கருத்துக்கள் இருக்கக்கூடும். நல்ல நோக்கத்துடன் கொண்டு வரப்படும் சட்டங்கள் மோசமான வகையில் ஆட்சியாளர்களால் பிரயோகிக்கப்படுகின்றன.

"அதிகார மட்டத்தில் சிலர் தவறாக உபயோகிப்பதால் மொத்த சட்டத்தையே ஒழிக்க வேண்டும்" என்று வாதம் செய்யக் கூடாது என்கிறார் மத்திய அரசு வழக்கறிஞர்.

"அது சரி; அப்படியென்றால் தவறாகப் பிரயோகப்படுத்துபவர்களைத் தட்டிக் கேட்கும் வகையில். பல ஷரத்துக்களையும், அம்சங்களையும் உடனே சட்டத்தில் உட்புகுத்துங்கள்" என்கிறோம். அது தாமதமாகும் பட்சத்தில் மேலும் மேலும் துஷ்பிரயோகம் நடக்கும்.

இதில் மற்றொரு விஷயம், எப்படிப்பட்ட பாதுகாப்பு அம்சங்கள் இருந்தாலும், முறைகேடுகளை நீதி மன்றம்தான் பின்னர் தட்டிக் கேட்க முடியும். அந்தக் காலகட்டம் வருவதற்கு முன், இந்தச் சட்டத்தின் அடிப்படையில் கைது செய்யப்பட்ட நிரபராதி ஒருவர் மிக மோசமாகவே பாதிக்கப்பட்டிருப்பார் என்பது வருத்தமான ஒன்று.

"'பொடா' சட்டத்தின் உள் பலவீனங்களை உணர்ந்து, அதன் காரணமாக நிரபராதிகள் பாதிக்கப்படாமல் பார்த்துக் கொள்வதில் நீதிமன்றத்துக்குப் பெரிய பொறுப்பு இருக்கிறது. குறிப்பாக போலீஸ் விசாரணைக்கு ஒருவர் உட்படுத்தப்படும் போது, வழக்கறிஞரும் உடன் இருக்க அனுமதிக்க வேண்டும். குற்றம் சாட்டப்பட்டவர்களின் சொத்துக்களை முடக்குவது போன்ற நடவடிக்கைகளை நன்கு யோசித்து பின்பே செய்ய வேண்டும்."

"ஆளுங்கட்சிக்கு விசுவாசமாகவும், உள்துறை அமைச்சகத்தை நிர்வகிப்பவர்களுக்கு லாலி பாடும் விதமாகவும் போலீஸ் செயல்படக்கூடாது. அப்போதுதான் நல்ல சட்டங்கள், நல்ல நோக்கத்தின் அடிப்படையில் பிரயோகிக்கப்படும் வாய்ப்பு கூடுதலாக இருக்கும்."

சந்திப்பு : ப்ரியன்

''ஏம்பா சர்வர், டிப்ஸ் பணத்தை எல்லாம் என்ன செலவு செய்வே?''

''எதிர்ல இருக்கிற ஹோட்டலுக்குப் போயி டிபன் சாப்பிடுவேன் சார்!''

– முள்ளிப்பட்டு கண. சிவகுமார்



# விரட்டும் வறட்சி; புரட்டு நிவாரணம்!

## –திண்டுக்கல் திடுக்!

* கரிகாலி கிராமக் குளம்



* மாவட்ட ஆட்சியர் செந்தில்குமார்

**கா**லை எட்டு மணி வெயிலுக்கே கண்களை ஏமாற்றுகிறது கானல் நீர். வேலிகளாய்த் தென்படும் கள்ளிச் செடிகள், கருவேல மரங்கள் தவிர உழுது செம் புழுதியாய் பார்வைக்கு எட்டியவரை பசுமை தொலைத்து நிற்கிற வயற்காடுகள். கூலிக்கு ஆடு மேய்க்கும் அறுபது வயது முருகு சோலை, வெயிலின் உக்கிரம் தாளமுடியா மல், தலையில் துண்டை முக்காடிட்டபடி தளர்ந்து நடக்கிறார். நான்கு வெள்ளாடுகள் உட்பட ஒரு டஜன் செம்மறியாடுகள் முன் னால் நடந்து போய்க் கொண்டிருக்கின்றன. "ஆடு மேய்க்கிறதுக்கே வழியில்லீங்க. புல்லு கெடந்திட்டுப் போவுது, பூண்டுச் செடியா வது கெடக்குதான்னா, அதுக்கே அஞ்சு மைலுக்கு அங்கிட்டு மலையடிவாரத்துக்கு ஓட்டிக்கிட்டுப் போறேன். குடிக்கத் தண்ணி யில்லாம வெக்கை நோய் வந்து நாலு ஆடுக செத்துப் போச்சு. போன வருஷம் மாதிரி ஆடுகள ஓட்டிகிட்டு கேரளா பார்டருக்கு போயிடலாம்னு இருக்கேன். அதைத் தவிர வேற வழி தெரியலே'' சொல்லிவிட்டு நடக்கிறார்.

சற்றுத் தூரத்தில் தலையில் விறகுச் சுமையோடு வந்து கொண் டிருந்தார் பூரணி. "சொட்டு மழை இல்லீங்க. ஒரு மழை பொழிஞ் சாக்க கம்பு, சோளம் விதைப் பாங்க. வேலை கிடைக்கும். அதுக் கும் வழியில்லே. வூட்டுக்கு விறகு வெட்டிக்கிட்டுப் போன காலம் போயி, இப்போ வெறகை வெட்டி வித்துட்டு வந்து, அரை வயித்த கழுவிக்கிறோம்" என்று சொல்லிக் கொண்டே சுமை பொறுக்க முடியாமல் காலணியற்ற வெற்றுப் பாதங் களோடு கடந்து போகிறார்.

**கீ**ற்றுக் குடிசைகளும், ஓடு வேயப்பட்ட சிறு வீடுகளுமாய் குவிந்திருந்த சின்னஞ் சிறு கிராமம் வந்துவிட, மனித முகங்களைத் தேடுகிறோம். அறுபதைக் கடந்த முதுமையும், வறுமை வரைந்த வற்றிய உடலுமாய், சில முதிய பெண்கள் எதிர்ப்படுகிறார்கள். ஆண் களை அரிதாய், தேட வேண்டியிருக்கிற அந்த கிராமத்தில், தமது ஒரு வயது பேர னுடன் தன்னந்தனியாக வசிக்கிறார் நல்லம் மாள். "என் வூட்டுக்காரு, மகன், மருமக எல் லாரும் கோழிக்கோட்டுக்குப் போயிட்டாங்க. இங்க சுத்தமா பொழப்பு இல்லீங்க. எனக்குக் கண் பார்வை சரியில்லேன்னு விட்டுட்டுப் போயிட்டாங்க. இங்க வீட்டைச் சும்மா விட் டுட்டா கரையான் புடிச்சி இத்துப் போயிடு மேன்னு நா மட்டும் இருக்கேன். ஒரு மாசமா கடுதாசியும் இல்ல, காசும் அனுப்பலே.. கூழைக்குடிச்சு பொழச்சுகிட்டு இருக்கோம்" உள் வாங்கிப் போன கண்களின் வழியே



* குமுறும் குட்டம் கிராமத்தினர்



* அண்டிப் பிழைக்கும் ஆடுகளோடு முருகசோலை



* நல்லம்மா



* பூரணி

கன்னீரை வழிய விடுகிறார் நல்லம்மாள். இவர்களைப் போன்ற குடி மக்கள் எல்லாம் தமிழகத்தில்தான் வசிக்கிறார்களா? சந்தேகப் பட வேண்டிய அவசியமேயில்லை. இது திண்டுக்கல் மாவட்டத்தில் உள்ள பெரும் பாலான கிராமங்களில், ஏழை, எளிய மக் களின் நிஜ வாழ்க்கை.

குடிநீர்த் தட்டுப்பாடு மிகுந்த திண்டுக்கல் மாவட்டத்தில் ஆழ்குழாய்க் கிணறு அமைக்க நானூறு அடிகள் ஆழத்திற்கு பூமியைத் துளைக்க வேண்டியிருக்கிறது. இங்கே வறட்சி வாட்டுகிறது என்று சொல் வதை விட, ஊரை விட்டே விரட்டியடிக் கிறது என்பதே நிகழ்கால உண்மை. திண்டுக் கல் கேரளத்தை ஒட் டிய மாவட்டம் என்பதால் பிழைப்புத் தேடி கோழிக்கோடு, காசர்கோடு, கொல் லம் வரை குடி பெயர்ந்து விடுவது கடந்த பத்தாண்டு களாகவே இங்கே அதிகரித்திருக்கிறது. ஆனால் இந்த ஆண்டு ஆண்களோடு, பெண் கள், குழந்தைகளும் கிளம்பிப் போய்விட்டது. கோர வறட்சியின் புதிய அடையாளம்.

திண்டுக்கல் மாவட்டம் வேடசந்தூர் சட்டமன்றத் தொகுதிக்கு உட்பட்ட குட்டம் கிராமத்தில்தான் நல்லம்மாளை நாம் சந்தித் தது. இந்த கிராமத்தின் மக்கள் தொகையில் பாதிப் பேர் கேரளத்திற்குப் போய்விட்டதை, பூட்டிக் கிடக்கும் வீடுகள் பொட்டில் அறைந்து சொல்கின்றன. வீட்டில் வயதான முதியவர்களில் ஒருவரை மட்டும் விட்டு விட்டு கொத்துக் கொத்தாய் குடும்பம் குடும்பமாய் கிளம்பிப் போய் விடுகிறார்கள். அறுபத்தைந்து வயது வேலம்மாள் குடும்பத் தினரைப் பார்த்து ஆறு மாதமாகிறது என்று அழாத குறையாகப் புலம்புகிறார்.

"என்னோட குடும்பத்தை விடுங்க! பக் கத்துவீட்டு ஜனங்க கேரளத்துக்குப் போயி அஞ்சு வருஷமாச்சு. இங்கே பொழப்பு இல்லேன்னு வரவே இல்லே. வீடு இடிஞ்சு போயி பாழடைஞ்சு கிடக்குற கொடுமையப் பாருங்க'' என்று சிதிலமாகிக் கிடக்கும்



* குணவதி

வீட்டைக் காட்டுகிறார்.

இதே கிராமத்தில் நிறைமாத கர்ப்பிணியான குணவதியின் கணவர், மாமனார், மாமியார் அத்தனை பேரும் கேரளத்துக்குப் போய்விட்டிருக்க, பக்கத்து வீட்டிலிருக்கும் பாட்டிதான் அவருக்குத் துணை. வேடசந்தூர் தாலுக்காவில் உள்ள பெரும்பாலான கிராமங்களில் இதுதான் வாழ்க்கை நிலை.

பிழைக்க வழியில்லாமல் மண்ணின் மைந்தர்கள் குடிபெயர்ந்து போவதை வேடிக்கை பார்ப்பதுதான் மாநில அரசின் வேலையா? இருபத்தெட்டு மாவட்டங்களை வறட்சி மாவட்டங்களாக அறிவித்திருக்கும் தமிழக அரசு என்ன செய்து கொண்டிருக்கிறது? வறட்சி நிவாரணப் பணிகளுக்காக ஒதுக்கப்பட்ட கோடிகள் எங்கே என்ற கேள்விகள் ஒரு பக்கம் இருக்க, மத்திய அரசின் வறட்சி நிவாரணப் பணிகளில் ஒன்றான, உணவுக்கு உத்திரவாதம் அளிக்கும் 'சம்பூர்ணா கிராம வேலை வாய்ப்புத் திட்டம்' இங்கே முறையாக செயல்படுத்தப் படாததால் கிராம மக்களுக்கு வேலையும் கிடைக்காமல் அரிசியும் கிடைக்காத அவலம்.

வேலைக்கு உணவு தரும் சம்பூர்ணா திட்டத்தின் கீழ், கிராமப்புறங்களில் உள்ள நீர் நிலைகள், கால்வாய்கள் போன்றவற்றை தூர் வாருதல், புதிய சாலைகள் அமைத்தல், தடுப்பணைகள் கட்டுதல் போன்ற பணிகளை கிராம மக்களைக் கொண்டு வறட்சி நிவாரணப் பணிகளாக நிறைவேற்றுவதன் மூலம் வேலை வாய்ப்பு தர வேண்டும்.

இத்திட்டத்தின் கீழ் நிறைவேற்றப்படும் பணிகளில் வேலை வாய்ப்பு பெறும் கிராமவாசி ஒருவருக்கு, ஒரு நாள் ஊதியமாக ஐம்பத்து நான்கு ரூபாய், ஐம்பது பைசா கூலியும், ஐந்து முதல் ஏழு கிலோ இலவச அரிசியும் வழங்க வேண்டும் என்பது திட்டத்தின் கட்டாய விதி. ஆனால் திட்டத்தை நிறைவேற்ற வேண்டிய உள்ளாட்சி அமைப்புகளின் பிரதிநிதிகளும், ஊழியர்களும், கிராம வாசிகளுக்கு வேலை கொடுப்பதில்லை. மாறாக பொக்லிங் போன்ற பெரிய கனரக இயந்திரங்களைக் கொண்டு ஒரு சில தினங்களில் சுலபமாக வேலையை முடித்துவிட்டு, அரிசியை பொதுச் சந்தையில் விற்று விடுகிறார்கள் என்ற அதிர்ச்சித் தகவல் கிடைக்கிறது.

இதற்கு குட்டம் கிராமமே ஒரு உதாரணம். "எங்கள் கிராமத்திலுள்ள தடுப்பணையை சம்பூர்ணா மூலம் தூர் வாரும் வாய்ப்பு கிடைத்தும், எங்களுக்கு வேலை வாய்ப்புத் தராமல், பொக்லிங் மூலம் ஒரே நாளில் தூர் வாறிவிட்டு அரிசியை ரேஷன் கடையில் விற்றுவிட்டார்கள்'' என்று குட்டம் கிராமத்தின் அதிமுக. பஞ்சாயத்துத் தலைவர் கலா மணி மீதும், திமுக. ஒன்றியக் கவுன்சிலர் சக்திவேல் மீதும் தங்கவேல் தலைமையில் கூடிய குட்டம் கிராம வாசிகள் சிலர் குற்றம் சுமத்துகிறார்கள். இது குறித்து உண்மை நிலவரம் அறிய, பஞ்சாயத்துத் தலைவர், கவுன்சிலர் இருவருக்காகவும் நெடு நேரம் காத்திருந்தும் அவர்களைச் சந்திக்கவே முடியவில்லை.

"கூட்டத்தில் மட்டும்தான் என்றில்லை திண்டுக்கல் மாவட்டம் முழுவதும், சம்பூர்ணா திட்டம் முறையாகச் செயல்படுத்தப் படவில்லை." என்று குற்றம் சாட்டுகிறார் வேடசந்தூர் தொகுதியின் முன்னாள் சட்டமன்ற உறுப்பினரும், முன்னாள் துணைச் சபாநாயகருமான வி.பி. பாலசுப்ரமணி.

"உணவுக்கு வேலை என்பதை எங்கேயும் முழுமையாகச் செயல்படுத்தவில்லை. ஆனால் இத்திட்டத்தின்படி ஐம்பது சதவிகிதம் அரிசி கொடுத்தது போல பதிவேடுகளைப் போலியாக உருவாக்கி வைத்திருக்கிறார்கள். இந்த பதிவேடுகளில் உள்ள கைரேகைகளை அதிரடியாக சோதனை செய்தாலே உண்மை நிலவரம் தெரிந்துவிடும்" என்று சொல்கிறார் இவர், "வேடசந்தூர் சட்டமன்றத் தொகுதியின் நடப்பு எம்.எல்.ஏ.வான ஆண்டிவேலு வீட்டை ஒட்டிச் செல்லும் பள்ளிக் குடத்தனூர் கால்வாயை, பொக்லிங் மூலம் தூர்வாரியதற்காக ரமேஷ் என்ற 'ரோடு இன்ஸ்பெக்டர்' மாவட்ட ஆட்சியரால் சஸ்பெண்ட் செய்யப்பட்டார். இதைவிட வேறு என்ன ஆதாரம் வேண்டும்?" என்றும் கூறுகிறார் பாலசுப்ரமணி.

வேடசந்தூரையடுத்த எரியோடு பகுதியில் உள்ள பல கிராமங்களில் சம்பூர்ணா மூலம் முறையாக வேலை தந்து, அரிசி வழங்கியதை நன்றியோடு குறிப்பிடுகிறார்கள் கிராம மக்கள். திண்டுக்கல் மாவட்ட ஆட்சியரான பி.செந்தில்குமார் ஐ.ஏ.எஸ். திடீர் விஸிட் அடித்து சோதனை செய்



• வி.பி.பாலசுப்பிரமணி

• பிரம்பக் கோனார்



• சிதிலமான வீடு முன் வேலம்மா



• கனரகத் தூர் வாரல்

கிற பகுதிகளில் எல்லாம் சம்பூர்ணா திட்டம் உண்மையாக நிறைவேற்றப்பட்டிருக்கிறது. ஆனால் கிராமம் கிரமமாக ஆட்சியர் சுற்றிக் கொண்டிருக்க முடியுமா என்று கேட்கிறார், கரிகாலி கிராமத்தைச் சேர்ந்த பிரம்பக் கோனார்.

"எங்கள் ஊரில் உள்ள தடுப்பணை, பக்கத்து ஊரான 'கணக்குப் பிள்ளை பட்டி'யில் உள்ள நல்வாங்கிக் குளம், இரண்டையும் கடந்த முறை கிராம மக்கள் மூலம் தூர்வாரி விட்டு, இந்த முறை பொக்லிங் மூலம் இரண்டே நாளில் பணியை முடித்துவிட்டார்கள் இதற்கு நான் சாட்சி" என்கிறார் இவர்.

சம்பூர்ணா திட்டத்தின் கீழ் செயல்படும் வறட்சி நிவாரணப் பணிகளில் உண்மையிலேயே பொக்லிங் இயந்திரம் பயன்படுத்தப் படுகிறதா என்று அறிய சுற்றிச் சுற்றி வந்த போது, குஜிலாம்பாறையை அடுத்த நாகையக்கோட்டை கிராமத்தில் பொக்லிங் மூலம், கால்வாய் தூர்வாரும் பணி நடைபெறுவதைக் கண்முன்னால் காண முடிந்தது. அங்கிருந்த ஊராட்சி ஊழியரிடம் எந்தத் திட்டத்தின் கீழ், இந்தப் பணி நடைபெறுகிறது என்று கேட்டபோது, உண்மையை ஒளிக்காமல் 'சம்பூர்ணா' என்றார்.

"பத்து நாட்களுக்குள்ளே வேலையை முடிக்க வேண்டும் என்று யூனியனில் கெடு விதிக்கிறார்கள். பொது மக்களை வைத்து தூர் வாரினால் குறிப்பிட்ட நாட்களுக்குள் முடிக்க முடியுமா?" என்று கேட்ட யூனியன் ஊழியர், பெயரும் புகைப்படமும் வேண்டாம் என்று மறுத்துவிட்டார்.

வறட்சி நிவாரணப் பணிகளில் ஏன் இத்தனை முறைகேடுகள்? மாவட்ட ஆட்சியர் பி. செந்தில்குமாரைச் சந்தித்தோம்.

"திண்டுக்கல் மாவட்டம் முழுவதும் மொத்தம் இரண்டாயிரத்து இருநூற்று தொண்ணூற்று ஏழு வறட்சி நிவாரணப் பணிகளுக்கு நிதி ஒதுக்கீடு செய்து, வேலை முழு வேகத்தில் முடுக்கிவிடப்பட்டது. இதில் நூற்று அறுபத்து இரண்டு பணிகள் மட்டுமே எஞ்சியுள்ளன. சம்பூர்ணா திட்டத்தின் கீழ் இதுவரை பதினைந்து கோடி ரூபாயும், எட்டாயிரம் டன் அரிசியும் வழங்கப்பட்டுள்ளது. ஒருங்கிணைந்த தரிசு நில மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் நடைபெறும் பணிகளில், பொக்லிங் போன்ற கனரக இயந்திரங்கள் பயன்படுத்தலாம். அதைத் தவறாகப் புரிந்து கொண்டு 'சம்பூர்ணா' திட்டம் என்று சொல்கிறார்கள். சம்பூர்ணாவில் குழப்பமோ முறைகேடோ வந்துவிடக் கூடாது என்பதால் பணி நடைபெறும் இடத்தில், இது எந்த திட்டத்தின் கீழ் நடைபெறுகிறது என்பதைத் தெரிவிக்க, உடனடியாக அறிவிப்புப் பலகை வைக்க வேண்டும் என்று உத்தரவு பிறப்பித்திருக்கிறோம். கிராமங்களுக்கு மண்டல கண்காணிப்பு அதிகாரிகளையும் வாரத்தில் இருமுறை சென்று வர உத்தரவு பிறப்பித்துள்ளோம்" என்று விளக்கம் தருகிறார்.

- எப்படியிருந்தாலும் வறட்சியின் கோரப் பிடியில் சிக்கி சபிக்கப்பட்ட திண்டுக்கல் மாவட்டத்தில், குறிப்பாக வேடசந்தூர் போன்ற மிகவும் பின் தங்கிய தொகுதிகள், ஜெயலலிதா போன்ற வி.ஐ.பி.க்களின் தேர்தல் களமானால் மட்டுமே விடிவு.

**- ஆர்.சி.ஜெயந்தன்**

**படங்கள் : டிஜிட்டல் சண்முகம்**

முதல்வர் பதவி

என்னோட நாற்காலிக்கு மூணு கால் போதும்...

நீதித்துறை

அதிகார வர்க்கம்

சட்டமன்றம்

பத்திரிகைகள்

## மக்கள் ஆட்சியா? ரௌடிகள் ராஜ்ஜியமா?

சென்னை தியாகராய நகரில் ஒரு நகைக் கடைக்குள் புகுந்த நபர்கள், ''கல்யாணத்துக்கு நிறைய நகைகள் வாங்கணும்; முதல்ல மோதிரங்களைக் காட்டுங்க'' என்று கூறியிருக்கிறார்கள். 'மூன்று வைர மோதிரங்களைக் காணோம்' என்று கடைக்காரர் கண்டுபிடிப்பதற்கு முன்னால், மோதிரங்களைப் பரிசீலித்தவர்கள் கம்பி நீட்டி ரொம்ப நேரமாகி விட்டது!

இதைவிடப் பயங்கரம், வேலூரில் ஒரு நகைக்கடைக்குள் புகுந்து, அதன் சொந்தக்காரரைக் கொன்று, மேலும் இருவரைக் காயப்படுத்தி விட்டு, நகைகளும் பணமும் கொள்ளையடித்துக் கொண்டு வெளியே வந்த திருடர்கள், மேலும் இருவரைக் கொன்று குவித்துவிட்டு, அவர்களில் ஒருவரிடமிருந்து பறித்த மோட்டார் சைக்கிளில் தப்பி ஓடிய சம்பவம்.

நினைக்கவே நெஞ்சம் பதைக்கிறது. இவை முடிவில்லா மெகா தொடரின் சமீபத்திய இரு அத்தியாயங்களே. இவற்றுக்கு முன்னும் பல கொள்ளைகள், கொலைகள்; இனி காணப் போவதும் ஏராளம்.

இன்ஸ்பெக்டர் ஜெனரல் மகேந்திரன், ''நகைக் கடைக்காரர்கள் தங்கள் கடை வாசலில் 'குளோஸ் சர்க்கியூட் டீவி' பொருத்த வேண்டும்'' என்று அருளுரை வழங்குகிறார்.

சென்னை மாநகரத்தில் மற்றொரு உயர்போலீஸ் அதிகாரி,




கல்கி



2003 மே 4

சுபானு சித்திரை 21

மலர் : 61

இதழ் : 40


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



"புறநகர்ப் பகுதிகளில் திருட்டுப் புரட்டு அதிகமாக இருப்பதால் மக்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்" என்று உபதேசம் செய்கிறார்!

இந்த உபந்நியாசங்களைக் கேட்கவா மக்கள் இவர்களுக்குப் படி அளக்கிறார்கள்? தங்களுக்கு போலீஸ், பாதுகாப்பு தரும் என்று நம்பி அல்லவோ வரி செலுத்துகிறார்கள்!

இந்தக் கேவலமான நிலைக்குக் காரணம் என்ன? போலீஸாரின் கவனம் திசை திருப்பப்பட்டிருப்பதுதான். 'ஆளுங்கட்சித் தலைமைக்குப் பிடிக்காத யாரை, எப்படி பழிவாங்கலாம், என்ன வழக்குப் போடலாம்' என்பதே சிந்தனையாக இன்று உயர்மட்ட போலீஸும் உளவுத் துறையும் இயங்குகின்றன. இதன் பிரதிபலிப்பாக அடுத்தடுத்த மட்டங்களிலும் 'வட்டம்', 'மாவட்டங்க'ளின் ஆதிக்கம் போலீஸைக் கிடுக்கிப்பிடி போட்டு நெருக்குகிறது. திருடர்கள், சமூக விரோதிகளைக் கண்காணிக்கக் காவல் துறைக்கு ஏது நேரம்? அப்படியே நேரமிருந்து நடவடிக்கை எடுத்தாலும் அரசியல் குறுக்கீடு இராது என்பது என்ன நிச்சயம்?

'சந்தேகமின்றி அரசியல் தலையீடு இருந்தே தீரும்' என்பதற்கு மணல் குவாரி காண்டிராக்ட் நிதர்சன எடுத்துக்காட்டு! இன்றைய அ.தி.மு.க. அரசு ஆட்சிக்கு வந்த சில நாட்களுக்குள்ளேயே ஆற்றுமணல் விலை கணிசமாக உயர்ந்தது. 'ஏன் இந்தத் திடீர் விலை உயர்வு' என்று விசாரித்த போது, 'அதெல்லாம் கண்டுக்காதீங்க; தேவையில்லாமல் தலையை நுழைச்சா, மீண்டு வருமா சந்தேகம்தான்' என்ற பதிலே கிடைத்தது.

அதற்கேற்பத்தான் இன்று, தட்டிக் கேட்கப் போன ஓர் அதிகாரி, மணல் லாரியாலேயே இடித்துத் தள்ளப்பட்டு பரிதாபமாக உயிர் துறந்திருக்கிறார். இவ்வாறு தாக்குதலுக்கு உள்ளான அதிகாரி இவர் மட்டுமல்ல; இவருக்கு முன்னும் பலர் இருந்திருக்கிறார்கள்.

ஒரு லாரி மணல் எடுக்க லைசென்ஸ் பெற்றவர்கள், ஆறு லாரி மணல் கூடுதலாக




எடுப்பதும், மணல் எடுக்க அனுமதி பெற்ற எல்லையையும் மீறிச் செயல்படுவதும், தனியார் நிலங்களில் கூட மணல் எடுப்பதும் சர்வசகஜமாக இருக்கிறது. தடுக்கப் பார்த்தால் உடலெல்லாம் கொழுக்கட்டைதான்; எதிர்த்து நின்றால் கொலை மிரட்டல் தான்!

இந்தச் சூழலில் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் சண்முகசுந்தரம் மணல் லாரியால் இடித்துத் தள்ளப்பட்டு படுகொலை செய்யப்பட்டதில் ஆச்சர்யமே இல்லை.

மணல்குவாரியில் இறங்கிய காண்டிராக்டர்களுக்கு இவ்வளவு துணிவு எங்கிருந்து வந்தது? ஒரு லாரி லோடுக்கு இவ்வளவு என்று நிர்ணயித்து வாங்கப்படும் லஞ்சப் பணம்தான் இத்தகைய துணிவைத் தர முடியும். இதை மார்க்ஸிஸ்ட் தலைவர் வரதராஜனும் சுட்டிக்காட்டியிருக்கிறார். 'அ'வில் தொடங்கி, 'க' வரை அங்கிங்கெனாதபடி எங்கும் பரவியுள்ள லஞ்ச ஊழலும் அதன் நேரடி விளைவான அரசியல் தலையீடும் நீக்கப்பட்டாலன்றி சண்முகசுந்தரம் போன்ற கடமை வீரர்கள் பலரை நாம் பரிதாபமாகப் பலிகொடுக்கத்தான் நேரும்.

அரசியல் பழிவாங்கும் நடவடிக்கைகளை மூட்டை கட்டி வைத்து விட்டு போலீஸையும் உளவுத் துறையையும் அவர்களுக்கு உரிய கடமையான சட்ட ஒழுங்கு பராமரிப்பை ஒழுங்காகச் செய்யுமாறு மேலிடம் உத்தரவிட்டாலன்றி, "ஸி.ஸி. டீ.வி. பொருத்துங்கள்"; "திருடர்கள் ஜாக்கிரதை" போன்ற உப்புப் பெறாத உபதேசங்களைப் போலீஸிடமிருந்து மக்கள் பெற்று, பதிலுக்குச் சொத்து சுதந்திரங்களைப் பறிகொடுக்கத்தான் வேண்டியிருக்கும்.

'மக்கள் ஆட்சியா? ரௌடிகள் ராஜ்ஜியமா?' - ஆட்சிப் பொறுப்பில் உள்ளோர் முடிவு செய்யட்டும். ○

## பொன்மணி வைரமுத்து

# ஓம் சாந்தி!



அமைதி தேடி அலையும் மனமே
அது உன்னிடம்தான் இருக்கிறது
பத்திரமாய்...

ஏதோ ஞாபகத்தில்
எங்கோ மறந்து வைத்த
அபூர்வப் பொருளாய்....

மண்மடிப்புகளில்
மறைந்துகிடக்கும்
மணியொளியாய்...

ஜீவிதஜோதியாய்....

ஞாபகமறதிக்காரனின்
காணாமல் போன பைக்குள் கிடக்கும்
கனக நாணயமாய்...

அடுக்களை உறிப்பானையின்
அடியில் ஒளிந்திருக்கும்
பரிசு கிடைத்த
லாட்டரிச் சீட்டாய்...

மௌனத்தில் ஆழ்ந்திருக்கும்
மகோன்னதத்தில்
மாணிக்கமாய்...

பற்றறுந்த போன
மனவெளியில்
ஆன்மவொளியில்
பாரிஜாதமாய்...

புலன்களை அடக்கி,
வசப்படுத்துகையில்
பளிங்கின் ஜொலிப்பாய்

அந்தச்
சர்வவியாபியின்
பொற்பாதக்கமலங்களில்
சரணடைந்துவிடும்
நித்தியத்துவத்தில்
சத்தியமாய்...

அமைதி
மிகத் துல்லியமாய் ஒளிர்கிறது.
மணித்திரியாய்த் திரித்து ஏற்றி
மாடத்தில் வைக்கப்பட்ட
நெய்விளக்குப் போல
கமகமப்போடும்
கண் சிமிட்டாமலும்
ஒளிர்கிறது அமைதி.

பிரபஞ்சத்தின் ஆன்மாவை
ஆரோக்கியப்படுத்தும்
அமைதியே வருக!
வையகம் எங்கணும் நிறைக!

## இருட்டு எனக்குப் பிடிக்கும்
### - ச. தமிழ்ச்செல்வன்

யதார்த்த உலகைப் புரிந்து கொள்ள குழந்தைகளுக்காக எழுதப்பட்ட கட்டுரைகள். பகுத்தறிவு, நாத்திக விதைகள் பலமாகத் தூவப்பட்ட, பொதுவுடைமை வாதிகள் தங்கள் வழியில் குழந்தைகளை அழைத்துச் செல்ல உதவும் நூல்.

**வாசல் பதிப்பகம், 40/4/3, முதல் தெரு, வசந்த நகர், மதுரை-605003. விலை ரூ.30.**

## கோடம்பாக்கம் - வைகைச்செல்வன்

வாழ்க்கையை உற்றுப் பார்க்கிற, வாழ்வின் வரவுகளை, இன்ப துன்பங்களை மறுக்காமல் ஏற்கிற மனத்தைத் தருகிற கவிதைகளின் தொகுப்பு. கவிதைகளின் வார்ப்பு எளிமையாக, சில இடங்களில் சற்றுக் கடுமையாகவும் தெரிகின்றன.

**கவிதா பப்ளிகேஷன், 8. மாசிலாமணி தெரு, தி.நகர், சென்னை-17, விலை ரூ.40.**

## நம்பி...(க்)கை வைப்போம்
### - கே.எஸ். இளமதி

முழு நம்பிக்கை, மூட நம்பிக்கை, முற்றாத நம்பிக்கை என வாழ்வின் ஆதாரமாகிய நம்பிக்கைகளின் பலவித கோணங்களைக் கூறி தளர்வைப் போக்க முயல்கிற நூல். நம்பிக்கைகளின் ஆதாரங்களையும், அவற்றை வலுப்படுத்தும் வழிகளையும் பற்றிக் கூறி, விளக்கியிருந்தால் இன்னும் நலமாயிருக்கும்.

**நர்மதா பதிப்பகம், 10, நானா தெரு, தி.நகர், சென்னை-17, விலை. ரூ.45.**

## சாயங்காலம் - ராஜன் அரவிந்தன்
### (தொகுப்பு. ராம்பால் - அனயன்பாலா)

பெரும்பாலும் நெல்லைச் சீமையின் எளிய மக்களைக் கூறுபோடும் நம்பிக்கை, அவநம்பிக்கைகள், சோகம், ஏமாற்றங்கள் என யதார்த்த வாழ்க்கைகளின் வார்ப்புகள். வாழ்வின் நிதர்சன உண்மைக் கதைகளின் தொகுப்பு.

**மருதா, 3, கீழ்த்தளம், ரியல் எஜென்சி, 102, பாரதி சாலை, சென்னை-14, விலை ரூ.35**

## அனுமன் கண்ட சீதை
### - பேராசிரியர் கே. இராமமூர்த்தி

'சீதை தூய்மையானவள் என்பதே அபத்தம்; அவள் தூய்மையின் வடிவென்றே சொல்லல் வேண்டும்' என்ற சுவாமி விவேகானந்தரின் வார்த்தைப் பின்னணியின் ஆதாரத்தில் வால்மீகி, கம்பர், துளசிதாஸர் -ஆகியோரின் இராம காதையின் ஆராய்ச்சி நூல். இலக்கியச் சுவை தேடுவோர்க்குச் சுவையானது.

**கலைஞன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, திநகர், சென்னை-17 விலை ரூ.110.**

## ஊர் மண் - மேலாண்மை பொன்னுசாமி

வாழ்க்கையின் வண்ணங்களைச் சேகரித்து வார்த்தைகளில் எளிய காவியங்களாக வடிக்கும் வன்மை மிகுந்த தனித்துவம் துலங்கும் கதை. ஜாதி என்னும் அரக்கன் மனித நேயத்தைச் சிதைக்க முற்படுவதைத் தடுத்து, ஜாதி வெறியைக் கொன்று புதைக்கும் தீவிரமுயற்சி.

**கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, திநகர், சென்னை-17 விலை ரூ.70.**

## ஒரு தலம், ஒரு பாடல், ஒரு நயம்
### - சுகி. சிவம்

தீர்த்தச் சிறப்பு, மூர்த்திச் சிறப்பு, திருத்தலச்சிறப்பு என பல்வேறு தலங்களின் சிறப்புகளை, ஆழ்வார்கள், நாயன்மார்கள் முதல் கண்ணதாசன் வரை பாடிய இலக்கியச் சிறப்புகளுடன் சேர்த்து 'கல்கியில் வெளிவந்த தொடர். ஆன்மிகத் தேடலும், அருந் தமிழ் வேட்கையும் மிக்கவர்க்குப் பெரும் விருந்து.

**வானதி பதிப்பகம், 13. தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை-17, விலை ரூ.40**

**- விஷ்வக்**























# அக்ஷயத் திருதியை

## தங்க நகைகள் வாங்க சுபிட்ஷமான நாள்.

வற்றாத அக்ஷய பாத்திரம் போல வளமான அக்ஷயத் திருதியை நாளில் பயணங்கள் மேற்கொள்வது, புதிய வியாபாரம் தொடங்குவது, தங்கம், வைரம், பிளாட்டினம், வெள்ளி மற்றும் இதர பொருட்கள் வாங்குவது உங்கள் வாழ்வில் என்றும் சுபிட்ஷத்தை உண்டாக்கும்.

916
CARATAGE




BIS (ISI) CERTIFIED
HALLMARK JEWELER

HALLMARKED GOLD
GOLD YOU CAN TRUST

PLATINUM
RARE PURE TIMELESS

NAKSHATRA
DIAMOND JEWELLERY

Collection 9




2003 - PLATINUM
JUBILEE YEAR




ANS JEWELRY
ANS ஜுவல்லரி

SALEM

ANS ஜுவல்லரி
284 ஓமலூர் மெயின் ரோடு
ஸ்வர்ணபுரி, சேலம் 636004
Tel (0427) 2440703, 2440704
Fax (0427) 2442946

கும்பகோணம் ஜுவல்லர்ஸ்
184 கடை வீதி
சேலம் 636001
Tel (0427) 2264221, 2265180
Fax (0427) 2267516

World Gold Council

**Showrooms open on Sunday, May 4, 2003**

மே 4, 2003 ஞாயிறன்று கடை உண்டு

**தங்க நகைகள் வாங்கி லக்ஷ்மி கடாக்ஷம் பெறுங்கள்.**

வேலைநேரம்: காலை 9.00 முதல் இரவு 9.00 மணி வரை

# ரொம்ப கவலையா இருக்கு!

அந்தக் குளிர்சாதன சிறப்பங்காடியில், அலங்காரப் பொருள்கள் பக்கமாகச் சென்ற பார்வதி, தனக்கு முன்னால் சோப்பு, கிரீம், பற்பசை, என்று ஒவ்வொன்றாக எடுத்து பிளாஸ்டிக் கூடையில் வைத்துக் கொண்டே போகும் வைதேகியை, தற்செயலாகப் பார்த்தாள்.

"ஹாய் வைதேகி... என்ன சூப்பர் மார்க்கெட்டுக்கா..?"

"என்னடீ இது கேள்வி..? சூப்பர் மார்க்கெட்டுலதானே என்னைப் பார்க்கறே?"

"சும்மாதான். பின்னே எப்படி பேச்சை ஆரம்பிக்கறதாம்...?"

"அது சரி... நீ எப்ப ஊருக்குத் திரும்பினே? எங்கோ விஜயவாடா பக்கத்துல ஏதோ வொரு குக்கிராமத்துக்குப் போயிருக்கறதா கேள்



விப்பட்டேனே..."

"அதையேன் கேட்கறே. என் மாமியாருக்கு உடம்புக்கு முடியாமல் போயிடுச்சு. என்னோட நாத்தனாரோடு இருந்தா. என் நாத்தனார் வேலைக்குப் போறதால, கூட ஒத்தாசைக்கு நான் போயிருந்தேன். பக்கத்துல ஏதோவொரு குக்கிராமம். அந்த கிராமக் கோயில் அம்மனுக்கு ஏதோ வேண்டுதலாம். ஒரு வாரம் அந்தக் கிராமத்துல தங்கும்படியாயிடுச்சு. அடுத்து அங்கேயிங்கேன்னு ஒரே அலைச்சல். ஒரு வழியா எல்லாம் முடிஞ்சு நேத்துதான் வந்தேன். நான் மெட்ராஸ விட்டுப் போயி ஒன்னரை மாசத்துக்கு மேலாகி விட்டது. உன்கிட்டே நிறைய பேசணும்."

"அப்ப என் வீட்டுக்குப் போகலாம் வா' என்று வைதேகி அழைக்க,

தோழிகள் இருவரும் தங்களுக்குத் தேவை யான பொருட்களையெல்லாம் வாங்கிக் கொண்டு கிளம்பினார்கள்.

**ச**ரி... நீ என்ன சாப்பிடறே? காபியா... ஹார்லிக்ஸா..?

"எதுவும் வேணாம். சில்லுன்னு ஒரு தம்ளர் தண்ணி கொடு போதும்."

"சரி, ஏதோ பேசணும்னு சொன்னியே?"

சோபாவில், சாய்ந்து கொண்டாள் வைதேகி.

"ஆமாம், அந்த ஜானகியை ஆஸ்பத்திரியில் சேர்த்தாங்களே... என்னாச்சு. அவளுக்கு நினைவு திரும்பிச்சா. இல்லையா? அவ புருஷன் வந்து அவளைப் பார்த்தானா?"

**ஆமாம். மனசே கேட்கலை**



"ஜானகியா. நீ யாரைப் பத்திக் கேட்கறே." என்று வைதேகி திருப்பிக் கேட்டதும், பார்வதி, அவளிடம் ஜானகியைப் பற்றிச் சொன்னாள்.

"ஓ, அவளா? நான் என்னமோ ஏதோன்னு பயந்துட்டேன். அந்த ஜானகிக்கு நினைவு திரும்பிடுச்சு. ஆனா அவ புருஷன் வந்து அவளைப் பார்க்கவே யில்லை. உனக்கேதான் தெரியுமே. அவன் அந்த மோகனாவோடுதானே இருக்கான்."

"அடப்பாவி. ஜானகிக்கு உடம்புக்கு முடியாமப் போனது அவனுக்குத் தெரியும் தானே?"

"நல்லா தெரியும்தான். அவனோட அம்மாவே நேர்ல போய் சொல்லியிருக்காளே. அதுக்கு அவன், 'ஜானகியா... யாரது? உன் பொண்ணா? நான் மட்டும் தானே உனக்கு ஒரே பிள்ளை... பிறகு எப்படி...?' என்று கேலி பேசியிருக்கான்."

"ஆமாண்டா. அவ என் பொண்ணுதான். என் பிள்ளை செத்துப் போயிட்டான் போ..!" என்று சொல்லிவிட்டு வந்துட்டா. அவதான் இப்ப ஆஸ்பத்திரியில் ஜானகியைப் பார்த்துக்கறா!"

"பாவம்டீ ஜானகி. நம்ம வயசுதான் அவளுக்கும். ஆனா பாரு, எவ்வளவு கஷ்டம்? சரி விடு. அந்த அரவிந்துக்கு வேலை கிடைச்சுதா? அவன் தங்கை பத்மாவின் கல்யாணம் நல்லபடியா நடந்ததா?"

"அரவிந்துக்கு அவனோட ஃப்ரெண்ட் சேகர் மூலம் ஒரு ஏற்றுமதி கம்பெனியில வேலை கிடைச்சுது. ஆனா போன வாரம் நடந்து முடிந்திருக்க வேண்டிய பத்மாவின் கல்யாணம் நின்னு போச்சு!"

க. ஒப்பிலியப்பன்

"அய்யய்யோ. நீ என்னடி சொல்றே? கல்யாணம் நின்னுப் போச்சா? ஏற்கெனவே பெண் பார்த்து நிச்சயம் செய்த வரன் தானே?"

"நிச்சயம் செய்த இடம்தான். யார் இல்லேன்னது? கல்யாணத்து இரண்டு நாள் முன்பு, மாப்பிள்ளைப் பையன் முரளி ஒரு ஃபோர்ஜரி கேசுல மாட்டிக்கிட்டு ஜெயிலுக்குப் போயிட்டான். அதனாலே கல்யாணம் நடக்கலே.."

"பாவம் பத்மா. அந்தப் பையன் முரளியப் பார்த்தா அப்படித் தெரியலையே. நல்லா படிச்சவன்தானே அவன்? அவன் போய் ஏன் இப்படி?"

"பத்மாவின் எதிர்வீட்டுல ஒரு பையன் இருக்கானே. அதான், மோட்டார் பைக்கில் பத்மா பின்னாடி சுத்துவானே. அவன்தான் முரளியை இப்படி சிக்கல்ல மாட்டி விட்டிருக்கணும்னு நான் நினைக்கிறேன்.." என்று.

"என்னமோ போ. யாருக்குமே நேரம் சரியில்லை போலிருக்கு. சரி, மரகதம்மாளைப் பற்றி ஏதாச்சும் தெரிஞ்சதா? எல்லா பேப்பர்களிலும் விளம்பரம் கொடுத்தாளே அந்த உமா."

ஒரு கணம் யோசித்த வைதேகி, "சரி பார்வதி... போன வாரம் முழுவதும் நான் என் மச்சினர் கல்யாணத்துல பிசி... அதனால எனக்கு அடுத்து நடந்ததுன்னு தெரியலே. ஆனா அந்த அம்மாவைப் பத்தி நேத்துவரை ஒரு தகவலும் தெரியலே. அவளோட பையன் சுந்தரம் அந்த விளம்பரத்தைப் பார்த்திருக்கான். அவனும் இப்ப மரகதத்தம்மாளைத் தேடிக்கிட்டிருக்கான்."

"அட ராமா.. சொத்துக்காக பெத்த தாயையே கொல்ல நினைச்சவனாச்சே அவன். சரி, சாமிநாதன் எப்படியிருக்கார்?"

"சாமிநாதன் இல்லேடி... ராமநாதன்.. மரகதத்தம்மா புருஷன் பேர்தான் சாமிநாதன். குழப்பிக்காதே."

"ஓ. ஸாரிடீ. ராமநாதன் எப்படியிருக்கார்?"

"அவர் போன வாரமே போய்ச் சேர்ந்துட்டார். அவர்தான் உடம்புக்கு முடியாம ரொம்ப நாள் படுத்த படுக்கையா இருந்தாரே."

"தெரியும்தான். அது சரி. டெல்லியிலே இருக்கிற அவரோட பேரனையாவது அவர் பார்த்தாரா?"

பார்க்கலே. ஆனா பேரன் கையாலே கொள்ளிதான் அவருக்குக் கிடைச்சுது. அதோட பேரன் பேர்ல எழுதின உயிலும் உரியவனிடம் போய்ச் சேர்ந்தது."

"அப்பாடா. ராமனாதனோட ஆத்மா சாந்தியடையும்."

"ஆனா, இதுலே ஒரு புது சிக்கல்." என் தாத்தாவுக்கு நான் எதுவுமே செய்யலை, இந்தக் கொள்ளி போட்டதைத் தவிர. அதனால இந்த சொத்துக்கள் முழுவதையும் ஏதாவது அறக்கட்டளைக்கு மாத்தி எழுதிடப் போறேன்"னு அவன் சொல்லிட்டான்."

"நல்ல காரியம்தான்."

"நமக்கு இது நல்லதாப்படுது. ராமனாதனின் தம்பிக்கு இது எரிச்சலைத் தருதே. உயில்படி எல்லாமே அறக்கட்டளைக்குப் போனா, அவங்க குல தெய்வம் வக்கிர காளியம்மன் கோயில் உரிமையும் போயிடுமாம். அந்த அம்மன் கோயிலுக்கு ஏராளமான சொத்து. இது ராமனாதன் தம்பியோட பொறுப்பில்தான் இருக்கு. அதனால உயிலை அறக்கட்டளை பெயரில் எழுத விடாமல் தடுக்க முயற்சிகள் நடக்குது."

"சரிதான் போ. இந்த வழக்கு இலேசுல முடியாது போலிருக்கே. ஓகே வைதேகி. நான் கிளம்பறேன். மணி இப்ப பத்தரை தானே. வீட்டுக்குப் போய் சாப்பிட்டு முடிக்க மணி பதினொன்னாகும்." என்ற பார்வதி, தான் ஊரில்லாத சமயம் நடந்த 'அந்திவேளை', 'வெளிச்சம்', 'அம்மா எங்கே?' 'உயிரா, உயிலா?' மெகா சீரியல்களின் கதைகளை வைதேகியிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட திருப்தியில் வேகமாகப் புறப்பட்டாள்.

பதினோரு மணிக்கு 'அந்தி வேளை' சீரியலில் ஜானகிக்கு அடுத்து என்ன ஆகப் போகிறது என்பதைக் காணும் ஆவலில் வைதேகியும் பரபரப்பானாள். ○



"கந்து வட்டிக்காரர்கள் மீதெல்லாம் கடும் நடவடிக்கை எடுக்கச் சொல்லி உத்தரவு வந்திருக்கு கமலா!"

"இந்த மிரட்டலெல்லாம் என்னிடம் வேணாம்! நீங்க கேட்ட ஆயிரம் ரூபாய்க்கு தொள்ளாயிரம் ரூபாய்தான் தருவேன். தினம் நூறு ரூபாயா பத்து நாளைக்குக் கட்டணும்... சம்மதமா?"

- உ. ராஜாஜி



ஹலோ! 'நாமும் மற்றவரைப் போல கார் மற்றும் டூ-வீலர் ஓட்ட வேண்டும், எங்கு கற்பது? யாரிடம் கேட்பது? காஸ்ட்லியாக இருக்குமோ?' என்ற எண்ணம் நம்மிடையே பலருக்கு இருப்பது உண்மைதானே? ஏன் இந்த கூச்சம், தயக்கம்? உங்களுக்காகவே, ஆண், பெண் இருபாலருக்கும் தனித்தனியாக கார் மற்றும் ஸ்கூட்டி, கைனடிக் ஹோண்டா ஆகியவற்றில் டிரைவிங் கற்றுக் கொள்ள மேலும் தாமதிக் காமல் உடனே எங்களை அணுகவும். கோடை விடுமுறை யில் ஒரு பயனுள்ள பயிற்சி உங்களுக்காகவே!

**ஹலோ! ஒரு நிமிடம்!**
**நீங்களும் டிரைவிங்**
**கற்கலாமே!**



டீன்ஏஜ் முதல் 50 வயது வரை. **சாண்ட்ரோ, மாருதி,** ஸ்கூட்டி, கைனடிக் ஹோண்டா இவைகள் பெண்களுக்கு மட்டுமல்ல. ஆண்களுக்கும் மிக எளிதாக விரைவில் பயிற்றுவிக்கப்படு கிறது.

இதோ வள்ளி டிரைவிங் ஸ்கூல் உரிமையாளர் திருமதி வள்ளி அவர்களுடன் ஒரு சிறு உரையாடல்:

**நீங்கள் விரைவாக எளிதாகப் பாதுகாப்பாக வாகனங்களை இயக்க கற்றுக் கொடுப்பது எப்படி?**

''முதல் நாள் அவர்களுக்கு மனப்பயிற்சி கொடுப்போம். அதன் மூலம் தன்னம்பிக்கை, உடல் வலு, புரிந்து கொள்ளும் தன்மை அதிகப்படும். பிறகு அவர்கள் இயக்க விரும்பும் வாகனம் பற்றி விளக்குகிறோம். அடுத்ததுதான் அவர்களுக்கு வாகனம் இயக்கக் கற்றுத் தருகிறோம். அவர்களின் மனதைப் பக்குவப்படுத்தி விடுவதால் எளிதாகப் புரிந்து சில நாட்களிலேயே கற்றுக் கொள்கிறார்கள்'' என்கிறார்கள் திருமதி. வள்ளியும் அவரது கணவர் திரு. வள்ளியப்பனும்.

கணவன் – மனைவி இருவரும் ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? கார் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? நீங்கள் உடனே தயங்காமல் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி

# வள்ளி டிரைவிங் ஸ்கூல்

(அரசு அங்கீகாரம் பெற்றது)



புது எண். 13 (ப.எண்.7) தண்டபாணி தெரு,
தி. நகர், சென்னை - 17.
(பனகல் பார்க் அருகில்,வெங்கட்நாராயணா ரோடு எதிரில்; வேளாங்கன்னி பள்ளி அருகில்)
Ph. Off : 24364815, 52126780 Res : 24842466
செல் : 9840043648, 31023273

அலுவலக நேரம் :
காலை 6.00 மணி முதல் மாலை 8.00 மணி

குறிப்பு : பெண்களுக்குக் கற்றுத்தர பெண் பயிற்சியாளர்கள் உண்டு.

தட்டினேன் திறந்தது

# மஹேஸ்வரன்!

போராடினால் வெற்றி நிச்சயம் என்று நினைப்பவர்களில் ஒருவராக, 'ரோஹிணி குளோபல்' நிர்வாக இயக்குநர் மஹேஸ்வரனைக் குறிப்பிடலாம்.

மலேசியாவை விட்டு இளம் வயதில் இந்தியா வந்து உழைப்பை மட்டுமே மூலதனமாகக் கொண்டு, சிறியதாகத் தொடங்கி மூலிகை மருந்துகள் தயாரிப்பில் இன்று சாதனை புரிந்திருக்கிறார் மஹேஸ்வரன்.

மலேசியாவில் தமிழர்கள் பலரும் தோட்டங்கள் வாங்க, அமரர் துன் சம்பந்தன் தேசிய நில நிதிக் கூட்டுறவுச் சங்கத்தைத் தொடங்கியபோது, 'பத்துப் பத்தாய்ச் சேருங்கள். பகிர்ந்துண்டு வாழுங்கள்' என்று சிறு வயதிலேயே பிரசாரம் செய்தவர்.

"சின்னஞ்சிறு வயது முதலே எனக்குச் சேவை மனப்பான்மை இருந்தது. என் தந்தை எல்லப்பனார், தாய் பார்வதி அம்மாளிடமிருந்து நான் இதைக் கற்றேன்" என்கிறார் மஹேஸ்வரன்.

மொத்தமாக மளிகைச் சாமான்கள் வாங்கி, வருடம் முழுக்கப் பயன்படுத்தும் போது, அதில் கிடைக்கும் சிறிய ஆதாயத்தைக் கூட, பள்ளிச் சிறுவர்களுக்குச் சீருடை வாங்கவும், ஃபீஸ் கட்டவும் அம்மா நினைத்த போது, அவரோடு சேர்ந்து உழைத்தார்.

"அப்போதுதான் சேவையுடன் தொழில் என்ற எண்ணம் எனக்குள் உதித்தது. பள்ளிப் படிப்பு முடிந்து, மருத்துவம் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்துடன் இந்தியா வந்தேன். அப்பாவுக்கு வியாபாரம் மந்தமாயிற்று. மருத்துவம் படிக்க வசதியில்லை என்று ஆனதும், மைசூர் போய் பி.காம் படித்தேன். மூன்று பேர் சேர்ந்து ஓர் அறை எடுத்துத் தங்கினோம். நான்தான் 'மெஸ்' கவனித்துக் கொண்டேன். அப்போது சிக்கனத்தைக் கற்றுக் கொண்டேன்."



"உன் மத்தியில் உள்ள ஏழைகள்தான் என் நம்பிக்கை' என்ற வாசகமும், 'இல்லானை இல்லாளும் வேண்டாள்' என்று தமிழாசிரியர் சொல்லிக் கொடுத்த வாக்கியமும் மனசில் ஆழமாகப் பதிந்திருந்தன.

"பிறருக்கு உதவும் வேலைதான் தேடுவது என்ற விதை மனசில் விதைக்கப்பட்டிருந்தது. மறுபடி மலேசியா போனேன். தேசிய நில நிதிச் சங்கத்தில் வேலைக்குச் சேர்ந்து மூன்றே மாதங்களில் மானேஜராகப் பதவி உயர்வு பெற்றேன். ஒவ்வொரு வீட்டிலும் எல்லா வசதிகளும் இருக்க வேண்டும் என்று தவணை திட்டத்தில் ஃபர்னிச்சர் வியாபாரம் தொடங்கினேன். அது வெற்றி அடைந்தது. ஆனாலும் எனக்கு மருத்துவம் படிக்க வேண்டும் என்ற ஆசை உள்ளூர இருந்து வந்தது. என் திருமணத்துக்குப் பிறகு மனைவி குழந்தையுடன் 1979ல் மறுபடி இந்தியா வந்தேன். பீஹாருக்குப் போய் ஆயுர்வேதக் கல்லூரியில் சேர்ந்து பயின்றேன். திருப்தி ஏற்படவில்லை. தமிழ் மருத்துவம் என்று வழங்கப்படும் சித்த மருத்துவம் படிக்க ஆர்வம் மிகுந்தது. அந்தச் சமயத்தில் கணபதி அடிகளாரின் மாணாக்கனாக இருந்து ஒரு சில ஆண்டுகள்

அவரிடம் படித்தேன். டாக்டர் ஆனந்த குமார், டாக்டர் ஜெயப்பிரகாஷ், நாராயண் ஆகியவர்கள் ஊக்கம் அளித்தார்கள். மீண்டும் மலேசியா போய் மருத்துவம் ஆரம்பித்தபோது, நிறைய நோய்கள் மருந்துகளால், சுற்றுப் புறச் சூழல்களால் வருவதாக உணர்ந்தேன். ஆபத்தான ரசாயன பாதிப்பு பற்றி பிரசாரம் செய்ய Herbs to Eradicate Chemical Hazards in Organs (HECHO) என்ற இயக்கத்தைத் தொடங்கினேன்!"



• குழந்தைகளுடன் மஹேஷ்வரன்



• மஹேஷ்வரன்

இதை ஆரம்பித்த போது சிலர் "இது நடக்கக் கூடிய காரியமா?" என்று நகைத் தார்களாம். "மாற்று மருந்து சொல்லுங்கள்" என்றார் களாம்.

"மூலிகை ஜூஸ், ஃப்ளோரைடு பாதிப்பைத் தவிர்க்க பல்பொடி, முக்கியமான எண்ணெய்கள் கலந்த டால்கம் பவுடர் என்று தயாரிக்க ஆரம்பித்தேன். முதல் இரண்டு வருடங்கள் போராட்டம்தான். ஒரே கிண்டல். "இந்த நவீன யுகத்தில் யார் இதை எல்லாம் உபயோகிப்பார்கள்?" என்று கேட்டார்கள். ஆனால் பலவித மூலிகை ஜூஸ்கள் மூலம் பலனடைந்தவர்கள் பேச ஆரம்பித்தார்கள். பிறகு காபிக்குப் பதிலாக மூல் கஃபே, தாமரையை ஆதாரமாகக் கொண்டு 'ஆரோக்' பானம் தயாரித்தேன். இவை இரத்த ஓட்டத்தைச் சுத்தம் செய்யவும், இதயத்துக்குப் பலம் தரவும் உதவுகின்றன. இந்தத் தயாரிப்புகளுக்கு நல்ல வரவேற்பு கிடைத்தது" என்கிறார் மஹேஷ்வரன்.

இப்படிக் கிடைத்த வெற்றிதான், ரோகிணி பொருளாதாரத் திட்டம் ஆரம்பிக்கத் தூண்டியது. இந்த மூலிகைத் தயாரிப்புகளை விற்பனை செய்ய, புதிய நேரடி விற்பனைத் திட்டம் உருவாக்கினார். கிட்டத்தட்ட முப்பதாயிரம் பேர் இதனால் பயன் அடைந்தார்கள்.

அந்தச் சமயத்தில்தான் கி.ஆ.பெ. விசுவநாதம், கணபதி அடிகளார், ஆனந்தகுமார் மூவரும் மலேசியாவில் முதல் அகில உலக சித்த மாநாட்டுக்கு வந்திருந்தார்கள். மாநாட்டில் இவர் பேசிய பேச்சும், சித்த மருந்துகளை பாட்டில்களில் அழகாக 'பாக்' செய்து கண்காட்சியாக வைத்திருந்தும் கி.ஆ.பெ. அவர்களை மிகவும் கவர்ந்தன. "சித்தர் உடை போல் அல்லாமல் சித்த மருந்துகளை கோட்டு, சூட்டு போட்ட மாதிரி செய்திருக்கிறார்" என்று பாராட்டினார்.

விற்பனையாளர்களை நியமித்ததோடு நின்று விடாமல், அவர்களுக்குத் தன் முனைப்புப் பயிற்சிகள் கொடுத்து ஊக்கப்படுத்தினார் மஹேஷ்வரன். பிஸினஸில் மூழ்கிவிட்டால், குடும்பத்தைக் கவனிக்காமல் விட்டு விடக் கூடாது என்பதற்காக, 'குடும்பம், ஒரு நலன் அபிவிருத்திக் கோட்டை' என்ற பயிற்சியையும் கொடுத்திருக்கிறார்.

'ருமி ஹெர்பல்ஸ்' ஆரம்பித்தபோது, நானூறு உறுப்பினர்களே சேர்ந்தார்களாம். இன்று முப்பதாயிரம் உறுப்பினர்கள்!

'இரசாயன ஆபத்திலிருந்து உலகத்



# ரஜினியின் வாரிசு?!

"தம்' படத்தில் ரஜினியின் ஸ்டைல், மேனரிஸம், அத்தனையையும் அப்படியே ஈயடித்த மாதிரி காப்பியடிச்சிருக்கீங்களே" என்று சிலம்பரசனைக் கேட்டால், ரஜினி மாதிரி முடியை ஸ்டைலாக சிலுப்பிக் கொண்டார்.

"சின்ன வயசுலே அவர் மடியிலே உட்கார்ந்து விளையாடியிருக்கேன். அப்போவே அவர் ஸ்டைல் எனக்குள்ளே கல்வெட்டு மாதிரி பதிஞ்சுப் போச்சு. இன்னும் பத்து தலைமுறைக்குத் தாங்கும் அவர் பாணியின் வீச்சு. அதனாலே அவரோட வழிதான் என் வழி. இதுக்குப் போய் ஏன் என் மேலே போடுறீங்க வீண் பழி" என்றார். "அப்போ நீங்கதான் ரஜினியின் கலைவாரிசா?" என்றால் "அவர் மலை! நான் அடிவாரம். அவர் மாதிரி ஆகுறதுக்கு நகரணும் காலத்தின் கடியாரம்!"

– அய்யாசாமி ஆளை விடுங்க!

- ஸ்ரீ

தைக் காப்பது' என்ற இலட்சியத்தோடு, பினாங்கிலிருந்து சிங்கப்பூர்வரை எழுநூறு கி.மீ மோட்டார் சைக்கிளிலேயே, பெட்டியைத் தூக்கிக் கொண்டு பயணம் செய்திருக்கிறார். இன்று ஆயிரம் இளைஞர்களுக்கு மேல் ஹெர்பல் விற்பனையில் குறைந்த பட்சம் ஐயாயிரம் ரூபாய் சம்பாதிக்கும் அளவுக்குச் சாதனை படைத்திருக்கிறார். "நான்கே ஆண்டுகளில் ஒரு லட்சம் பேர் இப்படிச் சம்பாதிக்கும்படி உருவாக்கப்படுவார்கள்!" என்கிறார் மஹேஷ்வரன்.

இவரது இலட்சியம் நிறைவேறத் தொடங்கியதில் இவருக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி. வறுமைக் கோட்டிலிருந்து மக்களை மேலே கொண்டு வருவது இவரது நோக்கமாக இருந்திருக்கிறது. "இதற்கெல்லாம் என்னுடன் உழைத்தவர் டாக்டர் திருஞானசம்பந்தம். இப்போது ஒன்பது விஞ்ஞானிகள் என்னுடன் ஆராய்ச்சிப் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள்!" என்கிறார். சமீபத்திய வறட்சி இவரை மனத்தளவில் வெகுவாகப் பாதித்திருக்கிறது. "வறட்சி அரசின் பிரச்னை அல்ல. அது மக்களின் பிரச்னை. காய்ந்து போன நிலப்பகுதிகளில்கூட 15 வித மூலிகைகள் விளைவிக்க முடியும்" என்று கூறுகிறார்.

மஹேஸ்வரனுக்கு ஆல்பர்ட் ஷ்வைட்ஸர் விருது கிடைத்திருக்கிறது. மல்டிபின் ஸ்க்ளரோஸிஸ் நோய்க்கு மருந்து கண்டுபிடித்ததற்காக, சீனாவில் 'யெல்லோ எம்பரர்' விருது கொடுத்திருக்கிறார்கள். சீனா நாட்டில் இது மிகப் பெரிய கௌரவம். மாற்று மருத்துவம், அக்குபஞ்சர் போன்றவற்றில் சிறந்தவரை, நூறாண்டுக்கு ஒருமுறை தேர்ந்தெடுத்துத் தரப்படும், 'நூற்றாண்டின் மா மருத்துவர்' பட்டம் அது! இவர் உருவாக்கிய 'ஆரோக்' தங்கப் பதக்கம் பெற்றிருக்கிறது. வில்வத்தால் தயாரித்த ஜூஸுக்கு, மலேசிய அரசின் பரிசு கிடைத்திருக்கிறது.

"உங்கள் லட்சியம் தெளிவாக இருக்க வேண்டும். வாய்ப்புகள் நம்மை வந்து எதிர்கொள்ளும். நமக்குத் தடைகள் வேறு யாருமே இல்லை" என்கிறார் மஹேஷ்வரன்.

'மகிழ்ச்சியான, ஆரோக்கியமான மனிதகுலம்' என்பதே இவரது குறிக்கோள்.

– எஸ்.வி.என்





ஓம்

ஸ்ரீ குருப்யோ நம:

சென்னை மாநகரில் மாபெரும்

## "ஞானவேள்வி"

நிகழ்த்துபவர்:

## ஸ்ரீ ஸ்வாமீ ஓங்காராநந்தர் அவர்கள்

ஆசார்யர், ஸ்ரீ ஸ்வாமீ சித்பவாநந்த ஆச்ரமம், வேதபுரீ, தேனி.

இடம் : ஆஸ்திக ஸமாஜம், வீனஸ் காலனி, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை.
நாள் : 01-05-2003 வியாழன் முதல் 08-05-2003 வியாழன் வரை
நேரம் : மாலை 6.30 மணி முதல் 8.00 மணி வரை

பொருள்: **குறளும் கீதையும்**

தலைமை ஏற்றுத் துவக்கி வைப்பவர்

**திரு. ஸ்ரீ M. முரளீ** அவர்கள், ஸ்ரீ க்ருஷ்ணா ஸ்வீட்ஸ், சென்னை.

குறிப்பு : 02-05-2003 முதல் 08-05-2003 வரை காலை 6.30 மணி முதல் 7.30 மணி வரை **"திருமந்திரம்"** எனும் பொருளில் அருளுரை நிகழும்.

அனைவரும் வருக! அனுமதி இலவசம்! அருளின்பம் பெறுக!

சென்னையில் தொடர்புகொள்ளவேண்டிய தொலைபேசி எண்கள் :

**24992506 & 24743962**

இங்ஙனம்
ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸேவா ஸமிதி &
வேதாந்த மாஸ்த்ர ப்ரசார ட்ரஸ்ட்
வேதபுரீ, தேனி. ☎ 04546-253908

---

**PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA**

PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA

*Aum Sairam*

# Prabhala Marriage Caterers

**Estd : 1988**

**9, K.V. Colony, 1st Street, (Near Ayodya Mandapam)**
**West Mambalam, Chennai - 600 033. Ph: 31000590, 24890044,**

E-mail:prabhala@eth.net

*We arrange for you*

*Nadaswaram - Flowers/Garlands-Catering - Seer Items (Sweets & Savouries) - Muhurtha Thambulam - Silk Mat - Kasi Yatra Items - Angamani Seer- Vaidheega Samangal - "Morning Mariyadhai " items*

**N.B:** We are the one and the only Caterer in whole of Chennai who use only Pure Ghee in all our preparations, avoiding Dalda totally.

**We provide the seer items from the famous Grand Sweets & Snacks. Adyar**

PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA

PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA PRABHALA



**‘வீட்டிலிருந்தே சம்பாதிக்க ஏதாவது யோசனை கைவசம் ஸ்டாக் இருந்தா, இப்படித் தள்ளிவிடுங்க’ என்று வாசகர்களிடம் கேட்டது எங்களுக்கே வம்பாய்ப் போச்சு! வந்து குவிந்த யோசனைகளில் மூழ்கி முத்தெடுத்தெடுப்பதற்குள் மூச்சடைத்துப் போனோம். இதோ சில ஹைர ஹைர ஐடியாஸ்!**





அநேகமாக நடுத்தரக் குடும்பங்களில் எல்லார் வீட்டிலும் கம்ப்யூட்டர் வந்துவிட்டது. இதனுடன் இன்டர்நெட் இணைப்பும் இருந்தால் அடிப்படை கம்ப்யூட்டர் விஷயங்களைச் சொல்லித் தந்து சம்பாதிக்கலாம்.

**- கிருஷ்ணராஜகோபால், சென்னை**

நாங்கள் ஏலகிரி மலையடிவாரத்தில் வசிப்பவர்கள். ஆலம் விழுது, வேலம் பட்டையுடன் பல்லுக்கு வலு சேர்க்கும் கடுக்காய், ஜாதிக்காய், மாசிக்காய், சுக்கு, இலவங்கம், புதினா, துளசி, அருகம்புல், மாவிலை, கொய்யா இலை, நாயுருவி போன்ற பல மூலிகைகளை குறிப்பிட்ட விகிதத்தில் கலந்து மூலிகைப் பற்பொடி தயார் செய்து 15 கிராம் ரூ.2 என விற்பனை செய்கிறேன். கணிசமான லாபம் வருகிறது.

**- க. கண்ணகி, மிட்டூர்**

ஊதுபத்தி தயாரிக்கும் முறைகளைக் கற்றுக் கொண்டு அதற்கான மூலப் பொருட்களை மொத்தமாக வாங்கி வந்து தருந்த





முறையில் தயாரித்து அழகாக 'பேக்' செய்து விற்கலாம்.

- லெ.நா.சிவகுமார், சென்னை

'டெஸ்பாட்ச் கிளார்க்' வைத்துக் கொள்ளும் அளவுக்கு வசதியும் நேரமும் இல்லாத சிறிய கம்பெனிகள் நிறைய உள்ளன. அத்தகைய கம்பெனிகளிட மிருந்து ஒட்டு மொத்தமாக தபால்களை வாங்கி வந்து 'டெஸ்பேட்ச்' செய்யலாம். கம்பெனிகளுக்கு இது பேருதவியாக இருக்கும். நிச்சயமாக உரிய சன்மானம் தருவார்கள், நம் பணி கச்சிதமாக இருந்தால்...!

- லெ.நா.சிவகுமார், சென்னை




வீட்டில் லவ் பேர்ட்ஸ், புறா, நாய்க் குட்டிகள் வளர்த்து விற்பனை செய்வதன் மூலம் கணிசமான வருவாய் பெறலாம்.

- தேவி, பாபநாசம்

கல்யாண சீஸனில் கொப்பரையில் டிஸைன், சர்க்கரை பொம்மை, காசி யாத்திரை விசிறி, பருப்புத் தேங்காய், அலங்கார ஆரத்தி தட்டுகள் செய்து சம்பாதிக்கலாம்.

- எஸ்.மீனா, ஸ்ரீரங்கம்

# நாலு காசு பார்க்கலாமா?

வீட்டிலிருந்தே அக்கம் பக்கத்தவருக்கு ஆங்கிலம், பேச எழுதக் கற்றுக் கொடுத்து, பாக்கெட் மணி பார்க்கலாம்.

- மும்பை, மாலதி மஹாதேவன்

வீட்டுத் தோட்டத்தில் கருவேப்பிலை, முருங்கை மரம் வைத்து சிறு வியாபாரிகளுக்கு விற்று சம்பாதிக்கலாம்.

- அம்புஜா நாராயண், பெங்களூர்

அருகிலுள்ள வீடுகளுக்கும், அலுவலகங்களுக்கும் சிற்றுண்டி, மதிய உணவு, டீ, காபி தயாரித்துக் கொடுத்தால் நாலு காசு பார்க்கலாம்.

- மு.தா. பிரபாகரன், எழும்பூர்

தண்ணீர் வசதியிருந்தால் நர்சரி வைத்து சம்பாதிக்கலாம். இடம் விசாலமாக இருந்தால் குழந்தைகள் காப்பகம் நடத்தலாம்.

- எஸ்.தனலட்சுமி, பெங்களூர்

'கம் அக்னேஷியா' என்ற கருவக் கோந்து வாங்கி, தூளாக்கி சலித்து தண்ணீரில் கலக்கவும். கிளிசரைன், அசிட்டிக் ஆஸிட், அலுமினியம் சல்பேட் சேர்த்து நன்றாகக் குலுக்கி ஒரு வாரம் வைக்கவும். பின்னர் பாட்டில்களில் அடைத்து, தரமான கோந்து விற்பனை செய்யலாம்.

**- எஸ்.நல்லதம்பி, பாச்சூர்**

நாளிதழ், பத்திரிகைகளில் இடம் பெறும் விளம்பரங்களை வெட்டி, எடுத்து, ரகப் படுத்தி, வேலை வாய்ப்பு, டெண்டர், திரு மணத் தகவல் என தனித்தனி கோப்புகள் அமைத்து வைக்கவும். கட்டணமாகச் சிறிது தொகையைப் பெற்றுக் கொண்டு, தேவை யான விபரங்கள் தந்து உதவலாம்.

**- எஸ்.ரங்கராஜன்,**
**திருச்சி - 6**

வெளிநாட்டுப் பொருட்களை வர வழைத்து விற்கலாம்.

**- ஜி. சீதா, சென்னை - 20**

பழைய பேப்பரை கிலோ கணக்கில் வாங்கி, மைதா பசையை உபயோகப்படுத்தி, காகிதக் கவர் தயாரித்து விற்கலாம்.

**- எஸ். கிருபாநிதி,**
**பம்மல்**

'ஜெல்' 'அபாகஸ்' போன்ற நிறுவனங் களின் பிரான்சைஸ் எடுத்துக் கொண்டு, குழந்தைகளை புத்திக் கூர்மையுள்ள வர்களாக்கி பணம் ஈட்டலாமே!

**- சத்யபாமாகுமார்,**
**வில்லிவாக்கம்**

ஓவியத் திறமை உள்ளவர்கள் ஸ்டெயின் கிளாஸ் பெயிண்டிங்'கை முறையாகக் கற்றுக் கொண்டு, ஷோரூம்களையும், அலுவலக, வீடுகளையும் அலங்காரம் செய்து லாபம் பார்க்கலாம்.

**- உஷா ரவீந்திரகுமார்,**
**கரூர்**

தரமான சணல் துணியை வாங்கி, டிஸைன் பிரிண்ட் செய்து, அழகான கைப்பைகளாகத் தைத்து விற்கலாம்.

**- எஸ். உமாராஜ்,**
**சென்னை**

# HOME SWEET HOME

(For Parents and grandparents)

Dedicated to Elders who needs love, care and medical attention.

Dear parents and grand parents! Are you feeling lonely and abondened? Don't worry! There is a Home for you. Run by NRI's. A sister unit of California Old Age Home. We provide :

1. A Room in a big clean and Airy house - well ventilated with lot of leg space and greeny around on very nearby city.
2. Vegetarian Nutritious, hygienic food prepared and served by brahmin cook.
3. Special diets for diabetics and other patients could be prepared on request.
4. Hot and cold water available in the bathrooms.
5. Common Entertainment including Indoor play materials.
6. Doctor on call and other medical emergency services provided.
7. Personal Assistant provided
8. Limited Seats only. First come First serve.
9. Rs.2500 Only and 2 months advance.

No Donations. We accept short stay also.

(Ms. Jayanthi) 98400 62695

**HOME SWEET HOME**

(Ms. S. Sathya) 98401 88425

No.4, Mullai Nagar, West Tambaram, Ch-45. Ph:55871420

காவாய் கனகத்திரளே போற்றி! உ சிவமயம் கயிலை மலையானே போற்றி போற்றி!!



# திருக்கயிலாயம் மானசரோவர் புனித யாத்திரை

**ஆன்மீக அன்பர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு!!**



காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை பரந்த பாரததேசத்தில் இறைவன் திருக்கோயில் கொண்டு அருள்பாலிக்கின்றார். மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாய் தொடங்கினோர்க்கு ஓர் வார்த்தை சொல சற்குருவும் வாய்க்கும் பராபரமே! என்பார் தாயுமானவர். எனவே பக்தர்கள் தென்னகத்திலிருந்து வடக்கும் வடக்கிலிருந்து தென்னகமும் யாத்திரை செல்வது மிக முக்கியம்.

இந்திய திருநாட்டைத் தவிர நமது நாயன்மார்களால் போற்றப் பெற்றதும், பாடல் பெற்றதும், மாற்று சமயத்தாராலும் வணங்கப் பெற்றதுமான திருக்கயிலாயம்-மானசரோவர் யாத்திரையை பெங்களூரில் இருந்து (நேபாள்) காட்மாண்ட் வரையில் விமானம் மூலமாகவும், காட்மாண்டுவில் இருந்து திருக்கயிலாயம் வரையிலும் (Tayota) டயோட்டா கார் மூலமாகவும் தரிசித்து அழைத்து வர ஏற்பாடு செய்துள்ளோம்.

இந்த யாத்திரைக்கு பாஸ்போர்ட் மிகவும் அவசியம். இந்த யாத்திரை கடல் மட்டத்திலிருந்து 22,000 அடிக்கு மேலாக இருப்பதால் உடல்நலத்திற்கு மருத்துவ சான்றிதழ் மிக அவசியம். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அருளுக்கு பாத்திரமான பல முறை திருக்கயிலாய மானசரோவர் யாத்திரை சென்ற அனுபவமுள்ள Eco Trek, Nepal Pvt. Ltd., நிறுவனத்தின் உரிமையாளர் Bimal Naharki அவர்கள் தலைமையில் திருக்கயிலாய மானசரோவர் யாத்திரை நடைபெறும் என்பதை தெரியப்படுத்துகிறோம்.

இந்த யாத்திரை 2003 ஜூலை முதல் வாரத்திலும், ஆகஸ்ட் முதல் வாரத்திலும் புறப்படவிருக்கின்றது என்பதை பெருமகிழ்ச்சியுடன் தெரியப்படுத்துகின்றோம்.

**விமான கட்டணம் உட்பட ரூ 72,000/-**

பெங்களூர் காட்மாண்ட் திருக்கயிலாயம் மானசரோவர் சென்று வர மொத்தம் 20 நாட்கள் ஆகும்

## ஸ்ரீ இராமகிருஷ்ணா யாத்ரா சர்விஸ்

H.O.: 13, பொன்னம்பல வாத்தியார் தெரு, (கபாலீஸ்வரர் கோயில் அருகில்) மயிலாப்பூர், சென்னை - 600 004. ☎ 044-2461 6466 செல் 098427-44868 (ரோமிங்)

B.O.: 20, வைஷ்ணவி நகர், சந்திரன் கார்டன், சின்ன திருப்பதி, சேலம் - 636 008. ☎ 0427-2410100, 2311813, 2240223 செல் 98427-44868

ஆன்மீகத் தொண்டில் அடியேன் ஜி.எஸ். ஆனந்த்



# தம்

A

'அதிகம் மண்டையைக் காய வைப்பது, சித்திரை வெயிலா _'தம்' திரைப்படமா?' என்று திண்டுக்கல் லியோனி தலைமையில் தயவு செய்து ஒரு பட்டிமன்றம் நடத்த வேண்டும். அப்போதுதான் ஏற்கெனவே 'தம்' படம் பார்த்த அதிர்ச்சியில் 'உம்...' என்று மௌனமாகி, மனநிலை பிறழ்ந்த ரசிகர்களுக்குச் சாப விமோசனம் கிடைக்கும்.

போலீஸ் கமிஷனர் மகளை, கான்ஸ்டபிள் மகன் காதலிக்கும் தொல்பொருள் ஆய்வுத் துறைக்குச் சொந்தமான கதை. இதற்குக் காட்சி அமைப்புகளில் புதுமை செய்து, திரைக்கதையில் திறமையைக் காட்டியிருந்தால் ரசித்திருக்கலாம். ஆனால் லாஜிக் பற்றிய கடுகளவுக் கவலைகூட இல்லாமல், ரசிகனுக்குக் காது குத்தி, மொட்டையடித்து, தலையில் தாராளமாக மசாலா தடவி விடுகிறார்கள்.

போலீஸ் கமிஷனர் அலுவலக வளாகத்திற்குள்ளேயே புகுந்து, எதிர்ப்படும் கமிஷனரிடம் ''என்ன மாமா வரட்டுமா?'' என்று படு நக்கலாக உரசி விட்டுப் போகிறார் ஹீரோ. இதைக்கூட மன்னித்து விடலாம். ஆனால் ரவுடிகளைத் துவம்சம் பண்ண வேண்டிய கமிஷனர், மகளைக் காக்க அதே ரவுடிகளின் உதவியை நாடுவதும்; இறுதியில் ஹீரோ, காவல் துறையினரின் உதவியோடு கதாநாயகியைக் கடத்திக் கொண்டு போய், காவல் துறைத் தலைவர் முன்னிலையில், துப்பாக்கி முனையில் கல்யாணம் செய்து கொள்வதுமான அபத்தங்களுக்கு மன்னிப்பே கிடையாது.

ஆடல், பாடல் இரண்டிலும் அசத்தல் என்று சொல்ல வைக்கிற சிலம்பரசன், ப்ளஸ் டூ முடித்து விட்டு, கல்லூரிப் படிப்புக்கு அப்ளிகேஷன் போடுகிற தோற்றத்திலிருந்து கொண்டு, நூறு கிலோ எடை கொண்ட மெகா ரவுடிகளைப் பந்தாடும் சண்டைக் காட்சிகள், பசை போட்டால்கூட ஒட்டவில்லை. கல்லூரி மாணவன் என்றால் சதா சர்வ காலமும் புகைத்துக் கொண்டே இருப்பவன் என்கிற ரீதியில் ஹீரோ பாத்திரம் வடிவமைக்கப்பட்டிருப்பதில் தவறான ஹீரோயிசம் திணிக்கப்பட்டிருப்பது கண் கூடு. புதுமுகக் கதாநாயகி ரக்ஷிதாவுக்கு நடிப்பின் மீது நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ, ஆடைக் குறைப்பின் மீது அபார நம்பிக்கை இருப்பது தெரிகிறது.

ஒன்று வாங்கினால் ஒன்று இலவசம் என்று துண்டுப் பிரசுரம் வைத்திருப்பவர்களைக் கூட உள்ளே தள்ளும் போலீஸ் சூழலில், காவல் துறையினரை படத்தில் காமெடி இல்லாத பஞ்சத்துக்கு பயன்படுத்தியிருப்பதை கொஞ்சமும் ரசிக்க இயலவில்லை.

சினிமா மூலம் சமூகத்துக்கு நன்மை செய்யாவிட்டாலும் பரவாயில்லை. இப்படி 'தம்' கட்டிக் கொண்டு தீமை செய்ய வேண்டிய அவசியமில்லை!

- **விஷுவல்தாசன்**

● ஜஸ்ட் பாஸ்

# புத்தம் புதுசு!




'சஞ்சிவி காற்று' எனப்படும் செறிவூட்டப்பட்ட ஓஸோனைப் பயன்படுத்தி, பல்வேறு வியாதிகளைக் குணப்படுத்த முடியும் என்று நிரூபித்திருக்கிறார்கள். மிகச் சிறந்த அம்சங்களைக் கொண்ட இம் மருத்துவ முறையை 'ஆண்டவரின் மூச்சு' (The Breath of God) என்றே மேலைநாடுகளில் அழைக்கின்றனர். இந்தியாவில் முதன் முறையாக, கோவையில், ஓஸோன் சிகிச்சை முறை துவங்கப்பட்டுள்ளது.

**ஆகாஷ் மெடிக்கல் அண்ட் ரிஸர்ச் ஃபவுண்டேஷன் பிரைவேட் லிட், 514, சத்தி ரோடு, கோவை - 641006.**

சென்னையின் முன்னணி பொட்டிக் கடைகளுள் ஒன்றான 'விபா டிஸைனர் ஹவுஸ்' தனது புத்தம் புதிய கலெக்ஷனுடன் அக்ஷய திருதியை விற்பனையை ஆரம்பித்திருக்கிறது. தூய பட்டு, மங்களகிரி, செட்டி நாடு, பத்திக், தூய பருத்திப் புடைவைகளுடன் சுரிதார், குர்தாஸ் என நவநாகரிக உடைகளுடன் வண்ணக் கண்காட்சியை மே மாதம் முழுக்க நடத்துகிறது.



**விபா, 4, நியூ ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், மூன்றாவது குறுக்குத் தெரு, ராஜா அண்ணாமலை புரம், சென்னை.**




நான் முழுவதும் சுறுசுறுப்பு வேண்டுமா? நோய் எதிர்ப்பு சக்தி அளிக்கும் ஹெர்போலினாவைப் பயன்படுத்துங்கள். சிறுவர் முதல் முதியவர் வரை அனைவருக்கும் ஏற்ற ஊட்டச்சத்து அளிக்கக் கூடிய உன்னத ஆரோக்கியத் தயாரிப்பு ஹெர்போலினா. எந்தவித பக்க விளைவுகளும் இல்லாத இயற்கை தரும் மல்ட்டி வைட்டமின் கேப்சூல்.

**லாரல் ஹெர்பல் ப்ராடெக்ட்ஸ், 3, பஜனைக் கோயில் தெரு, வேளச்சேரி, சென்னை - 42.**

மேரிகோ இன்டஸ்ட்ரிஸ் நிறுவனம், பேன்களை ஒழிக்கும் புதிய எண்ணெய் வகையைத் தயாரித்துள்ளது. வேம்பு, கற்பூரம் போன்ற தரமான மூலிகைக் கலவையால் தேங்காய் எண்ணெயில் தயாரிக்கப்பட்ட இந்த 'நியூ மெடிக்கல் ஆன்டி-லைஸ் ஆயில்' பேன்களை நிரந்தரமாக நீக்குவதோடு, தலைக்குக் குளிர்ச்சியையும் தருகின்றது.

**மேரிகோ இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட், கே.ஸி. மார்க், பந்த்ரா (வெஸ்ட்), மும்பை - 400 050.**



## வட்டமேஜை

✉ ஆணி அறைவது போன்ற வார்த்தைகளால் முத்திரை பதித்திருந்தது ராணி Vs ராணி! ஆனால் இந்த 'ராணி'யிடம் யார் சொல்லும் 'போணி' ஆகாதே...!
திசையன்விளை, ஆர்.ஜி.ஏ. ராமன்.

✉ கே.ஆர். சாவித்ரி எழுதிய 'பரிணாமப் பசி' சிறுகதை அருமை! மான், ஒட்டைச் சிவிங்கி ஆன கதையை - கூட்டுக் குடும்ப சந்தோஷத்துடன் ஒப்பிட்ட விதம் - அற்புதம்!
மதுரை9, பி.எல். பரமசிவம்.

✉ முந்நூறு பக்கங்களில் சொல்ல வேண்டிய செய்திகளை, மூன்றே கார்ட்டூன்களில் காட்டியது ஆஹா, அருமை!
அம்மாப்பேட்டை, அ. சின்னசாமி.

✉ கண்ணீருடன் பொங்கி எழும் மாணவிகளின் கூட்டத்தையும், கம்பீரச் சிரிப்புடன் புரட்சித் தலைவியின் படத்தையும் ஒரு சேர



## ராணியிடம் ஆகுமா போணி?



அட்டைப் படத்தில் போட்ட உமக்கு ரொம்ப தைரியம்தான்.
வேலூர் - 9, லக்ஷ்மி ஷங்கர்.

✉ அடடா! என்ன கௌரவம்! என்ன மரியாதை! வட்டமேஜை எழுத்தாளர்கள் அத்தனை பேருக்கும் வட்டம் போட்டு கட்டம் கட்டி கௌரவித்தது, ஆளுயர ரோஜா மாலை போட்டது மாதிரி ஒரே சந்தோஷம்.
சென்னை - 28, எம்.பி. துரைஸ்வாமி.

✉ மாணவியர், எதிர்க்கட்சிகள், அரசு ஊழியர்கள், வியாபாரிகள் மட்டுமே மிரட்டல் ராஜ்ஜியத்தால் பாதிக்கப்பட்டது மாதிரியும் மற்றவர்கள் சந்தோஷமாக இருப்பது போலவும் கார்ட்டூன் வெளியிடப்பட்டுள்ளதே! ஒட்டு மொத்தத் தமிழகமே மிரட்டல் ராஜ்ஜியத்தால் பாதிக்கப்பட்டு பயந்தபடி இருக்கிறது என்பதே உண்மை.
பெங்களூர் - 72, ப. மூர்த்தி.

(ஈமெயிலிலிருந்து) ராணி மேரிக் கல்லூரியின் முன்னாள் மாணவி நான். 'கல்வியில் சிறந்த தமிழ்நாடு' என்று மீசைக் கவிஞன் புகழ் பாடிய நாடு... இடம் கிடைத்தால் எல்லோரும் கல்விக்கூடங்களைக் கட்ட முற்பட வேண்டுமே தவிர இடிக்கக் கூடாது. பெண்கள் என்றாலே 'இடி'தான். பெண்கள் கல்லூரிக்குமா?
சென்னை - 28, நீலா சந்திரசேகரன்.

✉ ஜெயலலிதாவின் போக்கு சில விஷயங்களில் சர்வாதிகாரமாகத்தான் இருக்கிறது என்பது உண்மையே. அதே சமயத்தில் எதிர்க்கட்சிகள், தங்கள் சுயநலம் கருதித்தான் ஜெயலலிதாவுக்கு எதிர்ப்பு தெரிவிக்கிறார்கள். அதற்கு உதாரணம் இலவச மின்சாரம் ரத்து, அரசு ஊழியர்கள் பிரச்னை.
கும்பகோணம்-1, ஆர். ஸ்ரீதரன்.



# குழந்தை பாக்கியம் இன்மை, வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத் தன்மை போன்றவைகளுக்கு தெய்வீக மூலிகை மருத்துவம்



குழந்தை பாக்கியம் இன்மை, வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை போன்றவைகளுக்கு முக்கிய காரணம் நாம் உண்ம் உணவுகளில் அதிகமாக ரசாயனப் பொருட்கள் கலந்திருப்பதாலும், பலவித நோய்களுக்காக அவ்வப்போது வீரியமிக்க ரசாயன மாத்திரைகளை உட்கொள்வதாலும், அடிக்கடி மாமிச உணவுகள் உண்பதாலும், அதிகமான கவலை கொள்ளுதல், பலருடன் உடலுறவு கொள்ளுதல் போன்றவைகளால் கர்ப்பப்பையில் புண் ஏற்படுகின்றது. இதனால் கர்ப்பபையில் உள்ள சுரப்பிகள் நன்றாக இயங்காது. மேலும் அதன் சுருப்பு நீரும் திறன் மிக்கதாக இருக்காது. தவிர கர்ப்பப்பையும் நன்றாக சுருங்கி விரியும் தன்மையினை இழந்துவிட்டால் முறையான மாதவிடாய் இருக்காது. வெள்ளைப்படுதலும் தோன்றும். வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறுகள், மலட்டுத்தன்மை உள்ள தாய்க்கு கருத்தரிக்கும் வாய்ப்பு மிகவும் கடினம்.

## கருத்தரிக்காமைக்கு காரணம்

பெண்களுக்கு உற்பத்தியாகும் கரு முட்டைகள் சரியான முதிர்ச்சியும், வளர்ச்சியும் இல்லாதிருத்தல், கருப்பையின் குழாய்கள் அடைப்பு அல்லது சுருங்கி இருத்தல், முட்டையகத்தில் (ஓவரி) குறைபாடு, கருப்பை வளர்ச்சியின்மை, கர்ப்பப்பை புண் ஆண்களின் விந்த எண்ணிக்கையில் குறைவாகவும், தகுந்த உயிருட்டத்துடன் இல்லாமல் இருத்தல். அடிக்கடி உடலுறவு கொள்ளுவதால் முதிர்ச்சி இல்லாத விந்த வெளியாகி உயிர்ப்பிக்கும் சக்தி இல்லாதிருத்தல் ஆகியன கருத்தரிக்காமைக்கு காரணம் ஆகும்.

## தெய்வீக மூலிகை வைத்தியம்

விநாயகருக்குரிய அருகம்புல், சக்திக்குரிய வேப்பிலை, சிவனுக்குரிய வில்வம், பிரம்மாவுக்குரிய அத்தி, கங்கைக்குரிய மாவிலை மற்றும் அற்புத மூலிகை மருத்துவ குணம் கொண்ட அரசிலை, ஆலிலை, நாவல் இலை, முருங்கையிலை, ஓரிதழ் தாமரை, கீழாநெல்லி ஆகியவைகளைப் பறித்து வந்து வெய்யிலில் உலர்த்தி பொடி செய்து சலித்து பின் சம அளவில் ஒன்றாக கலந்து ஒரு பாட்டிலில் வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு முன் தினமும் காலை இரவு ஆகிய இரண்டு வேளையும் உட்கொள்ளவும். இதனை சுமார் ஆறு மாதம் வரை பின்பற்றவும். இளம் தம்பதிகளுக்கு மிக விரைவிலும், மற்றவர்களுக்கு சற்றுத் தாமதமாகவும் கண்டிப்பாக பலன் தெரியும். இத்தகைய மூலிகைகளினால் வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை நீங்கி கர்ப்பபை நன்கு வளர்ச்சி அடையும். விந்த . சினை முட்டைகள் நன்கு முதிர்ச்சி அடைந்ததாகவும், வளர்ந்த தாகவும் இருக்கும். மேலும் எலும்புகள், நரம்புகள் பலம் பெற்று ஆண்மைக் குறைவும் மறையும். வேப்பிலை, வில்வம், கீழாநெல்லி போன்றன எதிர்ப்பு சக்தியையும், ரத்தம் சுத்தம் அடையவும், அத்தியிலை, நாவல், முருங்கை, ஓரிதழ் தாமரை போன்றவை நரம்பு மண்டலம் நன்கு இயங்கவும், அரசன், ஆலயிலை, மாவிலை போன்றவை கருத்தரிக்க உதவும். உயிர் அ க்கள், கருமுட்டை ஆகியவற்றின் எண்ணிக்கை அளவு, வீரியம் ஆகியவற்றை அதிகப்படுத்தவும் உதவும். இத்தகைய மகிமையின் காரணமாகவே திருமண சடங்குகளின்போது இதன் குச்சிகளை ஓமம் வளர்ப்பார்கள். அப்போது அதன் புகைகளை தம்பதிகள் இருவரும் சுவாசிப்பதன் மூலம் மேற்கூறிய பலனை அடைவார்கள் என்பது உண்மை.

## உணவு முறைகள்

தம்பதிகள் இருவரும் தினம் ஏதேனும் ஒரு வேளை வேகவைக்காத பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்கள், பழஜூஸ்கள், சலட்கள் போன்றவற்றையே உணவாக உட்கொள்ளவேண்டும். கேரட், வெள்ளை வெள்ளரிக்காய், பேரிக்காய், வாழை, கொய்யா, ஆப்பிள், பேரிட்சை, திராட்சை, மாதுளை, தர்பூசணி, பாதாம், முந்திரி, இளநீர், கரும்புச்சாறு, தேங்காய், வெங்காயம் கறிவேப்பிலை, கொத்தமல்லி போன்றவற்றிலும் இருந்து ஏதேனும் இரண்டு (அ) மூன்று வகைகளை தேவையான அளவு உட்கொள்ளலாம். பின்னர் மற்ற இரண்டு நேரம் சாதாரண சமைத்த சைவ உணவுகளை உட்கொள்ள வேண்டும். இதில் கேழ்வரகு, கோதுமை, கம்பு, மக்காச்சோளம் போன்ற தானியங்களையும் அடிக்கடி சேர்த்துக் கொள்வது நல்லது. நிலக்கடலை, மூக்கடலை, கொள்ளு போன்றவற்றையும் மாலை வேளைகளில் சுண்டல் செய்து உட்கொள்ளலாம். கிடைத்தால் வெள்ளாட்டுப் பால் சிறிது தண்ணீர் கலந்தும் தம்பதிகள் குடிக்கலாம்.

*தவிர்க்க வேண்டியது* : புகைத்தல், மதுவகைகள், மாமிச உணவுகள், சர்க்கரை கலந்த இனிப்புகள், ரசாயனம் கலந்த உணவுகள், குளிர்பானங்கள், எண்ணெயில் செய்த பலகாரம், அசத்திசீரா, பாகற்காய், பப்பாளி முதலியவை தவிர்க்கவும், இவர்கள் வாரம் ஒரு நாள் பகல் ஒருவேளை (சமைத்த) உணவை தவிர்க்கவும், இரவு உணவை 7 மணிக்குள் முடித்தல் வேண்டும்.

உடற்பயிற்சிகள் : நடத்தல், குனிந்து நிமிர்தல், உட்கார்ந்து எழுதல், நின்ற இடத்தில் ஓடுதல், குதித்தல், கயிறாட்டம், கைகால் விரல்களை நீட்டி மடக்குதல் மூச்சுப்பயிற்சி தியானம் போன்றவற்றை தினம் 20 நிமிடம் காலை மாலை செய்தல் நல்லது.



தெய்வீக மூலிகை வைத்தியர்கள் **Chennai Cell : 98410 45138 Vellore Cell : 98423 69696**

தலைமை முகவரி : **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி,** S/o Dr.C.K.**மாணிக்கவாசகம்**

P.B.No:30, No.3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.)-635 601 ✆ 04179-220469, 222769

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10

**இரு முகவரிகளிலும் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1, மாலை 5 to 7** ✆ **28424285, 28427638**

**குறிப்பு :** சென்னை, வேலூர், காஞ்சிபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர், ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைப்பேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் - விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல் :** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 28 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.100/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**7 & 8ந் தேதி** - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 24011589, 24083879

**9ந் தேதி** - பெங்களூர் : காலை 11 to மாலை 1 மணி வரை, ஹோட்டல் பிரட்வே, (கல்பனா தியேட்டர் அருகில்) கெம்பேகவுடா ரோடு : ✆ 080-2266374, 2873013

**20 & 21ந் தேதி** - புதுடெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, : 25717126, 25723651



# மெகா தொடரும் ஜாங்கிரி அழுகையும்!

• தனலட்சுமி





• பாலசந்தியா



• கீதா

'மிகவும் அழ வைப்பது மெகா தொடர்களா? கல்லூரித் தேர்வுகளா?' என்ற தலைப்பை சிவகங்கை மாவட்டம், பள்ளத்தூர் சீதா லட்சுமி ஆச்சி மகளிர் கல்லூரியினர், பட்டி மன்றத்துக்காகத் தேர்ந்தெடுத்தது சும்மா கண் துடைப்புக்குத்தானோ, என்ற சந்தேகமே வந்து விட்டது. பின்னே... 'அழுகை' பற்றிய விஷயத்தை இவ்வளவு மகிழ்ச்சிக்குரிய நிகழ்ச்சியாகவா தருவது? நடுவராக பேராசிரியர் சாலமன் பாப்பையா! கட்டுக் கரும்புக்கு, எறும்பு வராமலிருக்குமா? சிரிக்க வைத்தே இறங்கடித்து விட்டார் சாலமன் ஜோக்கையா!

மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தின் கீழ் உள்ள நூற்று ஒன்பது கல்லூரிகளில் மிகச் சிறந்த கல்லூரிக்கான விருதும் அந்த சமயத்தில் தானா வந்து சேர வேண்டும்? சந்தோஷத்தின் உச்சிக்கே சென்று விட்டனர், கல்லூரி மாணவிகள்.

எஸ்.பாலசந்தியா –

மெகா தொடர்களே!

நாற்பத்தாறு சேனல்களில் வருகிற மெகா

சீரியல்களையும் பார்க்க, வீட்டில் உள்ள ஒவ்வொருத்தரும் தனக்குப் பிடித்த சீரியலுக்காக அடித்துக் கொள்கிறார்களே! அப்போதே ஆரம்பித்து விடுகிறது அழுகை.

கல்லூரித் தேர்வுகள் என்றால் தேர்வு நேரங்களில் மட்டும்தான்... அதுவும் ஒழுங்காகப் படித்து எழுதினால் ஏன் அழுகை வருகிறது?



• சாய்லட்சுமி

• ராதா



• நாடறிந்த நடுவர்



• சுபா

கொடுமை தாங்காமல் வாழ்க்கைக்காக அழுவதும் இருக்கிறதே... இதில் எந்த அழுகை உயர்ந்தது? சாக்லேட் கேட்டு அழுவது மெகா சீரியல் அழுகை. வாழ்க்கை கேட்டு அழுவது கல்லூரித் தேர்வு அழுகை.

மெகா சீரியல்கள் பொழுதுபோக்கு. கல்லூரித் தேர்வுகள் வாழ்க்கை.

கல்லூரித் தேர்வுகள் வேப்பங்காய் போன்றது. ஆனால் வேம்பு நோய் தீர்க்கும் மருந்து. மெகா சீரியல்கள் ஜாங்கிரி மாதிரி, கூடுதலாக இரண்டு சாப்பிட்டால் வியாதி தான் வரும்.

மெகா சீரியல்களால் இறந்தவர்கள்

ஆனால் மெகா சீரியல்களில் ஜனவரி 1 லிருந்து டிசம்பர் 31 வரை 365 நாட்களும் நான் – ஸ்டாப்பிங்காக அழுகிறோம்.

மெகா சீரியல்களால் ஒட்டு மொத்த குடும்பமும் ஒரே டைனிங் டேபிளில் உட்கார்ந்து சாப்பிடுவதை எத்தனை குடும்பங்கள் இழந்திருக்கிறது! அது சோகமில்லையா?

சீரியல் பார்க்கும்போது விளம்பரம் வந்தால் அழுகிறோம். மின்சாரம் போயிருச்சுன்னா, என்ன நடந்ததோ பார்க்கலையேன்னு அழுகிறோம். நல்ல சீன்லே 'தொடரும்'னு வந்தா அழுகிறோம். இத்தனைக்கும் மேலாக திரைப்படத் தயாரிப்பாளர்களையும், தியேட்டர் உரிமையாளர்களையும்கூட இந்த மெகா சீரியல்கள் அழ வைக்குதே!

**ஜி.ஆர்.சாய்லட்சுமி - கல்லூரித் தேர்வுகளே!**

ஒரு சின்ன பெண் குழந்தை சாக்லேட் கேட்டு அழுவதும், அதே பெண் குழந்தை பெரியவளாகி மாமியார்

• கல்கி ஆசிரியர் சீதா ரவி - கல்லூரி முதல்வர் இரா. கல்பகம், நடுவர் சாலமன் பாப்பையா



யாரும் இல்லை. கல்லூரித் தேர்வுகளின் முடிவுகளால் இறந்தவர்கள் இருக்கிறார்கள்.

**கே. சீதா — மெகா தொடர்களே!**

ஆடை இல்லா மனிதன் அரை மனிதன். 'அரியர்' இல்லா மாணவன் அரை மாணவன். தேர்வில் ஃபெயிலாகி அரியர் வைத்தால்தான் அவன் முழு மாணவன். கல்லூரித் தேர்வுகளுக்காக எப்படி அழுகை வரும்?



• பட்டிமன்ற மேடையில்

கல்லூரித் தேர்வுகள் தன்னை மட்டும் பார்க்கிற சுயநலம். மெகா சீரியல்கள் பொது நலம். மெகா தொடர்களைப் பார்த்துவிட்டு இப்படியெல்லாம் கஷ்டப்படறாங்களேன்னு அழறோம்.

செத்தாலும் பரவாயில்லை, 'சித்தி'யைப் பார்த்துவிட்டு சாகிறேன்னு சொல்றவங்க நிறையப் பேர் இருக்காங்க. பூகம்பம் வந்த நேரத்தில் வந்த செய்திகளை நீங்க படிக்கவில்லையா?

**ஜே. சுபா — கல்லூரித் தேர்வுகளே!**

'கல்லூரித் தேர்வுகள் என்றால் எங்கே அழுகை வருகிறது? ஒரே ஜாலிதான். சிரிப்புதான். யார் வருத்தப்படுகிறார்கள்?' என்று எதிரணியில் சொன்னார்கள்?

அழுகையின் உச்ச கட்டத்தில் வருவது எது? சிரிப்பு... இயலாமையினால் ஏற்படுவது சிரிப்பு. கல்லூரித் தேர்வின் பயத்தினால் வெந்து நொந்து தன்னைத்தானே தேற்றிக் கொள்வதுதான் எதிரணி சொன்ன சிரிப்பு.

கல்லூரித் தேர்வு அழுகை என்பது பரீட்சை எழுதும்போது, மார்க் ஷீட் வரும்போது, மேல் படிப்புக்குப் போகும்போது, குறிப்பிட்ட பாடம் கிடைக்காதபோது, இப்படி, பல வகைகளில் வருகிறது.

மெகா சீரியல் அழுகை என்பது அந்த சீரியல் முடிந்தவுடனேயே மறந்து விடும். பாதிப்பை ஏற்படுத்தாது.

கல்லூரித் தேர்வுகள் காலந்தோறும் தொடர்ந்து வருவது. நேற்று பெய்த மழையில் துளிர் விட்ட காளான்களைப் போன்ற மெகா தொடர்கள் விரைவில் அழிந்து விடக்கூடியன.

**ஏ. தனலட்சுமி — மெகா தொடர்களே!**

எதிரணி சகோதரி சொன்னார். மெகா தொடர்கள் நேற்று வந்த காளான்களாம். லேட்டா வந்தாலும் லேட்டஸ்டா வந்ததாச்சே!

இப்பல்லாம் சாயங்காலம் கோவிலில் கூட்டம் வராமல் இருப்பதற்கு என்ன காரணம்? மெகா சீரியல்தாங்க. கண்ணீரிலேயே கடவுள் தரிசனம் கிடைச்சுடுது.

சாலமன் பாப்பையா, கல்லூரித் தேர்வுகளுக்காக மட்டுமே அழுது கொண்டிருந்தால், இன்று பட்டிமன்றங்களில் நடுவராக ஆகியிருக்க முடியுமா?

**எஸ். ராதா - கல்லூரித் தேர்வுகளே...**

இன்று உலகம் பூராவும் பேசப்படுகிறாரே... டாக்டர் அப்துல் கலாம், அவர் மெகா சீரியல் பார்த்திருந்தா இராமேஸ்வரத்திலேயே இருந்திருப்பார். ஒவ்வொரு கட்டத்திலும் ஒரு தேர்வைச் சந்தித்து இன்று உயர்ந்த நிலையில் இருக்கிறார்.

'அலைகள்' தொடரின் 'ரங்கா' கேரக்டரைப் பார்க்கிறவங்க மனசு எப்படியிருக்கும்? ஒரு தீவிரவாதியாக, கொடுமைக்காரனாக

மாறும் சூழ்நிலை தாங்க இருக்கும்.

சீரியல் அழுகை, எல்லாம் சும்மா கர்சிப் பால் துடைக்கத்தான்.

கல்லூரித் தேர்வில் வினாத்தாள் ஈஸியாக வந்திருக்கும்; அதைக் கூட எழுத முடிய லேன்னு வருத்தப்பட்டு அழுதால், அதை யாராலும் துடைக்க முடியாது.

**நடுவர் பேராசிரியர் சாலமன் பாப்பையா (தீர்ப்புரை)**

மெகா தொடர்களைப் பார்த்தாலே அழுகை வருகிறதென்று சொல்கிறவர்கள் மறுபடியும் அழுவதற்காகவே அதைப் பார்த் திருக்கிறார்கள்.

மனத்தை நன்றாகக் கட்டுப்படுத்துகிற வர்களுக்கு அது ஒரு டிராமா என நன்றா கவே தெரியும்.

கல்லூரித் தேர்வு என்றாலும் அழுகை வரும். நன்றாகப் படித்திருந்தால் அழுகை வராது என்று மெகா தொடர்கள் அணி சொல்கிறார்கள். நன்றாகப் படித்திருந்து எதிர்பாராத கேள்வி வந்து விட்டால், சில சமயங்களில் பதில் மறந்து போனால், எதிர் பார்த்த மார்க் வராமல் போனால்... எல்லாமே அழுகை தரும்.

எத்தனை கவலைகளை, எத்தனை கண்ணீரை, கல்லூரித் தேர்வுகள் வரவழைக் கின்றன?

மெகா தொடர்களின் அழுகையினால் லாபம் எதுவுமில்லை. பார்த்தோம், அழு தோம். அவ்வளவுதான்.

கல்லூரித் தேர்வு அழுகையினால் லாபம் என்றும் இருக்கும். உங்களுக்குச் சொல்லிக் கொடுத்த ஆசிரியர்களுக்குப் பெருமை. ஊருக்குப் பெருமை. அதனால் தேர்வுகளுக் காக அழுகின்ற அழுகை, மெகா தொடர் களுக்காக அழுகின்ற அழுகையைவிட, பயன் மிகுந்தது. நாளைய சமூகத்திற்குப் பயன் தரும் இந்த அழுகை, தேவையான அழுகை. நாம் அனைவரும் தேடுகிற அழுகை. மெகா தொடர்களைப் பார்த்து எப்போதாவது கவலைப்படுங்கள். கல்லூரித் தேர்வுக்காக எப்போதும் கவலைப்படுங்கள்.

தொகுப்பு : கி. சிங்காரவடிவேல்

படங்கள் : பள்ளத்தூர்

ஏ.ஆர். முத்துராமன்

# என் இனிய கலை மக்களே!

இசையமைப்பாளர் தேவா குடும்பத்திலிருந்து யாரேனும் சினிமாவுக்கு ஹார்மோனியம் வாசிக்க வந்தால் ஆச்சர்யப்பட ஏதுமில்லை. ஆனால் ஒரு ஹீரோ, ஒரு காமெடியன் என்று ஒன்றுக்கு இருவராக நடிப்பில் களமிறக்கி விட்டிருக்கிறார் தேவா.

'பகவதி' படத்தில் விஜய் தம்பியாக நடித்துப் பாராட்டுக்களை அள்ளிக் கொண்ட ஜெய், தேவாவின் சகோதரரான சம்பத்தின் மகன். 'தம்' படத்தில் சிலம்பரசனின் உயிர்த் தோழனாக குண்டு உடலைக் குலுக்கி குலுக்கி நடித்த கார்த்திக், தேவாவின் மற்றொரு சகோதரரான சபேஷின் மகன். இரண்டு படங்களிலுமே தேவா இசை. வெங்கடேஷ் இயக்கம். அடுத்து, தேவா குடும்பத்திலிருந்து ஒரு வில்லன் நடிகரை எதிர்ப்பார்க்கலாமா?

— ஸ்ரீ



• ஜெய்



• கார்த்திக்



''கேபிள் டி.வி. நடத்தறதில் இப்படி ஒரு ஆபத்து இருக்குதுன்னு தெரியாமப் போச்சு!''

''என்னடா விஷயம்?''

''அழுகையே வராத சீரியல்களாக ஏன் ஒளிபரப்பறீங்கன்னு கேட்டு ஒரு பெண், வக்கீல் நோட்டீஸ் அனுப்பியிருக்கா!''

- உ. ராஜாஜி



''ஆபீசுல லோன் போட்டு வீட்டைக் கட்டலாமுன்னு பார்க்கிறேன். முடியவே மாட்டேங்குது.''

''ஏன், லோன் சாங்ஷன் ஆக மாட்டேங்குதா?''

''இல்லை. வேலை கிடைக்க மாட்டேங்குது!''

- வி.சகிதா முருகன்





''மன்னா, நீங்கள் சொன்னாற்போல 'கடனுக்குப் பாடுவீரா?' என்று கேட்டு வந்தேன்.''

''என்ன பதில் சொன்னான் அந்தப் புலவன்?''

'' 'கிரெடிட் கார்ட் வசதி இல்லையா?' என்கிறார்!''

- கிருஷ்ணா. ராஜ்கோபால்

''நம்ம படத்துல நடிக்கற ஆர்ட்டிஸ்டுகள் கும்பலா எங்கே கிளம்பிப் போறாங்க?''

''நம்ம படத்தை திருட்டு விசிடி எடுக்கறவங்க. கிளைமாக்ஸை மட்டும் மாத்தி எடுக்கப் போறாங்களாம்!''

- அம்பை தேவா



''நம்ம தலைவர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போனது தப்பாயிடுச்சு.''

''ஏன்...?''

''அப்பளத்தில் 'மொய்ப் பணம் கொடுக்க மறவாதீர்கள்' என்ற வாசகம் பொறிச்சிருக்கு!''

- நாமக்கல் பாலு

''என் கணவர் தூக்கத்தில் நடக்கிறாரு டாக்டர். பயமாயிருக்கு?''

''இதிலே பயப்பட ஒன்றுமில்லையம்மா.''

''அப்படியே போய் குழாயடில நின்னு யாருக்கோ நாலு குடம் தண்ணி அடிச்சுக் கொடுத்திட்டு வர்றாரே!''

- சாம்பஸ்ரீ



''நான் அளகாக இருப்பதாகவும், பலகுவதற்கு மகிழ்ச்சியாக இருப்பதாகவும் அந்தப் பொண்ணு சொல்றாடா. அவ யார் தெரியுமா?''

''எப்படிடா... அந்த டீ.வி. தொகுப்பாளினிய வளைச்சுப் போட்டே?''

- சாம்பஸ்ரீ

# மொய் வைக்க மறவாதீர்!



# சிவகாமியின் சபதம்

ஐம்பத்து ஏழாம் அத்தியாயம்

## இராஜகுல தர்மம்

மகேந்திர பல்லவருடைய விருப்பத்தைத் தெரிந்து கொண்டு அவரைச் சூழ்ந்திருந்த மந்திரிகளும் அமைச்சர்களும் சற்று விலகிச் சென்றார்கள். மறுபடியும் சக்கரவர்த்தி அழைத்தவுடனே திரும்பி வருவதற்கு ஆயத்தமாகக் காத்திருந்தார்கள்.

சக்கரவர்த்திக்குச் சமீபமாக மாமல்லரும் அவர்களுக்குச் சற்றுத் தூரத்தில் பரஞ்சோதியும் வணக்கத்துடன் நின்றார்கள்.

மகேந்திர பல்லவர் படுத்திருந்த மண்டபத்துக்கு ஒரு பக்கத்தில் அந்தப்புரத்தின் வாசல் இருந்தது. மகேந்திர பல்லவர் அங்கே திரும்பி நோக்கியதும் தாதி ஒருத்தி ஓடி வந்தாள். அவளிடம், "மகா ராணியை அழைத்து வா!" என்று பல்லவேந்திரர் ஆக்ஞாபித்தார்.

''பின்னர், மாமல்லரைப் பார்த்து, "குழந்தாய்! நான் கண் மூடுவதற்குள் இரண்டு காரியங்களை நிறைவேற்ற வேண்டுமென்று தீர்மானித்திருந்தேன். அதில் ஒன்று நிறைவேறி விட்டது. சிவகாமியின் சபதத்தைப் பூர்த்தி செய்து அவளை வாதாபியிலிருந்து நீ அழைத்து வரும் விஷயத்தில் நமது மந்திரிப் பிரதானிகளால் ஏதேனும் தடை நேராதிருக்கும் பொருட்டு அவர்களிடம் உன் முன்னிலையில் வாக்குறுதி பெற்றுக் கொண்டேன். வாக்குறுதியிலிருந்து அவர்கள் பிறழ மாட்டார்கள். வாதாபிப் படையெடுப்புக்கு உனக்குப் பூரண பக்கபலம் அளிப்பார்கள்" என்றார்.

மாமல்லர் மறுமொழி எதுவும் சொல்லவில்லை.

"மகனே! நான் செய்ய விரும்பும் இரண்டாவது காரியம் உன்னைப் பொறுத்திருக்கின்றது; நீதான் அதை நிறைவேற்றித் தர வேண்டும். மரணத்தை எதிர்பார்க்கும் சக்கரவர்த்தியின் கோரிக்கையை மந்திரி பிரதானிகள் உடனே ஒப்புக் கொண்டார்கள். என் அருமைப் புதல்வனாகிய நீயும் என்

அமரர் கல்கி

அந்திமக்கால வேண்டுகோளை நிறைவேற்றித் தருவாயல்லவா?" என்றார் மகேந்திரர்.

"அப்பா! என்ன வேண்டுமானாலும் எனக்குக் கட்டளையிடுங்கள்; நிறைவேற்றுகிறேன். கோரிக்கை, வேண்டுகோள் என்று மட்டும் சொல்லாதீர்கள்!" என்றார் மாமல்லர்.

"குமாரா! இந்தப் பெரிய சாம்ராஜ்யத்தை நிர்வகிக்கும் பொறுப்பு கூடிய சீக்கிரம் உன் தலையில் சாரப் போகிறது. ஆயிரம் ஆண்டுகளாகப் புகழ் பெற்ற காஞ்சிமா நகரின் சிம்மாசனத்தில் நீ வீற்றிருக்கும் காலம் நெருங்கி வந்திருக்கிறது..."

"அப்பா! இவ்விதமெல்லாம் தாங்கள் பேசுவதானால், நான் இங்கிருந்து போய் விட விரும்புகிறேன். எனக்குச் சிம்மாசனமும் வேண்டாம், சாம்ராஜ்யமும் வேண்டாம். தாங்கள்தான் எனக்கு வேண்டும். நெடுங்காலம் தாங்கள் திடகாத்திரமாக வாழ வேண்டும்..."

"மாமல்லா! நம்முடைய கண்களை நாமே மூடிக் கொண்டு எதிரேயுள்ளதைப் பார்க்காமல் இருப்பதில் பயனில்லை. இனி நெடுங்காலம் நான் ஜீவித்திருக்கப் போவதில்லை. அப்படி ஜீவித்திருந்தாலும் திடகாத்திரமாக இருக்கப் போவதில்லை. சாம்ராஜ்ய பாரத்தை இனிமேல் என்னால் ஒரு நிமிஷமும் தாங்க முடியாது. அந்தப் பொறுப்பை நீதான் வகித்தாக வேண்டும்..."

"பொறுப்பு வகிக்க மாட்டேன் என்று நான் சொல்லவில்லையே? காஞ்சி சிம்மாசனத்தில் தாங்கள் இருந்து கொண்டு எனக்குக் கட்டளையிடுங்கள். நான் நிறைவேற்றாவிடில் கேளுங்கள்."

"நல்லது மகனே! இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தின் பொறுப்பை நிர்வகிப்பதற்குத் தகுதி பெற வேண்டுமானால் அதற்கு முக்கியமான ஒரு நிபந்தனை இருக்கிறது. அதை நீ பூர்த்தி செய்தாக வேண்டும்!"

"நிபந்தனையைச் சொல்லுங்கள், அப்பா!" என்றார் மாமல்லர். அவருடைய உள்ளத்தில் ஏதோ ஒருவித வேதனை உண்டாயிற்று.

"குழந்தாய்! வளைத்து வளைத்துப் பேசுவதில் என்ன பயன்? நீ எனக்கு ஒரே மகன். வாழையடி வாழையாக வந்த பல்லவ வம்சம் உன்னோடு முடிவடைந்து விடக் கூடாது. காஞ்சி சிம்மாசனத்தில் ஏறத் தகுதி பெறுவதற்கு நீ கலியாணம் செய்து கொள்ள வேண்டும். மாமல்லா! - பாண்டிய இராஜ

குமாரியை மணந்து கொள். நான் கண்ணை மூடுவதற்குள்ளே நீ இல்லறம் மேற்கொண்டு நான் பார்த்து விட வேண்டும். இல்லாவிட்டால் என் மனம் நிம்மதி அடையாது. என் நெஞ்சு வேகாது!" என்றார் சக்கரவர்த்தி.

மேற்படி மொழிகள் மாமல்லரின் இருதய வேதனையைப் பன்மடங்கு அதிகமாக்கின. அவருடைய நெஞ்சில் ஈட்டியால் குத்தியிருந்தால்கூட அத்தனை துன்பம் உண்டாகியிராது.

சற்று மௌனமாய் நின்றுவிட்டு, "அப்பா! ஏன் இப்படி என்னைச் சோதனை செய்கிறீர்கள்? என் மனோநிலை உங்களுக்குத் தெரியாதா? சிவகாமியின் மேல் நான் அழியாத காதல் கொண்டிருப்பதை அறியீர்களா? ஒரு பெண்ணிடம் மனம் சென்ற பிறகு, இன்னொரு



பெண்ணை எப்படி மணப்பேன்? அப்படிச் செய்வது மூன்று பேருடைய வாழ்க்கையையும் பாழாக்குவதாகாதா? இத்தகைய காரியத்தைச் செய்யும்படி எனக்குக் கட்டளையிடுகிறீர்களா?" என்று மாமல்லர் கேட்டார். அவருடைய வார்த்தை ஒவ்வொன்றும் இருதயத்தின் அடிவாரத்திலிருந்து நெஞ்சின் இரத்தம் தோய்ந்து வெளிவந்தது.

மகேந்திர பல்லவர் குமாரனை அன்புடனும் ஆதரவுடனும் தடவிக் கொடுத்தார். பிறகு கனிவு ததும்பும் குரலில் கூறினார்: "ஆம், நரசிம்மா! அப்படிப்பட்ட காரியத்தைச் செய்யும்படிதான் சொல்கிறேன். அந்தக் காரியத்தின் தன்மையை நன்கு அறிந்து சொல்கிறேன். கேள், மாமல்லா! இந்த உலகத்தில் சாதாரண மனிதர்களுக்குத் தர்மம் வேறு; இராஜகுலத்தில் பிறந்தவர்களுக்குத் தர்மம் வேறு. சாதாரண ஜனங்கள் தங்களுடைய சொந்த சுகதுக்கங்களை உத்தேசித்துக் காரியம் செய்யலாம். ஆனால் இராஜ குலத்தில் பிறந்தவர்கள் அவ்வாறு செய்வதற்கில்லை. தங்கள் சுக துக்கங்களை அவர்கள் மறந்து விட வேண்டும். இராஜ்யத்தின் நன்மையைக் கருதியே இராஜகுலத்தினர் தங்கள் சொந்த காரியங்களையும் வகுத்துக் கொள்ள வேண்டும். மாமல்லா! யோசித்துப் பார்! சிவகாமியை நீ மணந்து கொள்வது இனிமேல் சாத்தியமா? வாதாபிக்கு நீ படை எடுத்துப் போவது இன்றோ நாளையோ நடக்கக்கூடிய காரியமா? வருஷக் கணக்கில் ஆயத்தம் செய்ய வேண்டியிருக்கும். அப்புறம் யுத்தம் எத்தனை காலம் நடக்குமோ, யார் சொல்ல முடியும்? அத்தனை நாளும் நீ கலியாணம் செய்து கொள்ளாமல் இருப்பாயா? அதற்கும் பல்லவ நாட்டுப் பிரஜைகள் சம்மதிப்பார்களா?"

மாமல்லர் பெருமூச்சு விட்டார்; சிவகாமியின் மீது அவருக்குச் சொல்ல முடியாத கோபம் வந்தது. அந்தப் பாதகி தன்னுடன் புறப்பட்டு வர மறுத்ததனால்தானே இப்போது இந்தத் தர்மசங்கடம் தனக்கு நேரிட்டிருக்கிறது!

அவருடைய உள்ளப் போக்கை அறிந்து கொண்ட மகேந்திர பல்லவர், "குமாரா! இராஜ குலத்தினர் தங்களுடைய சுகதுக்கங்களைப் பாராமல் இராஜ்யத்துக்காகவே எல்லாக் காரியங்களும் செய்தாக வேண்டும் என்று உனக்குச் சொன்னேனல்லவா? அதை நானே என் வாழ்க்கையில் அனுசரித்து வந்திருக்கிறேன். இப்போதுகூட இராஜ்யத்தின் நன்மைக்காக ஒரு பயங்கரமான காரியத்தைச் செய்வதற்கு மனம் துணிந்திருந்தேன். அந்தப் பயங்கரமான காரியம் என்ன தெரியுமா...?" என்று மகேந்திர பல்லவர் நிறுத்தினார்.

மாமல்லர் ஒன்றும் புரியாதவராய்த் தாயாரையும் தந்தையையும் மாறி மாறிப் பார்த்தார்.

"ஆம், குமாரா! இந்த வயதில் உன் தாயாருக்கு இன்னொரு சக்களத்தியை அளிப்பதென்று தீர்மானித்திருந்தேன். நீ வாதாபியிலிருந்து சிவகாமியை இப்போது அழைத்து வந்திருந்தால், அவளை நானே மணந்து கொள்வதென்று முடிவு செய்திருந்தேன்..." என்றதும் மாமல்லர் "அப்பா!" என்று அலறினார்.

"மாமல்லா! என்னை மன்னித்து விடு! இராஜ்யத்தின் நன்மைக்காகவே அந்தப் பயங்கரமான காரியத்தைச் செய்யத் துணிந்திருந்தேன். நீ சிவகாமியை மணக்காமல் தடுக்கும் பொருட்டே அவ்விதம் செய்ய எண்ணினேன். உன் அன்னையிடமும் சொல்லி அனுமதி பெற்றேன். ஆனால், அந்தப் புண்ணியவதி வாதாபியிலிருந்து வர மறுத்து என்னை அந்தப் பயங்கரச் செயலிலிருந்து காப்பாற்றினாள்!"

மாமல்லருடைய மனம் அப்போது வாதாபி மாளிகையில் தன்னந்தனியாக உட்கார்ந்திருக்கும் சிவகாமியிடம் சென்றது. 'ஆ! - அவள் நம்முடன் புறப்பட்டு வர மறுத்தது எவ்வளவு நல்லதாயிற்று?'

"குமாரா! இப்போது யோசித்துப் பார்! இராஜ்யத்தின் நன்மைக்காக நான் செய்யத் துணிந்ததைக் காட்டிலும் உன்னைச் செய்யும்படி கேட்பது பெரிய காரியமா? பாண்டியகுமாரியை மணப்பதனால் பல்லவ ராஜ்யத்துக்கு எவ்வளவு பலம் ஏற்படும் என்று சிந்தனை செய். நீ செய்வதற்குரிய மகத்தான பிரம்மாண்டமான காரியங்கள் இருக்கின்றன. வாதாபிக்குப் படையெடுத்துச் சென்று சளுக்கப் பூண்டை அடியோடு அழித்து வருவதென்பது சாமான்யமான காரியமா? அதற்கு எத்தனை துணைப் பலம் வேண்டும்? தென்னாட்டிலுள்ள

# அருள்வாக்கு

ஏழையோ, பணக்காரனோ எல்லார் குடும்பத்திலும் கல்யாணம் மாதிரியான சுபகார்யங்கள், சாவு மாதிரியான அசுபகார்யங்கள் வருகின்றன. இவற்றுக்காக எவனும் கடன்படுகிற மாதிரி நாம் விட்டால் அது நமக்குப் பெரிய தோஷம். அவரவரும் தன்னாலானதை ஐந்தோ, பத்தோ ஏழைப்பட்ட பந்துக்களின் சுபாசுபகார்யங்களுக்கு உதவ வேண்டியது ஒரு பெரிய கடமை. இதை முன் காலங்களிலெல்லாம் ஸஹஜமாகச் செய்து வந்தார்கள். 'பரோபகாரம்' என்று யாரோ மூன்றாம் மனிதர்களுக்குச் செய்வதற்கு முன்னால், 'பந்துத்வ'த்தோடு நம்முடைய ஏழைப்பட்ட உறவினர்களுக்கு உதவி செய்ய வேண்டும். இரண்டு தலைமுறைக்கு முந்தி, இதைச் சொல்ல வேண்டிய அவசியமே இருக்கவில்லை.



அப்போது, கிழவர் பராமரிப்பு இல்லம்', 'விதவை விடுதி' என்றெல்லாம் வைக்க வேண்டிய அவசியமே இல்லாதிருந்ததற்கு என்ன காரணம்? பந்துக்களே இவர்களைப் பராமரித்து வந்ததுதான். அநேகமாக எல்லா வீடுகளிலும் ஒரு அத்தை பாட்டி, மூன்று தலைமுறை விட்டு ஒரு மாமா தாத்தா என்கிற மாதிரி கிழங்கள் இருக்கும். தற்காலத்தில் ரொம்பவும் பணக்காரர்களும்கூட வெறும் 'ஷோ'வாக பார்ட்டியும், ஃபீஸ்டும் கொடுக்கிறார்கள். அல்லது பேப்பரில் போடுகிற மாதிரி டொனேஷன் கொடுக்கிறார்கள். ஆனால் பந்துத்வத்தோடு தங்கள் குடும்பத்திலேயே வசதி இல்லாதவர்களை ஸம்ரக்ஷிப்பது என்பது இப்போது அநேகமாகப் போயே போய் விட்டது.

முதலில் ஏழையான பந்துக்களைக் கவனிக்க வேண்டும். சுபாசுபகார்யங்களுக்கு நாம் செலவழித்துக் கொண்டு நேரில் போக வேண்டும் என்பதுகூட இல்லை. இந்தச் செலவையும் சேர்த்து அந்த வசதி இல்லாத உறவுக்காரனுக்கு அனுப்பி வைத்தால், அவனுக்கு எத்தனையோ உதவியாக இருக்கும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

எல்லா மன்னர்களும் சேர்ந்து பிரயத்தனம் செய்தாலொழிய அது சாத்தியப்படுமா? தெற்கே ஒரு சத்ருவை வைத்துக் கொண்டுதான் வடக்கே படையெடுத்துச் செல்ல முடியுமா? நரசிம்மா! எந்த வழியில் பார்த்தாலும் பாண்டிய ராஜகுமாரியை நீ மணப்பது மிகவும் அவசியமாகிறது...'' என்று இவ்விதம் இடைவிடாமல் பேசிய காரணத்தினால் மகேந்திர பல்லவர் பெருமூச்சு வாங்கினார். அவருடைய கஷ்டத்தைப் பார்த்த புவன மகாதேவி, "பிரபு! இவ்வளவு நேரம் பேசலாமா?வைத்தியர் அதிகம் பேசக் கூடாது என்று கட்டளையிட்டிருக்கிறாரே?'' என்று சொல்லிவிட்டு, மாமல்லரைப் பார்த்து, "குழந்தாய்! உன் தந்தையை...'' என்றாள். அன்னை மேலே பேசுவதற்கு மாமல்லர் இடங்கொடுக்கவில்லை.

"அப்பா! தாங்கள் அதிகமாகப் பேச வேண்டாம். பாண்டியகுமாரியை நான் மணந்து கொள்கிறேன்!'' என்று பல்லைக் கடித்துக் கொண்டு சொன்னார்.

மகேந்திர சக்கரவர்த்தியின் முகம் மலர்ந்தது. புவனமகாதேவியோ தன் கண்களில் துளிர்த்த கண்ணீரை மறைக்க வேறு பக்கம் திரும்பினாள்.

மகேந்திர பல்லவர் சமிக்ஞை காட்டியதும் தளபதி பரஞ்சோதியும் மற்ற மந்திரி பிரதானிகளும் அருகில் வந்தார்கள்.

"தலைவர்களே! அதிக நேரம் உங்களைக் காக்க வைத்து விட்டேன். அவ்வளவுக்கவ்வளவு உங்களுக்குக் குதூகலம் தரும் செய்தியைத் தெரிவிக்கப் போகிறேன். குமாரச் சக்கரவர்த்திக்கும் பாண்டிய ராஜகுமாரிக்கும் கலியாணம் நிச்சயமாகியிருக்கிறது. அதே பந்தலில் அதே முகூர்த்தத்தில் சேனாதிபதி பரஞ்சோதிக்கும் திருமணம் நடைபெறுகிறது!'' என்று மகேந்திர பல்லவர் கூறியதும், கேட்டவர்கள் அவ்வளவு பேரும் ஒரே குரலாக 'வீர மாமல்லர் வாழ்க! சேனாதிபதி பரஞ்சோதி வாழ்க!'' என்று கோஷித்தார்கள்.

(தொடரும்)



# குளிர்ச்சி–1

'**சா**மி' படப்பிடிப்பை முடித்துக் கொண்டு அப்போதுதான் வந்திருந்தார் நடிகை த்ரிஷா. செல்ல நாயுடன் கொஞ்சிக் கொண்டு ஜாலியாக இருந்தவருக்கு சோதனைப் படலம் ஆரம்பித்தது. "நாவுக்குக் குளிர்ச்சியாக எதையாவது ஜிலுஜிலு என சமைத்துக் காட்ட முடியுமா?" என்று கேட்டதும்தான் தாமதம், "சவால் மாமே!" என்று விளம்பரப்பாணியில் களம் இறங்கிவிட்டார்.

ஒரு கப் கார்ன் ஃப்ளவர், சர்க்கரை ஒரு கப், கன்டென்ஸ்டு மில்க் ஒரு கப், கோவா ஒரு கப், காய்ச்சிய பால் ஒரு கப், கோகோ பவுடர் சிறிது, சாக்லேட் எஸன்ஸ் சிறிது. த்ரிஷாவின் அம்மா உமாராஜன் ஒவ்வொன்றாக எடுத்துத்தர, 'ஜீஸஸ்' என்று தனக்குத் தானே கிராஸ் போட்டுக் கொண்டு கேஸ் ஸ்டவ் வைப் பற்ற வைத்தார் த்ரிஷா.

பாலை சுண்டக் காய்ச்சி ஆற வைத்து, அதில் கார்ன்ஃப்ளவர் சேர்த்துக் கலக்கினார். பிறகு கோவா, சர்க்கரை, கன்டென்ஸ்ட் மில்க், சேர்த்து நன்றாகக் கலக்கி ஆற வைத்தார். இறுதியாக கோகோ, சாக்லேட் எஸன்ஸ் சேர்த்து இன்னும் ஓர் கலக்குக் கலக்கினார். அழகான கிண்ணத்தில் ஊற்றி ஃப்ரிஜ்ஜில் மூடி வைத்தபோது த்ரிஷாவின் நெற்றியில் வியர்வை முத்துகள்...

ஸ்டைலாகத் துடைத்துக் கொண்டே சோபாவில் வந்தமர்ந்தார். குரலிலும் உருவத்திலும் ஜில்லென்று வசிய மருந்து வைத்திருந்த த்ரிஷா, தன் கலையுலக அனுபவம் பற்றி சுவையாகப் பேசிக் கொண்டிருக்க, அரை மணி நேரம் கரைந்தோடியது.

" ஜில்லுன்னு ஜோரா, ஜிக்குன்னு கூலா. டேஸ்ட் பண்றீங்களா?" உபசரித்தார் த்ரிஷா.

"இதுக்கு என்ன பேர்?" என்று கேட்டதும்.

"சூப்பர் பொடா ஷஃபின்" என்று சட்டென்று பதில் வந்தது.

'ஜீஸஸ்' என்று சிலுவை போட்டுக் கொண்டு நாம் அலற, த்ரிஷா குல்ஃபி போல குளுகுளுவெனச் சிரித்தார். ஐஸ்... ஐஸ்... பேபி!

ஜெயா டி.வி.யின் காலை மலரில் (தமிழ்ப் புத்தாண்டு நிகழ்ச்சி) செண்டு மல்லிச் சிரிப்புடன் இடம் பெற்ற நடிகை சிநேகாவுக்குப் போட்டியாக அதே செட்டில் விதவிதமான மலர்களைக் கண்ட போது, கண்ணுக்குக் குளிர்ச்சியாக இருந்தது.

"அல்லிகளையும் ஆர்கிட்களையும் அற்புதமாக அலங்கரித்த அந்த மலர்மன்னன் யாருங்க?" என்று வலை வீசித் தேடினால் ஏ.வி.வரன் என்ற கம்ப்யூட்டர் இஞ்சினியர்.

"'ஸிஸ்டெக்' என்ற கம்ப்யூட்டர் நிறுவனம் நடத்தறேன். பிஸினெஸ் விஷயமா அடிக்கடி வெளிநாடு போவேன். ஒருமுறை, சிங்கப்பூர் போயிருந்தபோது வீட்டை அலங்கரிக்கிறதுக்காக சில மலர்க் கொத்துக்கள் வாங்கி வந்தேன். அதைப் பார்த்து ஏக திருஷ்டி. 'எங்கே வாங்கினே?" என்று விசாரிப்புகள். அடுத்த முறை சிங்கப்பூர் போனபோது தெரிஞ்சவங்களுக்காக வாங்கிட்டு வந்தேன். மலர்களை 'செட்' பண்றதுக்காக அந்தக் கலையையும் கத்துக்கிட்டேன். அப்படி, செடி, கொடினு வளர்ந்த ஆர்வம் 'ப்ளூம் ரூம்'னு ஒரு ஷோரும் திறக்கற அளவுக்குப் போயிடுச்சு" என்கிறார் ஏ.வி.வரன்.

ஜெயா டி.வி.யின் 'விவாதம்' நிகழ்ச்சியில் பங்கு பெற்ற, போலீஸ் கமிஷனர் விஜயகுமாருக்கு, அங்கே இடம் பெற்றிருந்த பூ அலங்காரம் ஒன்று மிகவும் பிடித்துப் போகவே, உடனே பர்ஸனலாக ஆர்டர் செய்து வாங்கிக் கொண்டாராம்.

"மனைவி டாக்டர் உமாவும் பூக்களின் பிரியையாக இருப்பதால், வீடே ஊட்டி மலர்க் கண்காட்சி மாதிரி இருக்கும்" என்னும் ஏ.வி.வரன் நல்ல ஓவியரும் கூட.

**அட்டை அழகு மலர் : தீபா நாராயண்**

அட்டைப்படம் : **ஸ்ரீஹரி**



• ஏ.வி.வரன்

# குளிர்ச்சி–2

படம் : வெங்கடேஷ்



# குளிர்ச்சி—3

டேப் ரிகார்டரின் உதவியோ, ஸிடியோ இல்லாமல் இருபத்து நான்கு மணி நேரமும் காது குளிர இறைவனின் நாமத்தை இடைவிடாமல் கேட்க வழி ஒன்று கண்டு பிடித்திருக்கிறார்கள் சென்னை ஆர்.கே. என்டர்பிரைசஸ் நிறுவனத்தினர். உள்ளே 'எலக்ட்ரானிக் சிப்பில் 'ஓம் நமோ நாராயணாய' அல்லது 'ஓம் நமசிவாய' என்று பதிவு செய்துவிட்டால், தொடர்ந்து ஒலிக்கிறது! 'ஓம் மகா கணபதயே நம', 'ஓம் சரவண பவாய நம', 'ஓம் ஸ்ரீ சத்யசாயிபாபா', 'ஸ்ரீ ராகவேந்திரா' என்று சுமார் பன்னிரண்டு நாமாவளிகளை இப்படித் தயாரித்திருக்கிறார்கள்.

"புகழ் பெற்ற இசைக் கலைஞர்களை நாங்கள் இதற்காக அணுகவில்லை. நல்ல குரல்வளம் உள்ள நபரிடம் பதிவு செய்தோம், அவ்வளவுதான்!" என்கிறார் சிவகுமார். இப்படி ஒரே பெயரை (அல்லது மந்திரத்தை) விடாமல் சொல்லுகிற பெட்டியை யாராவது வாங்குவார்களா என்று மார்க்கெட்டில் சோதனை முயற்சி மேற்கொண்டபோது நல்ல வரவேற்பு கிடைத்ததாம். எல்லா மந்திரங்களையும் கொண்ட பெட்டியும் இருக்கிறதாம். எதை வேண்டுமோ அதை செலக்ட் செய்து, காது குளிரக் கேட்கலாம். 230 வோல்ட் மின்சாரத்துக்கு ஏற்றவாறு இவை கிடைக்கின்றன என்றாலும், வெளிநாட்டினர் - குறிப்பாக அமெரிக்கா வாழ் இந்தியர்களுக்காக 110 வோல்ட்டுக்கும் ஏற்றபடி தயாரித்துக் கொடுக்கிறார்கள்.

"சிங்கப்பூர், மலேசியா, லண்டன், அமெரிக்கா என்று வெளிநாடுகளிலும் இப்போது இதற்கு வரவேற்பு இருக்கிறது!" என்கிறார் சிவகுமார். விலை ரூ.200 லிருந்து 500 வரை.

---

# குளிர்ச்சி—4

இன்று மக்களுக்கு மனசுக்குக் குளிர்ச்சியாக இருப்பது எது தெரியுமா? புகழ்ச்சி, வஞ்சனையான இன்சொல்... தான் செய்வதெல்லாம் சரி என்று ஒப்புக் கொள்ளும் அடிமைகளின் வாக்குமூலம்... இவைதான் மனசுக்குக் குளிர்ச்சி.

ஆனால் இந்தக் குளிர்ச்சி பிணத்தின் குளிர்ச்சி... அல்லது பாம்பின் குளிர்ச்சி! நல்லது கெட்டது பற்றிய சான்றோர் அறிவுரை என்றைக்கு மக்களுக்குக் குளிர்ச்சியாக இருக்குமோ, அன்றுதான் உலகத்துக்கு நல்ல காலம். சரி, தவறு, தர்ம அதர்மம் பற்றிய கருத்துகள் நமக்குக் குளிர்ச்சியாக இருக்குமானால் நாம் நல்ல கதிக்குப் போகப் போகிறோம் என்று பொருள்.

இராவணனுக்கும் சூரபத்மனுக்கும் புகழுரை செய்த மந்திரிகளின் அழிவுரை குளிர்ச்சியாக இருந்தது. விபீடணனும் வீரவாகுவும் சொன்ன அறிவுரை அனலாகக் காய்ந்தது. அமிலம் பிடிக்கிறது. அமுதம் கசக்கிறது!

ஆசார்ய வினோபா பாவே தம்மைப் புகழ்ந்து மகாத்மா காந்தி எழுதிய கடிதத்தைக் கசக்கிக் குப்பையில் போட்டார். அதிலிருந்து குண்டூசியை மட்டும் எடுத்துவிட்டு, "இதிலுள்ள ஒரே பயனுள்ள பொருள்" என்று வைத்துக் கொண்டார்.



"சதாசிவம் வாயை மூடு" என்று கண்டித்தார் குருநாதர். வாயை மூடிய சதாசிவ பிரும்மேந்திரர் மோனமுனியாய் ஞானம் பெற்று முக்தி அடைந்தார். ஞானிகளுக்குப் புகழ்ந்தால் குளிர்ச்சியாக இருக்காது... திட்டினால் வெப்பமாக இருக்காது... நமக்கு?

- அனு, சாருகேசி

* சுகி. சிவம்

கோ சம்ரக்ஷணம் !                                                     லோக சம்ரக்ஷணம் !




வயது முதிர்ந்த, பால் வற்றிய, நோயுற்ற பசுக்களைப் பாதுகாக்க, உங்கள் அன்பு காணிக்கையை கனிவுடன் மனமுவந்து தாரீர் ! பசுவைப் பாதுகாத்து பராமரிக்க பசுமடத்திற்கு கோதானம் செய்து புண்ணியம் பெறுவீர்.

**பசு மடத்தில் உள்ள பசுக்களில் ஒரு பசுவை பராமரிக்க**

| | | |
|---|---|---|
| ஒரு நாளுக்கு.......... | ரூ : | 15.00 |
| ஒரு வாரத்திற்கு....... | ரூ : | 105.00 |
| ஒரு மாதத்திற்கு....... | ரூ : | 465.00 |
| ஒரு வருடத்திற்கு.... | ரூ : | 5400.00 |

**தேவைப்படுகிறது**




பசுமடத்தில் நடைபெறும் கோபூஜையில் அன்பர்கள்...

- அன்பர்கள் தங்களுடைய திருமண நாள்,பிறந்த நாள், பண்டிகை நாட்கள் முன்னோர்கள் திதி நாட்கள் என தங்களுக்கு உகந்த நாட்களின் போது கோதானம் செய்து,பசுக்களின் பராமரிப்பிற்கு நன்கொடை அளித்து சமஸ்த தேவதா ஸ்வரூபியான ஸ்ரீகோமாதாவின் பூஜையால் சகல ஐஸ்வர்யங்களையும் பெறலாம்.
- நமது முன்னோர்களுக்க உணவு அளிக்க விரும்பினால் பசுவிற்கு கொடுத்தால் போதும் அது நம் முன்னோர்களுக்கு சென்று அடையும்.
- ஆபிசார தோஷம் நீங்கி, முன்னோர்களின் அருளாசியும் பெற பசுக்களை போற்றி பரந்தாமனின் அருளைப்பெறுவோம்!
- முப்பத்து முக்கோடி தேவர்களும், அனைத்து புண்ணிய தீர்த்தங்களும் குடிகொண்டுள்ள பசுவிற்கு பூஜை செய்வதால் இறைவன் நமக்கு வேண்டிய வரங்களைத் தருவார்

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5400- அனுப்பும் அன்பர்களுக்கு, **பசுவும் கன்றும் சேர்ந்த விக்ரகமும், " ஆன்மீகம் மாத இதழ் "** பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

**பசுவை பாதுகாக்கும் திருப்பணியில் பங்குகொள்ளும் அன்பர்கள் விரும்பும் நாட்களில் கோபூஜை செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். அன்றாடம் நடைபெறும் கோபூஜையில் அன்பர்கள் கலந்து கொள்ளலாம்.**



தங்களால் இயன்ற அளவு நன்கொடையை Cheque / D. D/ M. O. மூலமாக Shri Ghosala Seva Trust என்ற பெயரில் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

# பசு மடம்

**பசுக்கள் பாதுகாப்பு இல்லம்**

பெருமாளகரம், திருவேற்காடு (P.O), சென்னை - 600 077. TEL : 2465 932. E-mail:sha siva @ vsnl.net



**ஸ்ரீ காஞ்சி மஹா ஸ்வாமிகளின் அருளுரைக்கு ஏற்ப பசுக்களைப் பாதுகாப்போம் ! பரமானந்தம் பெறுவோம் !**

# அந்த ஒரு வார்த்தை

**கா**துகளில் நேற்று விழுந்த அந்த 'இன்னுமா...?' என்ற ஒரு வார்த்தை என் தூக்கத்தை மெல்ல கொல்ல போதுமானதாக இருந்தது.

'அப்படி எனக்கு என்ன வயசாகிப் போச்சு...?'

கவிட்சைத் தட்டினேன்.

கடியாரம் நள்ளிரவையும் தாண்டி நகர்ந்து கொண்டிருந்தது...!

கண்ணாடியை எடுத்து முகத்தைப் பார்த்தேன். முன் நெற்றி ஏறி, கன்னத்தில் சுருக்கங்கள் விழுந்து, கண்களைச் சுற்றி கரு வளையம்...! முதிர்ச்சியின் ரேகைகள் அப்பட்டமாகத் தெரிந்தன. 'எனக்கு வயசாகிப் போச்சா...?'

'தினமும் பார்க்கிற கண்ணாடிதான்...! இன்றைக்கு ஏன் என் முகத்தை இப்படிக் காட்டுகிறது...? கண்ணாடி பழசாப் போச்சு...! இந்த டியூப் லைட் வெளிச்சத்துக்கு இப்படித் தெரியுது...!' லைட்'டை அணைத்து விட்டு தூங்க முயற்சித்தேன்...!

**நே**ற்று மாறுதலாகி வந்த எங்க செக்‌ஷன் சூபர்வைசர் காந்திதாசன், தம்மைப் பற்றிச் சொல்லிவிட்டு என்னைப் பற்றி விசாரித்தார்.

"ஸாருக்கு எத்தனை குழந்தைங்க...?"

"இன்னும் கல்யாணம் ஆகலை ஸார்...!" தயக்கத்துடன் சொன்னேன்.

"இன்னுமா...?"

இந்த 'இன்னுமா...!' என்ற வார்த்தையைக் கேட்டவுடன், பக்கத்து சீட் மீனா வாயை இடது கையால் பொத்திக் கொண்டு, நமட்டுச் சிரிப்புச் சிரித்தாள்.

அந்த வார்த்தையும், அவளது ஏளனச் சிரிப்பும், என்னைப் பல பேர் முன்னிலையில் நிர்வாணப்படுத்தியது போலிருக்கவே, அவமானம் பிடுங்கித் தின்றது.

"என்ன சார் நீங்க...! உலகம் அழியப் போவுது'னு சொல்றாங்க...! நீங்க என்னன்னா இன்னும் கல்யாணமே பண்ணாம காலத்தக் கடத்திறீங்க...!"

"ஏதேதோ நழுவலான பதில்களைச் சொல்லி அவரைச் சமாளித்தேன் என்றாலும், என்னவோ ஓர் இம்சை கிள்ளிக் கொண்டேயிருந்தது.

**கா**லையில் எழுந்தவுடன் என் முகத்தை கண்ணாடியில் பார்க்கும் பழக்கம் உண்டு...! இன்றைக்கும் பார்த்தேன். என் மனத்தில் இருக்கும் இளமையை முகத்தில் காட்ட மறுக்கிறதே, பாழாய்ப் போன கண்ணாடி. எனக்கே என் முகத்தில் ஒரு முதிர்ச்சி தெரிகிறது...! சவரம் செய்து மூன்று நாள் ஆயிருச்சு...! அதனால கூட இருக்கலாம்...!

சலூனுக்குப் போயிர வேண்டியதுதான். அங்கே தான் சுற்றிலும் கண்ணாடி இருக்கு...! முழு உருவத்தையும் நல்லாப் பார்க்கலாம்...! ரசப் பூச்சு எல்லாம் இந்தக் கண்ணாடியிலே போயிருச்சு...! அதான் முகம்



விகாரமாயிருக்கு...! வீட்டுக்கு நல்ல கண்ணாடி வாங்கணும்...!

சமாதானப்படுத்திக் கொண்டேன்.

**ச**லூனில் சுழல் நாற்காலியில் உட்கார்ந்து, முகத்தை உற்றுப் பார்த்தேன்...! உச்சிக் தலைக்கும் கீழே இலேசான வழுக்கை. காது பக்கம் உள்ள முடியை விரலால் கோதி, வழுக்கையை மறைக்கப் பார்த்தேன்...! முடிவெட்டுபவர் சவரம் செய்யத் தயாரானார்.

பின்னந்தலையைப் பார்க்கப் பார்க்க, எரிச்சலும், இனம் புரியாத கோபமும் அழுகையுமாக வந்தது. முப்பத்து இரண்டு வயது மனக்கண் முன் தோன்றி மறைந்தது.

என்னைவிட பத்து வயது குறைந்தவர்கள்

முத்துபாரதி

எல்லாம் இரண்டு, மூன்று குழந்தைகளுக்கு அப்பா ஆயிட்டாங்க! எனக்கு மட்டும் கல்யாண ஆசை இல்லையா, என்ன? குடும்பச் சூழ்நிலை அப்படி...! வாலிபம் சுமக்கக் கூடாத சுமைகளை காலமும் சூழ்நிலையும் என் தலையிலே கட்டிடுச்சே!

நான்தான் எங்க வீட்டுக்கு ஸ்டாரு...! இரண்டு தங்கைகள்... ஒரு தம்பி. அப்பா மருத்துவக் காரணங்களுக்காக விருப்ப ஓய்வு வாங்கிட்டதனாலே, புண்ணியம் பார்த்து எனக்கு இந்த குமாஸ்தா உத்தி யோகம் கிடைச்சது...!

மூத்தவளுக்கு செவ்வாய் தோஷம்னு ஜோசியர் சொன்னதாலே, இளையவளுக்குக் கல்யாணம் நடந்துடுச்சு. மூத்தவளை பெண் பார்க்க வர்றவங்க யோசிக்கிறாங்க... அவளைக் கல்யாணம் செய்து கொடுக்கா மல், நான் கல்யாணம் பண்ணிக்கலாமா...?

எனக்கும், சில நேரங்களில் மத்தவங்க மாதிரி கொஞ்சம் சுயநலமாயிருக்கலாம்னு நினைப்பு வரத்தான் செய்யுது! ஆனால் அது சரியில்லை. மனசு கேட்கமாட்டேங் கிறது. என்ன தான் மனசு இளமையாயிருந் தாலும் புறத்தோற்றம் என் வாழ்க்கை காலண்டரைக் கிழிச்சுக்கிட்டேதான் இருக்கு!

"என்ன பழனிச்சாமிக்கு எப்ப கல்யா ணம்...?" புதிதாக மகிழ்ச்சியாக இருந்த இந்த வார்த்தைகள் இப்போது நடுக்கத்தை ஏற் படுத்தும், துரத்தும் சொற்களாகி விட்டன.

ஆபிஸில், கல்யாண வீட்டில், தெருவில், ஒரு வேடிக்கைப் பொருளாக ஆகிப் போனேன்...! இதுக்குப் பயந்து நிறையப் பேரை சந்திக்காமலேயே தவிர்த்திருக்கிறேன்! ஏன், ஒரு திருட்டுப் பயலைப் போல மறைந்தும் வந்திருக்கிறேன்.

கடந்த வாரம் வியாழக்கிழமை சாப் பாட்டு அறையிலே, ஒரு சின்ன பிரச்னை...! என் ஜூனியர் பாபு "என்ன பழனி அண்ணே, எப்போ அண்ணி வரப் போறாங்க...? எப்போ கல்யாணச் சாப்பாடு போடப் போறீங்க...?" அவன் சாதாரண மாகக் கேட்டான்.

"இவரு என்னத்த கல்யாணம் பண்ணி...! அதுக்கெல்லாம் ஒரு தில்லு வேணும்...!" சுரேஷ் சீண்டினான். பேச்சு திசைமாறிப் போய் என்னை 'அலி'யாக சித்திரிக்க முற்பட்ட போது, எனது தன்மானம் விழித் துக் கொண்டது...! ஆபிஸ் என்றும் நினைக் காமல் நானும் தாறுமாறாகத் திட்டியதில் இலேசான அடிதடி. விஷயம் மேனேஜர் வரை போய், சிக்கலாயிடுச்சு!

அன்றைக்கு, நான் போட்ட சப்தத்திலே, நிறையப் பேர் பயந்து போயிட்டாங்க! என்னைப் பற்றியும், என் கல்யாணத்தைப் பற்றியும் யாரும் பேசுறதில்லை... மனசுக்கு நிம்மதியா இருந்தது!

இதற்கிடையில், தூரத்துச் சொந்தக் காரப் பெண், டெலிபோன் அலுவலகத்தில் வேலை செய்வதாகவும், அந்தப் பெண் ணோட அண்ணன் (செவ்வாய் தோஷம்) எல்.ஐ.சி.யிலே வேலை பார்க்கிறார்னு சொல்லி, பெண் கொடுத்து, பெண் எடுத்துக் கொள்வதான ஓர் ஏற்பாடு அப்பாகிட்டே வந்தது.

என் மனசுக்குள் ஒரு நெருடல். கல்யாண வயதைத் தாண்டி விட்ட என்னை ஏன் செலக்ட் செய்தார்கள்?

ஏதாவது வில்லங்கம் இருக்குமா... இலேசான சந்தேகம் முளைவிட்டது.

எப்படியானாலும், தெரு... கல்யாண வீடு... ஆபீஸ்... பொது இடங்களில் நான் தலை நிமிர்ந்து நடக்கலாம்...!

'இன்னுமா?' என்ற வார்த்தையைக் கேட்டு நடுங்க வேண்டாம்!

'சரி' என்று சொல்லிவிட்டேன் சந்தோஷ மாக! ○



"நம்ப ரவி கை முறிவுக்குப் போட்டி ருக்கிற மாவுக்கட்டுல என்னவோ எழுதியிருக்கே... என்னது?"

"அவங்க கம்பெனியோட பேராம்! ஆபரேஷன் செலவு மொத்தத் தையும் ஸ்பான்ஸர் பண்ணியிருக்காங்களே.

— ஆர். ஹரிகோபி

# தனநந்தர் புதையல்

மினி தொடர்

ஷிவா கோபப்பட்டான்.

"என்ன விளையாடறீங்களா?"

மறுபடியும் புரபஸர் சோழராஜா நிதானமாகச் சொன்னார். "நிஜம்தான்... சரவணன் ஆறாம் நூற்றாண்டுக்குத்தான் போயிருக்கணும்... ஆனா ஏன் திரும்பி வரலன்னு புரியலை..."

ஷிவா ஏகக் குழப்பமாகி, "புரபஸர்... உங்களுக்கு ஒண்ணும் சைக்கியாட்ரிக் ப்ராப்ளம் இல்லையே?" என்றான்.

"இல்லை..."

ஷிவா, "ப்ளீஸ்... பீ சீரியஸ்..." என்றான்.

'வெயிட்...' என்ற புரபஸர் சோழராஜா கீழே இருந்த தமது சூட்கேஸை எடுத்தார். பிரித்து அதிலிருந்து ஒரு கண்ணாடி பாட்டிலை மேஜை மேல் எடுத்து வைத்தார். அதற்குள் வெளிர் மஞ்சள் நிற திரவம் இலேசாக ஆடியது.

"நான் ஸ்தூபிகளை ஆராய்ச்சி செய்றதுக்காக வட இந்தியா போயிருந்தபோது இதை ஒரு துறவி கொடுத்தார்... சரியாச் சொன்னா சாத்பூரா மலைக்காடுகள்ல இருந்த ஒரு குகையிலதான் அவரைச் சந்தித்தேன்..."

"ம்..."

"சாப்பிட்டா கடந்த காலத்துக்குப் போகலாம்னு சொன்னார். ஆனா எந்த அளவுக்குச் சாப்பிட்டா, எந்தக் காலத்துக்குப் போகலாம்னு அவருக்கே தெரியலை.. கொடுத்தார்.. நானும் வாங்கிகிட்டு வந்துட்டேன்..."

ஷிவா ஒரு மாதிரியாக அவரைப் பார்த்து, "டைம் மிஷின் புருடாவெல்லாம் போய் இப்ப காலத்துக்குத் தகுந்த மாதிரி மூலிகைத் திரவம் தான் ஃபேஷனா?" என்றான்.

புரபஸர் சோழராஜா, "நீங்க நம்பவேணாம்... ஆனால் நான் நம்பறேன்..." என்றார்.

ஷிவா அவரை விநோதமாகப் பார்த்து, "சரி... இதுல சரவணன் எங்க வர்றான்?" என்றான்.

புரபஸர் சோழராஜா, "சொல்றேன்... சரித்திரம் படிச்சிருக்கீங்களா நீங்க?... நந்தா பீரியட் தெரியுமா?..."

"எனக்குத் தெரிஞ்ச ஒரே நந்தா... பாலாவோட நந்தாதான்... மினி உதயத்துல பாத்தேன்..."

புரபஸர் சோழராஜா சிரிக்காமல், "நான் சொல்ற நந்த வம்ச மன்னர்கள் ஆறாம் நூற்றாண்டுல வர்றாங்க. அந்த வம்சத்தில் மகாபத்ம நந்தர் முதல் அரசர்... அவருக்கு எட்டுப் பிள்ளைகள்... எட்டாவது பிள்ளையா வருகிறவர் பெயர் தனநந்தர்... அவரைப் பத்திப் படிக்கும் போதுதான் எனக்கு அந்த பாயிண்ட் கிடைச்சது... அவர் ஆட்சி செய்தபோது தன்கிட்ட இருந்த பெரும் செல்வத்தை, கங்கை ஆற்றுக்கு அடியில ஒளிச்சு வைச்சார்னு ஒரு தகவல் வருது... இந்தத் தகவல் என்னை ரொம்ப பாதிச்



சுது... நிஜமாகவே அந்த தனநந்தர் புதையல் இருக்குதா? எப்படி அதை கங்கைக்கு அடியில வைச்சார்?... வைச்சிருந்தா திரும்ப எடுத்தாரா? திரும்ப எடுத்த மாதிரி வேறே எந்த புத்தகத்திலேயும் வரலையே?... எப்படியாவது எனக்கு அதைக் கண்டுபிடிக்கணும்னு ஆசை... இந்த மூலிகை திரவம் கிடைச்சதும் போய்ப் பாக்கறியான்னு கேட்டேன்... சரின்னு சரவணன் போயிட்டான்" என்றார்.

ஷிவா சற்று அதிர்ந்து, "மை காட்... என்னால நம்ப முடியலை..." என்றான்.

புரபஸர் சோழராஜா, "எனக்கு இந்த திரவத்துல எவ்வளவு சாப்பிட்டா எந்தக் காலத்துக்குப் போவோம்னு தெரியலை... அநேகமாக அவன் சங்க காலத்துக்குத்தான் போயிருக்கணும். கி.மு. ஆறிலிருந்து கி.பி. ஐந்து வரை சங்க காலம்னு வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர் சொல்றார்... இதையே கே.ஆர்.சீனிவாச அய்யங்காரும் ஆமோதிக்கிறார். கூடவே பிரமி கல்வெட்டும் இதை உறுதி செய்கிறது..." என்றார்.

ஷிவா, "அடுத்து சொல்லுங்க..." என்றான்.

புரபஸர், "அடுத்ததுன்னு பாத்தா கயவாகு மன்னனும், சேரன் செங்குட்டுவனும் சமகாலத்து அரசர்கள்னு சிலப்பதிகாரம் சொல்லுதே..." என்றார்.

ஷிவா டென்ஷனாகி, "ப்ளீஸ் புரபஸர்... ஸ்டாப் யுவர் ஹிஸ்டரி...." என்றான்.

"நீங்க தானே சரவணன் எங்க இருப்பான்னு கேட்டீங்க?"

ஷிவா, "காட்... நிஜம்தானா நீங்க சொல்றது?" என்றான்.

புரபஸர், "ஆமா... எனக்கு இதைக் குடிச்சுட்டுப் போகப் பயமா இருக்குது... ரிவிஷன் டெஸ்ட் பேப்பர் எல்லாம் திருத்தணும்... முதலாம் நரசிம்ம வர்மன் பத்தி ஒரு பேப்பர் வேற தயாரிக்கணும்" என்றார்.

ஷிவா, "அய்யோ... உங்ககிட்ட வந்து மாட்டிக்கிட்டனே" என்று அலறி, அவரை வெறுக்கிற பார்வையில் பார்த்து, "ஏதாவது புக்ல போட்டிருந்தா நம்பிடறதா... அதெல்லாம் சும்மா..." என்றான்.

"என்ன, சரித்திரத்தைப் போய் சும்மான்னு சொல்றீங்க?... எல்லாம் நிஜம்... கஷ்டப்பட்டுத் தேடறவங்களுக்குத்தான்

வஸந்த் செந்தில்




# பனியன் பிளாஷ்பேக்!

ஏவி.எம்மின் 'அன்பே அன்பே' படப் பாடல்களை வி.ஐ.பி.களுக்குப் போட்டுக் காட்டினார்கள். அதைத் தொடர்ந்த

தெரியும்... இப்ப சரவணன்னு ஒரு பையன் இருக்கான். ஔவையார் பத்தி கம்ப்ளீட்டா தேடி எடுத்திருக்கான். முறைக்காதீங்க. இவன் வேற பையன். பல்கலைக்கழகத்திலே தமிழ் படிக்கிறான்."

ஷிவா, "அதைச் சொல்லல ஸார்... இப்படி உங்க தனநந்தர் பணம், நகையெல்லாம் கொண்டுபோய் ஆத்துல விடுவாரா? எந்த முட்டாள் செய்வான்? தண்ணிக்கடியில எதைக் கட்டிக் காப்பாத்த முடியும்? அவனுக்கு தன் பணத்தை வைக்க நாட்டில இல்லாத இடமா?... யோசிச்சுப் பாருங்க..." என்றான்.

புரபஸர், "கரெக்ட்... இதைத்தான் நானும் யோசிச்சேன்... ஆனா என்ன நடந்தது? மக்கள்கிட்ட எக்கச்சக்க வரி விதிச்சான்... அரசுக்கு ஏகப்பட்ட பணம்.... மக்கள் விரோதி ஆயிட்டான்... ஒரு அளவுக்கு மேல பணத்தை கஜானாவுல வைக்க முடியாதில்லையா? இந்த யோசனை இருந்துகிட்டே இருந்தது. ஆனா யதேச்சையா ஒரு நாள் புறநானூறு படிச்சா திரும்பவும் அதே செய்தி... நீங்க புறநானூறு படிச்சிருக்கீங்களா?...." என்றார்.

ஷிவா, "சத்தியமா இல்லை..." என்றான்.

புரபஸர், "அடடா... என்ன இவ்வளவு நாள் படிக்காம விட்டுட்டீங்களே? அதுல பாடல் எண் 265 எடுத்துப் பாருங்க... முகையலூர்ச் சிறுகருந் தும்பியார் என்ன சொல்றார்?...

பரிசிலர் செல்வம் அன்றியும் விரி தார்க்
கடும் பகட்டு யானை வேந்தர்
ஒடுங்கா வென்றியும், நின்னொடு
செலவே!

அப்படின்னு பாடியிருக்கார்... இதுல இருந்து என்ன தெரியுது?..." என்றார்.

ஷிவா அலுத்துக் கொண்டு, "புரபஸர்... நீங்க எனக்குப் பேச சான்ஸே குடுக்கல இந்த சாப்டர்ல..." என்றான்.

உள்ளே போய் பாட்டிலைத் திறந்து தண்ணீர் குடித்து விட்டுத் திரும்பினார் பேராசிரியர்.

புரபஸர் சோழ ராஜா, "நான் ஏன் சரவணனை அனுப்பி வச்சேன்னு நீங்க புரிஞ்சுக்கணுமில்லையா? அதுக்காகத்தான் இவ்வளவும் சொல்றேன்... தவிர தனநந்தரை தோற்கடிச்சது சந்திரகுப்த மௌரியர்... சாணக்கியர்தான் திட்டம் தீட்டித் தர்றார்... ஜெயிச்சவங்களும் கங்கை நதிக்கு அடியில இருந்து புதையலை எடுத்ததா எந்த புஸ்தகமும் சொல்லலை... கிரேக்க நூல்களிலேயே இல்லையாம்... கிளியரா சொல்லிட்டாங்க" என்றார்.

ஷிவா பொறுமையிழந்து, "புரபஸர் வேண்டாம்... நமக்குள்ளே சண்டை வேண்டாம்... வயசான ஆளா வேற இருக்கீங்க..." என்றான்.

"நான் தெளிவாத்தானே சொல்றேன்?"

ஷிவா, "எனக்கு வரலாறு வேணாம்... சரவணன் வேணும்..." என்றான்.

"சரவணன் கண்டிப்பா ஆறாம் நூற்றாண்டுல தான் இருக்கணும்" என்றார் புரபஸர் முகத்தை சீரியஸாக வைத்துக் கொண்டு.



நிகழ்ச்சியில் விவேக் பேச எழுந்ததுமே சிரிப்பலை!

"எப்போதும் கைகளைக் கட்டிக் கொண்டு அமைதியாக நிற்கும் ஏவி.எம். சரவணனை அடக்கத்தின் மறு உருவம் என்று சொன்னார்கள். அது ரொம்பவும் சரி! ஒரு சின்ன ஃபிளாஷ்பேக். தொட்டில் பழக்கம் சுடுகாடு வரை என்பார்கள். அப்படியானால், இப்படி எப்போதும் கைகளைக் கட்டிக் கொள்கிற பழக்கம் அவருக்கு சின்ன வயதிலேயே வந்திருக்க வேண்டும். இவர் சிறு வயதில் கைகளைக் கட்டிக் கொண்டு இருக்கும் போது, இவருக்கு பனியன் போட்டு விட அவரது அம்மா என்ன கஷ்டப்பட்டிருப்பார் என்று நினைத்துப் பார்க்கிறேன்" என்றதும் ஒரே கைத்தட்டல்தான்!

விவேக் என்ன சொன்னாலும், சிரிப்பு வருதே! அதற்குப் பெயர்தான் மார்க்கெட் மவுசா?

தகவல் : மௌலி

"மை காட்..." என்று தலையில் அடித்துக் கொண்ட ஷிவா, "எனக்கு இன்னைக்கு டைமே சரியில்லை... ஒழுங்கா படத்துக்குப் போயிருந்தா ரெட்டை ஜடை ஜோதிகா வைப் பாத்திருக்கலாம்" என்று முனகினான்.

"யார் அது?" என்றார் புரபஸர்.

ஷிவா கை நீட்டி, "வேணாம்... அது யாருன்னு உங்களுக்குத் தெரிய வேணாம்... சரவணனுக்குத் திரும்பி வர்ற வழி தெரியுமா தெரியாதா அதைச் சொல்லுங்க..." என்றான்.

"தெரியும்... ஆனா ஏன் வரலைன்னுதான் தெரியலை?"

ஷிவா, "இப்படியெல்லாம் இந்த மஞ்சத் தண்ணியைக் குடிச்சு ரிஸ்க் தேவையா? இப்ப அந்தப் புதையலை கண்டுபிடிச்சு என்ன ஆகப் போகுது?" என்றான்.

புரபஸர் வேகமாக, "என்ன இப்படிச் சொல்லிட்டீங்க... ஆர்கியாலஜில சரண்டர் பண்ணுவேன்... பதினைந்து நூற்றாண்டுக்கு அப்புறம் புரபஸர் சோழராஜாதான் தஞ்சாவூர் புதையலைக் கண்டுபிடிச்சார்னு எங்க ஜர்னல்ல செய்தி போடுவாங்க... சந்தோஷமில்லையா?..." என்றார்.

ஷிவா படுகடுப்பாக, "ரொம்ப சந்தோஷம்..." என்றான் கைகளைக் குவித்து வணங்கி.

புரபஸர், "சரவணன் வேற வர்றதுக்கு லேட்டாகுது... நல்ல பையன்... இவனாவது தீஸிஸ் சீக்கிரம் முடிப்பான்னு நினைச்சேன்..." என்றார் கவலையாக.

ஷிவா அவரைப் பார்த்து, "அண்ணா நகருக்கா அனுப்பியிருக்கீங்க... ஆறாம் நூற்றாண்டுக்கு அனுப்பியிருக்கீங்க... வர்றதுக்கு கொஞ்சம் லேட்டாதான் ஆகும்... எடுங்க அந்த மஞ்சத் தண்ணியை..." என்றான்.

"அய்யோ...நீங்களும் போறீங்களா?..." என்று அலறிய புரபஸர், "நான் தள்ளி நின்னுக்கறேன்" என்றார்.

"ஏன்?"

"எனக்கு டிராவல் பண்ணினா வாந்தி வரும்..."

ஷிவா டமாரென்று தலையில் அடித்துக் கொண்டான்.

"பாருங்க புரபஸர்... எனக்கு இதைக் குடிச்சு ஒண்ணும் ஆகலன்னா... உங்களை ஜெயில்ல வைச்சு பின்னிருவேன்."

"என்ன இப்படிப் பேசறீங்க? ஐ ஆம் எ ஹெச்.ஓ.டி. டவுன் டாக்ட்ரேட் இன் ஹிஸ்டரி..."

"யோவ் சும்மாயிருய்யா?" என்று கத்திய ஷிவா, அந்த வெளிர் மஞ்சள் நிற திரவத்தை உற்றுப் பார்த்தான். இதற்குள் இத்தனை விநோதங்கள் சாத்தியம்தானா? ஒரு நிமிடம் யோசித்தான்.

"புரபஸர் சாக மாட்டேன் இல்லை?"

"இல்லை..."

"சரவணன் எவ்வளவு குடிச்சான்?"

"ஆறு சொட்டு..."

அருகில் இருந்த பில்லர் எடுத்து அந்த திரவத்தை உறிஞ்சிய ஷிவா, அண்ணாந்து பார்த்து வாயில் ஆறு சொட்டுக்கள் விட்டுக் கொண்டான்.

(தொடரும்)

# ‘முணுக்’ கோபத்துக்கு முற்றுப்புள்ளி!

ஆர்.கண்ணன்



• படம்: டிஜிட்டல் சண்முகம்

ஒரு தனியார் நிறுவனத்தில் அதிகாரியாக இருந்தார் நண்பர். எந்தவிதக் கெடுபிடி வந்தாலும், தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு, அலட்டிக் கொள்ளாமல், அடுத்த வேலையைக் கவனிப்பார். எளிதில் எதற்கும் உணர்ச்சி வசப்பட்டு விட மாட்டார். அதனால் அனாவசியமாக வாயைக் கொடுத்து மாட்டிக் கொள்ள மாட்டார். கடுமையான வேலைகளுக்கு இடையே, “இந்தக் குறிப்பிட்ட புள்ளி விவரம் இன்று மாலையே தரப்பட வேண்டும்” என்று தலைமை அலுவலகத்திலிருந்து ஈ மெயில் வந்தால், உடனே “என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் இவர்கள்? நான் என்ன மனுஷனா, மெஷினா?” என்றெல்லாம் பொரிந்து கொட்ட மாட்டார். கையிலிருக்கும் வேலையை ஒதுக்கி ஓரமாக வைத்து விட்டு, தலைமை அலுவலக அதிகாரி கேட்ட புள்ளி விவரங்களைச் சேகரிக்க ஆரம்பித்து விடுவார். மாலைக்குள் அவற்றை ஈ மெயிலில் அனுப்பி விட்டு, மறுபடி ஒரு புன்னகையுடன் காலையில் விட்ட பணியை எடுத்துக் கொள்வார். “உணர்ச்சிகளுக்கு அடிமையாகி விட்டால் அவ்வப்போது கோபம்தான் வரும். வேலை நடக்காது!” என்பார் அந்த நண்பர். புத்திசாலித்தனம் உள்ள எவரும் உணர்ச்சிகளுக்கு எளிதில் அடிமையாகி விடுவதில்லை.

சரி, புத்திசாலித்தனம் என்பது என்ன? தினசரி வாழ்க்கையிலிருந்து நாம் கற்கும் பாடத்தின் சாரம் என்று கூடச் சொல்லலாம்.

புத்திசாலித்தனத்தை எப்படி ஒருவரிடம் அளவிடுவது? அறிந்து கொண்டும், தெரிந்து கொண்டும், புரிந்து கொண்டும், படித்தும், ஆராய்ச்சி வாயிலாகவும் பெறும் அறிவு எல்லாம் சேர்ந்ததுதான் புத்திசாலித்தனம். அதாவது இன்டெலிஜென்ஸ். இதற்கு அளவுகோலாக

ஏறு நூறு
10

ஐ.க்யூ (IQ) என்பார்கள். உணர்ச்சிகளை அப்படி உயர்ந்த இடம் கொடுத்து மதிக்காமல், அற்பமானதாக ஒதுக்கி வைத்திருந்தார்கள். ஆனால் இன்றைக்கு என்னவோ உணர்ச்சி (emotion) எல்லார் பேச்சிலும் சரளமாகவும், சகஜமாகவும் அடிபடத் தொடங்கி இருக்கிறது. அதனால் புதிதாக உருவாகி இருக்கிறது இமோஷனல் இன்டெலிஜென்ஸ்!

அது என்ன இமோஷனல் இன்டெலிஜென்ஸ்? வேறு ஒன்றுமில்லை. உங்கள் உள்மனத்துடனும், வெளியாருடனும் நீங்கள் கொண்டிருக்கும் தொடர்புகள் காரணமாக உருவாகும் பாஸிடிவ் முடிவுகள்தான். தன்னுடைய உணர்வுகளையும், அதே சமயம் அடுத்தவர் உணர்வுகளையும் மிகச் சரியாகப் புரிந்து கொண்டு, புத்திசாலித்தனமாக நடந்து கொள்ளுவது.

உணர்ச்சிகளுக்கும் கேரியர் சமாசாரத்துக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்கலாம். இருக்கிறது.

கெட்டிக்காரத்தனமாக உணர்ச்சிகளைக் கையாளப் பழகிவிட்டால், லீடர்ஷிப் எனப்படும் தலைமைத் தகுதி, விற்பனைத்துறை படிப்பில் ஈடுபாடு, நட்பு, ஏன் உடல்நலம் கூட உயர்வு பெறும்.

சமீபத்திய ஓர் ஆய்வின்படி, பள்ளிப் படிப்பு முடிந்து பல்கலைக் கழகம் செல்லும் காலகட்டத்தில், பல்வேறு மேன்மையான உணர்வுகளும், சமூகச் சார்புத் திறனும், கல்வியில் வெற்றி காண உதவியதாகக் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஒருவருக்கொருவர் நட்புப் பரிமாறலில், அனுசரித்துப் போவதில், மன அழுத்தத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ளுவதில் இவர்கள் வெற்றி கண்டார்கள். கல்வித் தேர்ச்சியிலும் முதலாவதாக இருந்திருக்கிறார்கள். கல்வியில் வெற்றி பெறுவது என்பது, அந்த அளவுக்கு உள் உணர்வுகளுடன் பிணைந்தே இருக்கிறது.

இப்போது எழும் முக்கியக் கேள்வி: உணர்ச்சிகளைக் கையாளுவது எப்படி?

ஒவ்வொரு தனி நபருக்கும் உணர்ச்சிகள் ஒவ்வொரு விதமானவை. சிக்கலானவையும்கூட. 'ஒரே உணர்ச்சிக் குவியலாக இருக்கிறார் அவர்' என்பார்களே? ஒவ்வொரு மனிதனும் பயம், மகிழ்ச்சி, கோபம், துக்கம், வெறுப்பு, ஆச்சர்யம், பரஸ்பர ஏற்பு,



எதிர்பார்ப்பு என எட்டு வகை உணர்வுகளுக்கு ஆளாகிறாராம்! ஒவ்வோர் உணர்வுக்கும் ஒவ்வொரு வகை வெளிப்பாடும், அதற்கான காரணமும், பலனும் இருக்கிறது.

மனித மூளை இருக்கிறது. அது சில வாடிக்கையான பழக்கங்களுக்கு ஏற்ப இயங்கக் கூடியது. இதன் காரணமாகச் சில சமயம் சில உணர்வுகளுக்குத் தன்னிச்சையாக இயங்கத் தொடங்கிவிடும். தூண்டுதலே வேண்டாம். இவற்றை அறிந்து கொண்டால் போதும். நாம் இந்த வாடிக்கையான பழக்கங்களை இனம் கண்டு கொள்ள வேண்டும். அவற்றை உணரத் தொடங்கிவிட்டால், வாடிக்கையான பழக்கங்களுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிடலாம். சிலருக்கு அற்பமான விஷயத்துக்கெல்லாம்கூட முணுக்கென்று முன்கோபம் வந்துவிடும். பதிலில் அது பட்டாசு மாதிரி வெடிக்கும். இதுதான் நாம் தன்னிச்சையாக ரியாக்ட் செய்யும் வழக்கமான (கெட்ட) குணம் என்று உணர்ந்து கொண்டுவிட்டால், அதைக் களைவது எளிது!

தக்க விதத்தில் உணர்வுகளைக் கையாள வேண்டாமா? இதற்கு உணர்வுகளின் பின்னே என்ன இருக்கிறது என்பதை அறிந்துகொண்டால் போதும். எளிதாகிவிடும். இல்லையா?

"உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள்" என்று வலியுறுத்துவார்கள். ஆனால் இது உண்மையில் சாத்தியம் தானா? நாம் கட்டுப்படுத்த வேண்டியது உணர்ச்சிகளை அல்ல. அதன் வெளிப்பாடான செய்கைகளை; குறிப்பாக, சிக்கல்

## ஸ்வேனர் திருமலை!

'கீதை' தமிழ்ப் புத்தாண்டுக்கு வெளியாகாமல் பின்வாங்கி விட்டாலும் அதைப் பற்றியெல்லாம் யோசித்துக் கொண்டிருக்காமல் அடுத்த படத்தில் பிஸியாகிவிட்டார் விஜய்.

பாலச்சந்தரின் கவிதாலயா தயாரிக்கும் 'திருமலை' படத்தில் விஜய்க்கு முரட்டு மெக்கானிக் வேடம். ஒவ்வொரு படத்திலும் ஒரு புதுக் கதாநாயகியை விரும்பும் விஜய்க்கு இந்தப் படத்தில் நம்ரதா கிரோத்கான் ஜோடி. 'வாஸ்தவ்' இந்திப் படத்தில் கலக்கினாரே அதே அம்மணிதான். படத்தை 'ரமணா' என்ற புதியவர் எழுதி இயக்குகிறார்.

---

க்ளை அல்லது பிரச்னைகளைக் கையாளும் போது. இங்கேதான் 'செல்ஃப் டாக்' எனப்படும் மனசுக்குள்ளேயே உரையாடும் கலை உதவியாக இருக்கும். பல்வேறு வாய்ப்புக்களை எடுத்துக் காட்டும். பல்வேறு கோணங்களைச் சுட்டிக் காட்டும் (உள் மனசு உரையாடுவது மாதிரி எத்தனை திரைப் படங்களில் பார்த்திருக்கிறோம்!.

ஒருவருக்கொருவர் இடையே சிக்கல்கள் எழுவது மனித சுபாவம். சிறு வயதிலிருந்தே இது ஆரம்பமாகி விடுகிறது. நர்சரி பள்ளியில் சேர்ந்திருக்கும் குழந்தைகள் விளையாடும்போது கவனித்துப் பாருங்கள். இது புரியும். உங்கள் உணர்வுகளைக் கையாளுவது போலவே, பிறரது எண்ணங்களையும், உணர்வுகளையும் புரிந்து கொள்ள முயலுங்கள். அப்போதுதான் எளிதாக நட்பு மலரும். உங்கள் குழந்தைகளுக்கு அத்தகைய ரோல் மாடலாக நீங்கள் இருந்துவிட்டால் அது அவர்கள் அடி மனத்தில் பதிந்து போகும். இதற்கு நிறைய வாய்ப்புகளைக் குழந்தைகளுக்கு அளிப்பது பெற்றோர்களின் கடமை என்பேன்.

குழந்தைகளும் பொறுப்பானவர்களாக, கடமை உணர்ந்தவர்களாக வளர வேண்டும். தவறு என்று தெரிந்து விட்டால் உடனே குறுக்கிட்டுத் திருத்துவதோடு, மாற்று என்ன என்பதையும் சொல்லிக் கொடுக்க வேண்டும். உங்கள் சொல்லும், செயலும் ஒரே மாதிரி இருக்க வேண்டும்!

தூண்டுதல்கள் தேவைதான். ஆனால், "நீ நன்றாகப் படித்தால் உனக்கு சாக்லேட் தருவேன்!" போன்ற ரகமாய் இருக்கலாகாது. இந்த மாதிரி தூண்டுதல்கள் அதிக காலம் தாங்காது.

குழந்தைகளிடம், வேறு வகை தூண்டுதல்கள்தான் வெற்றி பெறும்.

"அடக்கமாகப் பேசு" என்று சொன்னால், அதனால் என்னவித அனுபவம் கிடைக்கும் என்பதையும், அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசினால் என்ன பலன் கிடைக்கும் என்பதையும் உணர்ந்து கொண்டு விடும் அளவுக்கு, யோசனை தரப்பட வேண்டும்.

ரவி நாணயமான பையனாக இல்லாத போதும், அவன் அம்மா அவனை அப்படிப் பட்டவனாகவே நடத்தினாள். அவன் அதை உள்வாங்கிக் கொண்டதோடு, அம்மாவின் எதிர்பார்ப்பைப் பூர்த்தி செய்வதில் தன் குணத்தையே மெல்ல மாற்றிக் கொண்டான்.

இன்றைக்குச் சொல்லிவிட்டு, நாளையே மாறி விடுவான் என்று எதிர்பார்க்காதீர்கள். கொஞ்சம் அவகாசம் கொடுங்கள்!

அடுத்தவர் உணர்வுகளுக்கும் மதிப்புக் கொடுக்க வேண்டும். சிலர்க்கு தன்னிச்சையாகவே அப்படி நடந்து கொள்ளுமாம். இன்னொரு சிலர் கஷ்டப்பட்டால் தாங்காதாம்.

குழுவில் இருந்து பேசும்போது, பிறர் உணர்ச்சிகளுக்கு இடம் கொடுத்து, பரஸ்பரம் விட்டுக் கொடுத்துப் புரிந்து கொள்ளும் கலகலப்பான மன உணர்வு, எல்லோரையும் அரவணைத்துச் செல்லுகிற சூழ்நிலையை உருவாக்கும். சிக்கல்கள் எழா.

உங்கள் உணர்வுகளை நன்றாக அறிந்து கொண்டு கையாளத் தொடங்கும்போது, பிறர் உணர்வுகளை அறியும் அனுபவம் தானாக உங்களுக்குக் கை கொடுக்கும். அப்போது நட்பும் மலரும். உங்களுடன் கைகோத்து நடக்க எல்லாரும் தயாராக இருப்பார்கள்! ○

அடுத்த வாரம்: இட்டே வந்துவிட்டது தொலைதூரக் கல்வி!

**உங்கள் சந்தேகங்களையும், கேள்விகளையும் kalki@careersindia.comக்கு அனுப்பி வையுங்கள்.**

படம்: யோகா

'அப்பு', 'இடியட்' 'தம்' (கன்னடம்)... எல்லாமே சூப்பர் ஹிட் படங்கள். இந்தப் படங்களில் கதாநாயகியாக நடித்த கன்னட கதாநாயகி ரக்ஷிதாதான் புஷ்/சதாம் ஹுசேனுக்கு அடுத்தபடியாக பரபரப்புச் செய்தியாக பேசப்படும் நபர். 'நான் இன்றைய மங்கை' என்ற ரீதியில் படபடவெனப் பேசும் சிவகாசிப் பட்டாசு! தெலுங்கு, கன்னடம் இரு மொழி முன்னணி ஹீரோயின். 'தம்' படத்தில் ஜோடி சேர்ந்ததன் மூலம் தமிழக மக்களுக்கு அறிமுகமாகியிருக்கும் காவேரி எக்ஸ்பிரஸ்! கவர்ச்சி ஜிகு ஜிகு!

பெங்களூர் ஜே.பி நகரில் ரக்ஷிதாவை நாம் அவருடைய பாசறையிலேயே அட்டாக்கினோம். ஹை ஸ்கூல் மாணவி தோற்றம், மேக்கப் மைனஸ் ஆன ஆவின் முகம். ஒரு கையில் மொபைலுடன் (பின்னே பக்வத்கீதையா?) நம்மை சிறிது காக்க வைத்து, பொறுமைக்கு இலேசாக டெஸ்டு வைத்தார். நாம் டிஸ்டிங்ஷனில் பாஸான பிறகு (நிருபரா கொக்கா) ரட்சிக்க எதிர்கொண்டார், ரம்மியமான சிரிப்புடன்!

"எங்களுடையது சினிமா குடும்பம்தான்! அம்மா மமதா ராவ் பிரபல நடிகை. எங்கப்பா கௌரிசங்கர் சினிமாடோகிராபர். 'புஷ்பக்' (தமிழ் 'பேசும்படம்') படத்துக்குக்கூட அவர்தான் ஒளிப்பதிவாளர். எனக்கு இரண்டு வயசாகும் போதே அப்பாவும் அம்மாவும் பிரிஞ்சுட்டாங்க. ஆனால் இன்னும் என் அப்பாவுடன் எனக்கு நல்ல சிநேகமிருக்கு. பிறகு என் அம்மா சதீஷ் என்பவரைத் திருமணம் செஞ்சுக்கிட்டாங்க. என் வளர்ப்புத் தந்தையும் நல்லவருதான். என்கிட்டே அன்பா பாசமா இருக்காரு. என் அத்தை (சதீஷின் சகோதரி) அஸ்வினி (உதிரி பூக்கள், இந்திரா) பிரபல தமிழ் நடிகை..." பயோடேட்டாவைச் சமர்ப்பித்தார்.

'நடிக்க வர வேண்டும், ரசிகர்களின் கனவில் வந்து இம்சிக்க வேண்டும், கோயில் கட்ட வைக்க வேண்டும்..' என்ற எந்த 'டும்'முமே இல்லாமல்தான் இருந்தாராம் ரக்ஷிதா. பிறகு மனம் மாறியது எப்படி?

"காலேஜில் படிக்கும்போது சூடேற்றி விட்டாங்க. 'உங்க வீட்லே எல்லோருமே சினிமாவில இருக்கும் போது நீயும் ஹீரோயினாகத்தான் ஆக வேண்டும்'னாங்க. வீட்டில் சொன்னபோது அம்மா முதவில் மறுத் தாங்க. பிறகு ஒப்புதல் தந்தாங்க. போட்டோ செஷன் செஞ்சோம். அப்போதுதான் பார்வதம்மா ராஜ்குமார் தன் மகன் புனிதத்திற்காக 'அப்பு' என்ற படம் எடுக்கிறார் என்றும், ஹீரோயின் தேடிக் கொண்டிருக்கிறார் என்றும் அறிந்தேன். போட்டோவெல்லாம் பார்த்தாங்க. ஒரு மாதம் ஓடிப் போய்விட்டது. எந்த பதிலும் இல்லை. பிறகு திடீரென ஒரு போன்கால்! நான் கதாநாயகி ஆகி விட்டேன். 'அப்பு' படம் சூப்பர் டூப்பர் ஹிட். முதல் படமே நல்ல பெரிய பேனர். இதில் யாருடைய ரோல் பெரிசு என்றெல்லாம் இல்லை. நடிப்புன்னா என்னன்னே தெரியாமலே, நடிச்சு, படமும் ஹிட்டாயிடுச்சு! (உண்மை பேசுவதற்கெல்லாம் ஆஸ்கர் கிடையாதா? தெரியாமத்தான் கேக்கறேன்) பிறகு அதே டைரக்டர் பூரி ஜெகன்னாத் அதே படத்தை தெலுங்கில் 'இடியட்' என்று எடுத்தார். பயங்கர வெற்றி!" சந்தோஷம் முகத்தில் தெரிகிறது. ரக்ஷிதா அந்த





படத்தில் ஹீரோவைப் பார்த்தாலே 'இடியட்' என்பாராம். வசவு இல்லீங்க! 'I Do Isha Only Tumse' (நா உன்னை மட்டும்தான் காதலிப்பேன்) என்பதன் சுருக்கம்.

சரி, தமிழில் சிம்புவுடன் ஜோடி சேர்ந்த கதை தெரிய வேணாமா?

"முதல் நான் பூஜையன்று தயாரிப்பாளர் என்னை சிம்புவுக்கு அறிமுகம் செய்து வைத்தார். ஒரு மாதிரி ஸ்டைலாகத் தலையசைத்துவிட்டு, சேரில் உட்கார்ந்தார். நான் மனசில் படபடத்தேன். "ரொம்பத்தான் ஹெட் ஸ்ட்ராங்கா? நான் நடிச்ச தெல்லாம் ஹிட்தான்யா. உனக்கு வைக்கறேன் வேட்டு" என்றெல்லாம் திட்டினேன். ஆனால் படத்தில் நடிக்க ஆரம்பித்தவுடன் பயங்கர தோஸ்தாயிட்டோம். சிம்பு ஒரு நல்ல டைப்" என்று சிலாகித்தார்.

தமிழல் ஆனா ஆவன்னாகூட பேச வராமலேயே தமிழ் ஹீரோயினாயிருக்கும் வரிசையில் இன்று ரக்ஷிதா. வாழ்த்தி வரவேற்பது தானே நம் பாணி, ஸாரி பணி!

- லதா சேகர்

# கவர்ச்சி ஜிகு... ஜிகு...!

ஸ்ரீ ராமஜெயம்



# ஸ்ரீ மாருதி டிராவல்ஸ்

தொலைபேசி எண் **25511786** Cell No.98400 66227

10/1, ராஜேஸ்வரி தெரு, பெரம்பூர், சென்னை — 600 011

(நாம சங்கீர்த்தனத்துடன் அன்பர்களை அழைத்துச் செல்லும் ஆன்மீக சுற்றுலா குழு அமைப்பாளர்கள்)

① **13.6.2003** முதல் **16.6.2003** வரை : *சனிப்பெயர்ச்சியினை முன்னிட்டு* நவக்கிரக ஸ்தலங்களுக்கு யாத்திரை. 35 இருக்கைகள் கொண்ட டீலக்ஸ் பஸ், இரவு தங்குதல் உட்பட கட்டணம் ரூ.625/- சாப்பாடு செலவுகள் அவரவருடையது.

② **July 2003 :** புனித புண்ணிய கைலாஷ், மானசரோவர் புனித யாத்திரை.

③ **11.8.2003** முதல் **19.8.2003** வரை : 9 நாட்கள் பாண்டிய நாட்டு நவதிருப்பதிகள், கேரள தேச மலைநாட்டு திருப்பதிகள். கட்டணம் ரூ. 3400/-

④ **7.9.2003** முதல் **22.9.2003** வரை : 16 நாட்கள் பத்ரிநாத், கேதார்நாத், ரிஷிகேஷம், தேவப்பிரயாகை, ஹரித்துவார், ஆக்ரா, மதுரா, பிருந்தாவனம். பத்ரிநாத் - திவ்யதேசத்தில் 15.9.2003 அன்று "ஸ்ரீ லக்ஷ்மி ந்ருஸிம்ஹ மூல மந்ர காயத்ரி ஹோமம்" ராமகதா ரத்னம், ஸ்ரீமான் ப்ரும்மஸ்ரீ தியாகராஜ ஸர்மா அவர்களால் நடத்தி வைக்கப்படும். கட்டணம் இரயில் 3 A/c வருபவர்களுக்கு ரூ.7350/-, சாதாரண இரண்டம் வகுப்பு ரூ. 5650/- டில்லியிலிருந்து 10 நாட்கள் பத்திரநாத், கேதார்நாத் மட்டும் கட்டணம் ரூ. 4100/-. டில்லியிலிருந்து புறப்படும் நாள் 09.09.03 இரவு 9 மணிக்கு. திரும்புகின்ற நாள் 18.9.03 இரவு 9 மணி.

⑤ **20.10.2003** முதல் **28.10.2003** வரை : 9 நாட்கள். தீபாவளி பண்டிகையை முன்னிட்டு புனித கங்காஸ்நான காசி யாத்திரை. காசி, அலகாபாத், அயோத்தியா, பூரி ஜெகனாதர் கோனார்க், புவனேஸ்வர் 3 A/c இரயில் கட்டணம் ரூ.5350/-, சாதாரண இரண்டாம் வகுப்பு ரூ. 3650/-



⑥ **5.11.2003** முதல் **19.11.2003** வரை : 15 நாட்கள். குஜராத் மற்றும் ராஜஸ்தான் மாநிலத்தில் உள்ள பஞ்ச துவாரகை மற்றும் புஷ்கர், மவுண்ட் அபு, சோம்நாத், அம்பாஜி, ஜெய்ப்பூர் 3 A/c இரயில் கட்டணம் ரூ.7850/-, இரண்டாம் வகுப்பு ரூ. 6100/- முழு விவரமறிய சுய விலாசமிட்ட ரூ. 5/-ஸ்டாம்ப் அடங்கிய கவருடன் விண்ணப்பிக்கவும்.

பங்கு பெறுவீர்! பாக்கியவான்களாவீர்! விவரங்களுக்கு: **V.சீனிவாசன்** *(அமைப்பாளர்)*

---

உ

*ஸ்ரீ ராமஜெயம்*

*உண்மை!* *உழைப்பு!!* *உயர்வு!!!*



# தமிழ்நாடு பிராமணர் சங்கம் (RMD Dist) Trust

இராமநாதபுரம் மாவட்டம்

**மீண்டும் ஒரு வேண்டுகோள்**

நமஸ்காரம்,

எங்களது வேண்டுகோள்களை ஏற்று நன்கொடைகளை அனுப்பி ஆதரவு தந்திட்ட தர்ம சிந்தனையுடைய நல்உள்ளங்களுக்கு எங்களது பணிவான நன்றிகள்.

இராமேஸ்வரம், தேவிப்பட்டிணம், திருப்புல்லாணியில் யாத்திரையினர் தங்கிட அறைகள் ஏற்படுத்துதல், இராமநாதபுரத்தில் அனைத்து சமுதாயத்தினரும் பயன்படுத்தக்கூடிய **சமுதாயத் திருமண மண்டபம்** கட்டும்பணிகள் உங்கள் ஆதரவுடன் செய்திட முயற்சித்துள்ளோம்.

கல்கி வாசகர் குடும்பம் ஒவ்வொன்றும் இத்திருப்பணியில் பங்கு கொள்ள அன்புடன் வேண்டுகிறோம். குறைந்த அளவு நன்கொடையாக ரூ.101யை 15.05.2003க்குள் மணியார்டர் செய்ய பிரார்த்திக்கின்றோம்.

**எம்.எஸ்.பாலகிருஷ்ணன்,** மாவட்டத் தலைவர், மற்றும் **கிளை தலைவர்கள், நிர்வாகிகள்**

நன்கொடைகளை அனுப்ப வேண்டிய முகவரி

**எஸ்.முத்துசீனிவாசன்,**

மாவட்ட பொருளாளர்

*31, வடக்குரத வீதி, இராமநாதபுரம் - 623 501 போன் : 223583*

# மீண்டும் மீரா!

திரைப்படமாக வந்து, ரசிகர்களைக் கட்டிப் போட்ட எம்.எஸ். சுப்புலட்சுமியின் 'மீரா' தமிழ்ப் பாடல்களை அப்படியே வைத்து, மேடையில் பரத நாட்டிய நிகழ்ச்சி நடத்தினார் ஷோபனா பாலசந்திரா!

ஏன் 'மீரா?'

"ரொம்ப வருஷமாக 'மீரா' பாடல்களைக் கேட்டுக் கொண்டே இருக்கிறேன். ஒவ்வொரு தடவை கேட்கும்போதும் மனத்தை உருக்கிக் கொண்டே இருக்கிறது. அந்தப் பாடல்களும் அவற்றுக்கான இசையும் மனத்தை விட்டு அகலவே இல்லை. காரில் போகும்போதெல்லாம் கேட்டுக் கொண்டே இருப்பேன். கேட்கும்போதெல்லாம் இவற்றை மேடையில் நடனமாக வழங்க வேண்டும் என்று தோன்றிக்





• ஷோபனா பாலசந்திரா

கொண்டே இருக்கும். இப்போதுதான் வேளை வந்தது" என்கிறார் ஷோபனா.

"சரி. ஆனால் இந்தப் பாடல்கள் பரத நாட்டிய பாணி நடனத்துக்குச் சரிப்பட்டு வருமா?"

"ஸ்கோப் இருக்கிறதா என்று பார்த்தால் இல்லைதான். ஆனால் நான் முயன்று பார்த்திருக்கிறேன். மீராவின் வாழ்க்கையை மூன்று பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டேன். இளம் பக்தையான மீரா, முதல் பகுதி. மன்னர் ராணாவை மணந்து கொண்ட மீரா, இரண்டாம் பகுதி. மூன்றாம் பகுதியில் கிருஷ்ணரைத் தேடும் மீரா."

"அப்படியானால் பாடல்களை முன்னும் பின்னுமாக மாற்றி அமைத்துக் கொண்டிருக்கிறீர்களா?"

"ஆமாம்! கதையை மாற்றவில்லை. பாடல்களின் வரிசையை, படத்தில் போல் அல்லாமல் மாற்றியிருக்கிறேன். சிருங்கார ரசம் இருந்தாலும், அது கடமை உணர்ச்சியோடு கூடிய, பக்தி பூர்வமான விதத்தில் இருக்கும்."

நடன வடிவமைப்பில், மூத்த சகோதரி ராதிகா கர்ஜித் மிகுந்த உதவி செய்திருக்கிறாராம் இவருக்கு.

ஒன்றே கால் மணி நேரத்தில் முடிந்து விட்டது நிகழ்ச்சி. "ஆனால் அதன் தாக்கம் 'மீரா' படம் போல, அதன் பாடல்கள் போல, பல வருடங்களுக்கு இருக்கும்" என்கிறார் ஷோபனா.

— சாருகேசி

# கல்லுக்குக் கல்தா!

'மனிஷா கொய்ராலாவுக்கு, பித்தப் பையில் கல், கமல் ஹாசனுக்கு சிறுநீரகத்தில் கல்' என்றெல்லாம் நாலு பத்திக்கு செய்தி படிக்கும்போது, 'திக்' என்கிறது. மினரல் வாட்டரை மட்டுமே பருகும் சினிமா நட்சத்திரங்களுக்கே கல் பிரச்னை வந்தால், கூவம் ஆற்றங்கரையோரம், லாரித் தண்ணீர் குடித்து 'தேமே' என்று வாழும் சாமான்யனின் கதி என்னாகுமோ என்ற காப்ரா கிளம்புவது நியாயம்தானே?

சென்னை ஜி.என். சாலையில் உள்ள 'ஜெனரல் சர்ஜிகல் கிளினிக்' டாக்டர் எஸ். அஷோக், நம்முடைய சில சந்தேகங்களுக்கு விளக்கமளிக்கிறார்.



• கின்னஸ் கற்கள்?

**சிறுநீரகக் கற்கள், பித்தப் பை கற்கள் எல்லாம் ஏன் ஏற்படுகின்றன?**

மாசு மலிந்த குடிநீர், உடல் சூடு இவற்றால் சிறுநீரகத்திலும் கொழுப்புச் சத்து கூடி, உறைந்து போவதால் பித்தப் பையிலும் கற்கள் உருவாகின்றன. முதலில், சிறு மணல் போல் தேங்க ஆரம்பிக்கும். இவை நாளடைவில் சிறு சிறு கற்களாக இறுகி விடுகின்றன. இது தவிர, கணையத்திலும், சிறு குடலிலும்கூட கற்கள் உருவாகின்றன.

பித்தப் பை கல், கொலஸ்ட்ரால் கல், பைலிருபின் கல், (சில சமயம் இவை மூன்றும் கலந்த மிக்ஸட் ஸ்டோன்ஸ்) போன்றவை பித்தப் பையில் உருவாகின்றன. பாஸ்பேட் கற்கள், யூரிக் அமிலக் கற்கள், சுண்ணாம்புக் கற்கள் போன்றவை சிறுநீரகத்தில் உருவாகின்றன.

பித்தப் பையில், பைலிருபின் கற்கள் தோன்றுவதற்குக் காரணம், உயிர்மக் கூறுகளே (மெடபாலிக்) என்று நம்பப்படுகிறது. பித்தப் பையில் 'ஈகோலின்' என்ற கிருமியால் அழற்சி உண்டானாலும், ஹார்மோன் பிரச்னையாலும், பித்தப் பையில் கற்கள் உண்டாகின்றன. வேளா வேளைக்குச் சாப்பிடாமல், வயிற்றைக் காயப் போடுபவர்களுக்கும் பித்தம் சுரந்து, உறைந்து, கல்லாக மாறி விடும் அபாயமிருக்கிறது. குறிப்பாக ரம்ஜான் போன்ற நோன்பு மாதங்களில், பலர் பித்தப் பை பிரச்னையால் அவதிப்படுவதை அனுபவத்தில் பார்த்திருக்கிறேன்.

நீங்கள் குறிப்பிடும் நடிகைகூட, அதீதமாக 'டயட்' செய்து, அதன் காரணமாக நோய் வாய்ப்பட்டிருக்கலாம். சில போஸ்ட் ஆபரேடிவ் கேஸ்களில், மாதக்கணக்கில் டிரிப்ஸ் ஏற்ற வேண்டியிருக்கும். ஆகாரமே டியூப் வழியாகத்தான் என்பதால், பித்தப்பை வேலை செய்யும் நிலைமையிலேயே இருக்காது. அந்தச் சமயத்தில் பித்தப்பையில் ரத்தம் உறைந்து, கற்கள் உருவாகி விடும்.

சமீபத்தில் சண்முகம் என்பவர், பித்தப்பை பிரச்னையோடு அட்மிட் ஆனார். அவருடைய பித்தப் பையில், பாசிமணி சைஸில் இருந்த கற்களின் எண்ணிக்கை எவ்வளவு தெரியுமா? சுமார் ஆயிரத்து முந்நூறு! அவ்வளவையும் லாப்ரோஸ்கோபி மூலம் அகற்றினோம். இப்போது அவர் நல்ல ஆரோக்கியத்

துடன் இருக்கிறார். இந்தத் தகவல், கின்னஸ் சாதனைப் புத்தகத்தில் இடம் பெறவிருக்கிறது. இதுவரை ஏழாயிரம் கேஸ்களில் கற்களை சிக்கல் எதுவுமின்றி எளிதாக அகற்றி குணப்படுத்தியிருக்கிறோம்.

**பித்தப்பையில் கற்கள் உருவானால், அதன் அறிகுறிகள் என்னென்ன?**




பித்தப் பையில் கல் இருந்தால், மேல் வயிற்றின் வலப் பக்கம், வலி தோன்றும். அது வலது தோள்பட்டை வரை பரவி, கடுமையாகக் கடுக்கும். வாந்தி வரும். ஜுரம் அடிக்கும். இலேசான மஞ்சள் காமாலைகூட இருக்கும். இந்தப் பிரச்னையோடு வந்தால், அல்ட்ரா சவுண்டு மூலமாக, கற்களின் தன்மை, பித்தப் பை சுவரின் தன்மை, பித்தப்பை தடித்துள்ளதா, மெலிந்துள்ளதா, பித்தக் குழாயில் கல் உள்ளதா என்று கண்டுபிடித்து சிகிச்சையைத் துவங்குவோம். 'லாப்ராஸ்கோப்' முறையில் ஆபரேஷன் செய்வதுதான் லேட்டஸ்ட் கோல்டு ஸ்டாண்டர்ட் ட்ரீட்மெண்ட்! வலி இருக்காது. தழும்பு தெரியாது. ஆன்டிபயாடிக் தேவையில்லை, ரத்த சேதாரமிருக்காது. உடனடியாக இயல்பான வாழ்க்கைக்குத் திரும்பலாம். நூறு சதவிகிதம் நம்பகமானதும்கூட!



• டாக்டர் எஸ். அஷோக்

**சிறுநீரகத்தில் கற்கள் உண்டானால், அதன் அறிகுறிகள் என்ன?**

முதுகிலிருந்து வலி பரவி, சிறுநீர் கழிக்கும் இடம் வரை கடுமையாக வலி இருக்கும். சிலருக்கு சிறுநீரில் இரத்தமும் கலந்து போகும். இன்னும் சிலருக்கு சிறுநீர்ப் பாதை அடைப்பின் காரணமாக, கிட்னியே வீக்கம் கண்டுவிடும். இதற்கு எக்ஸ்-ரே, அல்ட்ரா சவுண்டு ஸ்கேனிங், ஐ.வி.பி (இன்ட்ரா வீனஸ் பைலோகிராம்) போன்ற பரிசோதனைகள் செய்யப்பட்டு, சிகிச்சையின் வழிமுறைகள் ஆராயப்படும். சிஸ்டாஸ்கோப் வழியாக சிறுநீர் பாதையைக் கண்காணித்து, யுரிட்ரோஸ்கோப் பயன்படுத்தி, கற்கள் உடைத்தெடுக்கப்படும். இவ்வகை லேஸர் சிகிச்சையில் நிறைய சிறப்பம்சங்கள் இருக்கின்றன. அடைப்பு உடனடியாக நீங்கிவிடும் என்பதால், வலியிலிருந்து நிவாரணம் சட்டென்று கிடைக்கும். வயிற்றைக் கிழித்து ஆபரேஷன் செய்ய வேண்டிய தில்லை. ரத்தம் வீணாகாது. இந்த வகையிலும் ஆயிரக்கணக்கான அறுவை சிகிச்சைகளை வெற்றிகரமாக செய்திருக்கிறோம்.

ஒரு சில பிரத்யேக கேஸ்களில், கிட்னியில் ஒரு சின்ன இடம்கூட பாக்கியில்லாமல், கற்கள் அடைசலாக உருவாகிவிடும். இதற்கு 'மான் கொம்பு கற்கள்' (ஸ்டாக் ஹார்ன் கால்குலஸ்) என்றே பெயர். இதற்கும் மிக நவீனமான சிகிச்சை முறை இருக்கிறது. ஈ.எஸ்.டபிள்யூ. எல்

(எக்ஸ்ட்ரா கார்ப்போரல் வாட்டர் லித்தோட்ரிப்ஸி) சிகிச்சை முறையில் கற்களை உடைத்து விடலாம்.

**இந்தக் கற்கள் பிரச்னை வராமல் காப்பது எப்படி?**

கொதிக்க வைத்து, வடிகட்டிய தூய்மையான குடிநீரை தாராளமாக குடித்து வந்தாலே, கிட்னியில் கல் வராமல் காக்கலாம். உடல் ரீதியாகவே கற்கள் சேர்ந்து விடும் இயல்பு கொண்டவர்களும், ஏற்கெனவே கற்கள் உருவாகி அவதிப்பட்டவர்களும், தக்காளி, முட்டைக்கோஸ், பால் போன்றவற்றைத் தவிர்ப்பது நல்லது.

பித்தப் பையில் கல் வராமல் இருக்க, பட்டினி கிடக்கக் கூடாது. கொழுப்புச் சத்து மிக்க உணவைத் தவிர்க்க வேண்டும்.

நிறையத் தண்ணீர் குடித்து, நல்ல சத்துணவை, வேளா வேளைக்கு மிதமாகச் சாப்பிட்டு, கூடவே போதிய உடற்பயிற்சியும் செய்தால், கல்லாவது... மண்ணாவது... எங்களுக்கெல்லாம் வேலையே இருக்காது!

- அனு

# அகப்பட்ட அருவாள் மீசை!

ஒவ்வொரு குறிப்பும் உணர்த்தும் விடையை எதிரே உள்ள கோடுகளில் நிரப்புங்கள். வட்டத்துக்குள் உள்ள எழுத்துக்களை மட்டும் ஒழுங்குபடுத்தினால் ஏழாவது வரியில் உள்ள குறிப்பு உணர்த்துவது கிடைத்து விடும்.

1. ஜோதிகாவின் அக்கா (O) _ _
2. 'சதிலீலாவதி' படத்தில் கமலின் ஜோடி (O) _ _ _ _
3. நிதானமாக - எதிர்ச்சொல் _ (O) _ (O) _ _
4. ஆமாம் - எதிர்ச்சொல் _ (O) _
5. பீமனால் வதம் செய்யப்பட்ட இளவரசன் (O) _ _ (O)
6. 'மின்னலே'யின் இரண்டாவது கதாநாயகன் _ _ (O) _

பிடிக்கப் போட்டாச்சு! _ _ _ _ _ _ _ _

- ஜி.எஸ்.எஸ்.

விடைகள்: 1. நக்மா 2. கோவை சரளா 3. சீக்கிரமாக 4. இல்லை 5. சேகன் 6. அப்பாஸ்
விடை: நக்கீரன் கோபால்

4

## வந்தாள் சொகுசு அக்கா!

'பவளஜோதி ஸ்டோர்ஸ்' என்ற எழுத்துக்கள், ராமக்கனி அம்மாளின் கண்ணீர்த் திரையில் ஆடின.

அதுதான், சென்னையில் ராசலிங்கம் நடத்திய மளிகைக் கடையின் பெயர். அவருடைய அம்மாவின் பெயர், பவளஜோதி. 'பலசரக்கு கடைங்கிறது. வாடிக்கையாளர்களுக்குச் சாப்பாடு போடும் தாய் மாதிரி. அதனால்தான எங்கம்மா பேரை கடைக்கு வச்சு நடத்துறேன்' என்பார் ராசலிங்கம். அந்த உணர்வு செயல்களிலும் வெளிப்படும்.

அவருடைய கடையில், அரிசி, தானியங்கள் கல் மண் நீக்கிச் சுத்தமாக இருக்கும். தூசி புடைத்த பருப்பு வகைகள், கலப்படமில்லாத பலசரக்குகள். நியாயமான விலை. 'பவள ஜோதி கடைக்குப் பச்சைக் குழந்தையை அனுப்பினால்கூட எடையும் விலையும் இம்மி பிசகாது' என்று அந்த வட்டாரத்தில் பேர். அந்த நற்பெயரால் ராசலிங்கம் வியாபாரத்தில் கொழித்தார். இதனால் அவர் தன் வீட்டை மட்டுமே வளப்படுத்தவில்லை. 'இல்லை' என்று வரும் நலிந்தவர்களுக்கு, 'இல்லை' என்று சொல்லத் தெரியாதவர் அவர்.

அவரிடம் ஒருநாள் வந்து நின்றான் பலவேச முத்து. அவனுடன் கர்ப்பவதியான இளம் மனைவி. "அண்ணாச்சி, நானும் உங்க ஊர்ப்பக்கம் தான். சுத்திவளைச்சு உறவு முறையாக்கூட இருப்பேன். ஊர்ல நிலம் நீச்சுன்னு எந்தச் சொத்தும் இல்லை. நம்ம ஊட்டுப் பெரியவுக, அதான் அம்மா அப்பா, என் பொழப்புக்கு வழி பண்ணாமலே, இந்தப் பொண்ணை எனக்குக் கட்டி வச்சுட்டு காலமாயிட்டாக...

"ஊர்க் காட்டிலே பொழப்பு இல்லே. அதான், 'கெட்டும் பட்டணம் சேர்'னு இவளையும் பிடிச்சுக்கிட்டு பட்டணம் வந்தேன். இங்க, என்னை மாதிரி 'கெட்டவங்க' எல்லா ஜில்லாவிலிருந்தும் வந்து பிளாட்பாரமெல்லாம் குவிஞ்சு கெடக்கிறாங்க. நானும் ஒதுங்கினேன். இந்தப் போட்டியில, நான் பொழப்பைத் தேடுவனா, அதுக்குள்ள புள்ளத்தாச்சியாயிட்ட பொண்டாட்டியக் காப்பாத்துவனா...

"வேலைன்னா, மின்ட் தெருப் பக்கம், வண்டி தள்ளுறதுதான். அதுக்கும் போட்டி. ஒரு நாள் வேலை கெடச்சா, மூணு நாளு காலுக்குள்ளே கையைக் குத்திக்கிட்டு சுருண்டு கெடக்க வேண்டியதுதான். நான் பசி தாங்குவன். ஆனா, புள்ளத்தாச்சி பொண்டாட்டி கொழாய்த் தண்ணியைக் குடிச்சுப் புட்டு தலைசுத்திக் கெடக்கிறத பாக்க முடியல. இதுக்கெல்லாம் ரெண்டு வழி தான் எனக்குத் தெரிஞ்சுது..." முழு மூச்சாக, தன் சரித்திரத்தைச் சொன்னான், பலவேசமுத்து. வந்து நின்றதிலிருந்து அவனுடைய மனைவி 'மூசு மூசு'சென்று அழுது கொண்டிருந்தாள்.

"ரெண்டு வழின்னு சொன்னியே, என்ன வழி?" ராசலிங்கம்.

"ஒண்ணு, கடல். பொண்டாட்டி கையையும் புடிச்சுக்கிட்டுப் போய்



கடல்லே உளுந்துற வேண்டியதுதான்."

ராசலிங்கத்துக்குச் சட்டென்று கோபம். "கடல்லே விழுறதுக்கு நம்ம திருச்செந்தூர்ல கடல் இல்லியா?'' முருகான்னு அதில விழுந்திருக்கணும். மெட்ராஸுக்கு ஏன் வந்தே?"

அவன் மௌனம் சாதித்தான்.

"இன்னும் ஒரு வழின்னு சொன்னியே, என்ன?" ராசலிங்கம் கேட்டார்.

''உங்க காலுதான்! உங்க காலில, 'கஷ்டம்'னு விழுந்தா கைதூக்கி விடு விவேன்னு எல்லாரும் சொன்னாங்க." பளிச் சென்று அவருடைய காலைப் பிடிக்கப் போனான் பலவேசமுத்து. அவனைத் தடுத்துப் பிடித்துக் கொண்டார் ராசலிங்கம்.

''ஆமாம், உனக்கு என்ன தெரியும்?'' விசாரித்தார்.

''உழைக்கத் தெரியும்.'' பட் டென்று பதிலளித்தான்.

புன்னகை செய்தார் ராசலிங்கம். அவன் பேசிய விதம், தன்னைப் பற்றிய விவரங் களைச் சொன்ன சாதுரியம், எல்லாமே வாசாலகமாக இருந்தது. ஒரு வியாபாரிக்கு வேண்டிய தகுதி. 'ஒரு வேளை நம் வியாபாரத்துக்கு உதவுவானோ?' மின்னலாக ஒரு யோசனை அவருக்குள்.

பலவேசமுத்துவையும் அவனுடைய மனைவியையும் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று, மனைவி ராமக்கனியை, சாப்பாடு போடச் சொன்னார். அந்த உத்தமியின் பெருந்தன்மை, அவர்களின் தங்குமிடத் துக்கும் ஏற்பாடு செய்தது.

**தாமரை மணாளன்**

"பாவமா இருக்குங்க. ஒருவேளை சோற்றைப் போட்டுட்டு வெளியே அனுப்பினா என்ன பண்ணுவாங்க? நம்ம வீட்டுப் பின் கட்டில், சட்டுமுட்டுச் சாமான்களைத்தானே போட்டு வைச்சிருக்கோம். அதைச் சுத்தம் பண்ணிட்டு இவங்களைத் தங்க வைப்போம். வீட்டில பொம்பளைங்க ஒருத்தருக்கொருவர் துணையாயிருப்போம். இந்தத் தம்பி கடையில ஒங்களுக்கு ஒதவியா இருக்குமான்னு பாருங்க. நீங்க ஒத்தை ஆளாத்தானே கஷ்டப்படறீங்க" என்றாள் ராமக்கனி அம்மாள். ராசலிங்கமும் ஆமோதித்தார்.

- இப்படித்தான் ராசலிங்கத்தின் தொழிலில் அவருடன் கால் ஊன்றிக் கொண்டான் பலவேசமுத்து.

அவனுடைய பேச்சாற்றல் மட்டுமல்லாது, சுறுசுறுப்பான உழைப்பும் அவனை, ராசலிங்கத்தின் 'வலது கை'யாக ஏற்றி விட்டன. அவன் வந்தபிறகு நிறையப் புது வாடிக்கையாளர்களைப் பிடித்தான். அவனே, சைக்கிளில் மளிகைச் சாமான்களை எடுத்துக் கொண்டு போய் வீடுகளில் சேர்ப்பான். வாடிக்கையாளர்கள் 'டிப்ஸ்' கொடுத்தால் வாங்கமாட்டான். "அண்ணாச்சி எனக்கு எல்லாம் குடுக்காவ" என்பான். ராசலிங்கம் காதுக்கு அது போகும். அதில் அவருக்குப் பரவசம்.

வியாபாரத்தை விருத்தி செய்ய புதிது புதிதாக யோசனை சொல்வான். "அண்ணாச்சி, நம்ம கடை பெரிசாத்தானே இருக்கு. மளிகைச் சாமான்களோட ஒரு பக்கம் காய்கறி யாவாரம் வைக்கலாம். இன்னொரு பக்கம், பழைய இரும்பு, செம்பு இதுகளை வாங்கி மொத்த யாவாரிக்குப் போடலாம். அதுல பாதிக்கு மேல லாபம்!"

அப்படியே, வியாபாரத்தை மூன்று முகங்களாக விரிவாக்கினார் ராசலிங்கம்.

காய்கறி கொள்முதல் செய்ய விடியற்காலம் மூன்று மணிக்கே எழுந்து கொத்தவால் சாவடிக்குப் போய்விடுவான், பலவேசமுத்து. (இப்போதுதானே, 'கோயம்பேடு', முன்பெல்லாம் கொத்தவால் சாவடிதானே!)

ஏழு மணிக்குள் பச்சு பச்சென்று பசுமையான காய்கறிகளைக் கொண்டு வந்து கடையில் இறக்கிவிடுவான். அதனால், ஒன்பது மணிக்குள் சமைத்து விட்டு அலுவலகங்களுக்கு ஓடும் பெண்மணிகளின் கூட்டம் மொய்க்கும்.

காலையிலேயே இப்படி வியாபாரத்தில் மும்முரமாகிவிடுவதைப் பார்த்து, "பலகாரம் சாப்பிட்டுட்டு வா" என்பார் ராசலிங்கம், பரிவோடு.

"நாஷ்டா துன்னா ஒடம்பு வணங்காது, அண்ணாச்சி!" என்று மறுத்து விடுவான் பலவேசமுத்து. ('காலைப் பலகாரத்'துக்கு 'நாஷ்டா' என்னும் தீந்தமிழை அவனுக்குச் சொல்லிக் கொடுத்திருந்தது சென்னை!)

மத்தியானம் ராசலிங்கத்தின் வீட்டிலிருந்து வரும் சாப்பாட்டைத்தான் அவரோடு சாப்பிடுவான், பலவேசமுத்து. தன் மனைவியோடு தனியாக இருந்தாலும், ராமக்கனி அம்மாள் சமைக்கும் ஒரே அடுப்புச் சமையல்தான் எல்லாருக்கும். ஒரே தரமான சாப்பாடு.

இப்படிக் கோலாகலமாக ஒரு கூட்டு வாழ்க்கை நடந்தது. ராசலிங்கம் இயல்பாகவே பெருந்தன்மையானவர். பலவேசமுத்துவின் விஷயத்தில், 'அவன் உழைப்பாளி' என்ற தனி அன்பு வேறு. ஊரில் கோயில் குடை, விசேஷங்கள் என்றால், அவனுக்குத் தாராளமாகப் பணம் கொடுத்து அனுப்புவார். சம்பளம் வேறு.

பலவேச முத்துவை, தன் வியாபாரத்துக்குப் பங்காளியாக்க வேண்டும் என்று முடிவு செய்து, ராசலிங்கம் பத்திரம்கூட எழுதத் தயாரானார். ஆனால் பலவேசமுத்து தடுத்து விட்டான். "எல்லாம் உங்க பேருக்குத்தான் இருக்கணும். நீங்க கொடுத்து நான் வாங்கினால் போதும்" என்றான்.

"மதம் பிடிச்ச யானைக்கு ஊசி போடலாம்னா மிருக டாக்டர் முடியாதுங்கறாரே, ஏன்?"

"மதமாற்ற தடைச் சட்டத்துக்குப் பயப்படுறார் போல...!"

- அதிரை யூசுப்



நாலைந்து வருடங்கள் ஆகிவிட்டன. இதற்குள் குடும்பங்கள் பெருகின. பலவேச முத்துவின் மனைவி, ஓர் ஆண் பிள்ளையைப் பெற்றாள். 'தண்டபாணி' என்று பெயரிட்டார்கள். ராமக்கனி அம்மாளும் உடனடியாக 'உண்டாகி', 'மகாலட்சுமியாக', செண்பகத்தைப் பெற்றெடுத்தாள். 'தண்டபாணி பிறந்த ராசிதான், தன் மனைவி ராமக்கனியும் உடனடியாகப் பெற்றெடுத்தாள்' என்று ராசலிங்கத்துக்கு மகிழ்ச்சி.

குழந்தைகள் வளர்ந்து விளையாட்டுப் பருவத்துக்கு வந்தனர். ஆனால் ஏனோ தகப்பனார்களுக்குள் இருந்த வாத்சல்யம் குழந்தைகளுக்குள் இல்லை. காரணம், தண்டபாணியின் தடித்தனமான சீண்டல்கள். அவனைக் கண்டாலே, செண்பகம் சிறுவாள். ஓசையில்லாமல் அவள் கொடுக்கும் குட்டுக்கள், கடிகள் இவற்றை வாங்கிக் கொண்டு தான் நகருவான் தண்டபணி.

திடீரென்று, அந்தக் குடும்பங்களுக்குள்ளிருந்த உறவுக் கோட்டையையே, இடித்து நொறுக்குகிற மாதிரி அந்தச் சம்பவம் நிகழ்ந்தது.

ராசலிங்கம், கடையிலிருக்கும்போது, ஒரு போலீஸ் ஜீப் வந்து நின்றது. அதிலிருந்து சப்-இன்ஸ்பெக்டர் அவரை உடனடியாக, ஸ்டேஷனுக்கு வருமாறு அழைத்தார்.

"பலவேசமுத்து வெளியே போயிருக்கான். அவன் வரட்டும். கடையில வச்சுட்டு வாறேன்" என்றார் ராசலிங்கம்.

''பலவேசமுத்து வெளியே இல்லை. உள்ளே, எங்க போலீஸ் காவலில் இருக்கிறான். நீங்க உடனே வரணும்'' என்றார் சப்-இன்ஸ்பெக்டர் கடுமையாக. பதறிப் புறப்பட்டார்.

காவல் நிலையத்துக்குள் காலெடுத்து வைத்ததும், இன்ஸ்பெக்டரின் அச்சுறுத்தலான குரல் : ''ராசலிங்கம், உம் பேரில் எவ்வளவு கேவலமான வழக்கு ஏற்பட்டிருக்கு, தெரியுமா? கலப்படம்.. அரசாங்க இலாகாப் பொருட்களை ஆளைவச்சுத் திருடினது, திருட்டுச் சாமான்களை வாங்கி விற்றது. இப்படி ரெண்டு வருசமா நடந்திருக்கு. ஆதாரத்தோட உங்க ஆள் பலவேசமுத்து அகப்பட்டு லாக்கப்பில இருக்கான். கடை உரிமை உம் பேரில இருக்கிறதால, நீரும் அரெஸ்ட் ஆகிறீர்!''

இடி விழுந்ததுபோல் நடுங்கிப் போனார் ராசலிங்கம். பலவேசமுத்துவுடன் வாக்கப்பில் அடைபட்ட அவர் கண்ணீர் பொங்க,



''உம்மைப் புகழ்ந்து பாடினால் நிறைய பரிசு கிடைக்கும் என்று கேள்விப்பட்டு வந்தேன்.''

''அதற்காக இவ்வளவு பெரிய கோணிப் பையை எடுத்து வரணுமா?''

- எஸ்.மோகன்

''பலவேசம், இதெல்லாம் என்னப்பா? மானமா வாழ்ந்த என் பொழப்பிலே மண்ணை அள்ளிப் போட்டுட்டியே!'' என்று குமுறினார்.

ஆனால் பலவேச முத்துவோ கொஞ்சம் கூட அலட்டிக் கொள்ளாமல், ''என்ன அண்ணாச்சி, இது ஒரு பெரிய விஷயமா? பெரிய பெரிய வியாபாரிகள்லாம்கூட சமயத்தில இப்படி மாட்டிக்கிறதுதான். யாவாரத்தில் இதெல்லாம் சகஜம். பிசினஸ்ல நாலு துட்டு சேர்க்கிறதுன்னா அப்படி இப்படித்தான். நாம என்ன கொலையா செஞ்சுட்டோம்!'' என்றான்.

'' 'நாம'ன்னு என்னையும் சேத்துச் சொல்றியே. தர்மதேவதையை தராசில நிறுத்தி வியாபாரம் செய்தவன்ப்பா நான்'' என்றார் குரல் நடுங்க.

''சரி, நான்தான் செஞ்சேன். இருந்தாலும் நான் வேலையாள்தானே. கடை உரிமை உங்க பேரிலதானே இருக்கு. அதனால சேர்த்துத்தான் பேசணும். ஒண்ணும் பயப்படாதீங்க. துட்டை அள்ளி வீசினா, கேஸ் ஒடைஞ்சு போவும்.''

குற்ற உணர்ச்சியே இன்றி அவன் பேசப் பேச, 'பலவேசமுத்துவுக்குள் இப்படி ஒரு கிரிமினல் முகமா?' என்று அவருக்குக் குலை நடுங்கியது.

கேஸ் வலுவாக இருந்தது. ராசலிங்கமும் விசாரணை சிறைக்குள் இருக்கும்படி ஆயிற்று. இதுவரை நற்பெயருடன் நடந்த கடை, மூடி சீல் வைக்கப்பட்டது. 'நல்லவர் மாதிரி வேஷம் போட்டாரே, ராசலிங்கம்.

அவரும் இப்படியா? கொள்ளையடிக்கவே இவனுகள்ளாம் கடை போடறானுக' என்று அவரால் நன்மை பெற்றவர்களே, உமிழ்ந் தனர். சிறுகச் சிறுக சேகரித்த மரியாதை யெல்லாம் ஒரு நொடியில் அழிந்தது.

'தன் கணவனால் ஒரு நல்ல குடும்பம் அழிந்துவிட்டதே' என்று துடித்த, மானஸ் திரியான பலவேசமுத்துவின் மனைவி தூக்குப் போட்டு செத்துப் போனாள்.

அப்போதும், "முதலாளி பொண்டாட்டி கல்லு மாதிரி இருக்காங்க. இவ ஏன் செத்தா?" என்று தன் மனைவியின் மரணத் தைப்பற்றி, கம்பிகளுக்குள்ளிருந்து ஏகடியம் செய்து கொண்டிருந்தான், மனசாட்சி அற்ற பலவேசமுத்து.

ராமக்கனி அம்மாள், மனதைக் கல்லாக் கிக் கொண்டு, வீட்டிலிருந்த நகைகள், சொத்து எல்லாவற்றையும் விற்று, கேஸ் நடத்தினாள். ராசலிங்கத்தின் மீது மதிப்பு மாறாத ஒரு வக்கீல் கேஸை நடத்தினார். எல்லாம் முடிந்து நிரபராதியான ராசலிங் கத்தை வீட்டுக்கு அழைத்து வரும்போது, அந்தக் குடும்பம் வெறுங்கையோடு தெருவில் நின்றது. சென்னை வாழ்க்கையை மூட்டை கட்டிக் கொண்டு, அவமானத்தோடு கூனிக் குறுகி கிராமத்தை நோக்கிப் புறப்பட்டது ராசலிங்கம் குடும்பம்.

அப்போதும் பலவேசமுத்து கூசாமல், "அண்ணாச்சி, உங்களுக்கு வியாபாரம் ஒத்துக்கலை. அதான் கௌம்பிட்டீங்க. நான் அப்படி இல்லே. அடிபட்ட இடத்திலதானே புரண்டு எழும்பணும். உங்களை நம்பியிருந்த எனக்கு ஏதாவது குடுத்துட்டுப் போங்க. கடை லைசென்ஸ் உரிமை இருக்கே!" என்றான்.

அந்தச் சூழ்நிலையிலும் அவனைச் சபிக்க மனமின்றி, தன் கடை உரிமையை அவனுக்கு மாற்றிக் கொடுத்துவிட்டு ரயிலேறினார் கருணை மிக்க ராசலிங்கம்.

ராமக்கனி அம்மாள் சொல்லச் சொல்ல நெஞ்சம் பதறிக் கொண்டிருந்த பூமணி, "மயினி, உங்களை இவ்வளவு கொடுமைக்குள்ளாக்கினவன் இப்ப எதுக்கு உறவு கொண்டாடுறான்? இங்கே ஏன் வந்து தொலைச்சான்!" என்றாள்.

"அதுக்கு நான் பதில் சொல்றேன்" என்று தளுக்கான நடையுடன் நுழைந்தாள் முப்பது வயது மதிக்கத்தக்க பெண். அவள் தான் அந்த வட்டாரத்தில் பெயர் பெற்ற, 'கருக் குப்பை சொகுசு அக்கா. அவளுடைய இடுப் பில் செருகியிருக்கும் கருக்குப் பைக்குள் சில்லறையைவிட சில்மிஷங்கள் அதிகமா இருக்கும்.

அவளைக் கண்டதும் அங்கிருந்த அனை வரும் திடுக்கிட்டனர்.

'பாம்பு நுழையற மாதிரி, இந்தப் பகட்டுக் காரி ஏன் இங்கே வந்தாள்? யார் குடியைக் கெடுக்க?' என்று புருவங்கள் நெரிந்தன.

(தொடரும்)

## வெல்லக்கட்டி கீதை!

**'டை**ம் ஆச்சு' இலவச இணைப்பு, நேரமில்லை என்று சொல்பவர்களுக்கு சுளீர் சவுக்கடி. இடையிடையே நேரத்தின் முக்கியத்துவம் பற்றி அறிஞர்கள் கூறியிருந்ததைப் போட்டிருந்தது பாராட்டத்தக்கது. மனத்தில் நின்ற மணி மொழிகள்!

**- இரா.வி.சௌந்தர்யா, மொரட்டுப்பாளையம்**




உவமைக்கதைகளுடன் வந்த குட்டிப் புத்தகம், அச்சுவெல்லக் கட்டி போல இனித்தது. சந்தர்ப்பங்களைத் தவறவிட்டுத் தவிப்பவர்கள் கட்டாயம் படித்துப் பயன்பெற வேண்டும்.

**- இரா. கல்யாண சுந்தரம், மதுரை**

'டைம் ஆச்சு' இன்றைய சூழ்நிலைக்கு ஒரு கையடக்க கீதை.

**- கிருஷ்ண ராஜ்கோபால், சென்னை**

மிகப் பயனுள்ள சேவை. எளிமையாக நேரப் பங்கீட்டின் முக்கியத்துவம் விளக்கப்பட்டிருக்கிறது. இன்றைய இயந்திரகதி வாழ்க்கைக்கு அவசியம்.

**- பாலசுப்ரமணியம் ஹேமலதா, மதுரை**

நூல்களை இருவகையாகப் பிரிப்பார்கள். 'Books for Hour, Books for Ever' என்று. 'டைம் ஆச்சு' இலவச இணைப்பு இரண்டாம் வகையைச் சேர்ந்தது.

**- இரா. சம்புலிங்கம், அம்பத்தூர்**

# "வெற்றித் திருமகள் விருது"




## *Shriram - CED Award of Excellence for Women Entrepreneurs*



The award instituted by **Shirram Trust** - publishers of the 55 years old **Tamil Literary Magazine "அமுதசுரபி"** and a unit of the multi-dimensional Shriram Group Companies & **Centre for Entrepreneurship Development (CED),** Tamil Nadu - a State level approved EDP Institution recognized by Government of Tamil Nadu and Government of India.

Shriram-CED is glad to announce awards and recognitions for **Young Women Entrepreneurs** in the state of Tamil Nadu for the financial year 2002 - 2003.

The award will be presented to the First Generation **Women Entrepreneurs, preferably below 40 yrs** who have created successful & profitable business by creating employment opportunities and benefited the society at large in the State of **Tamil Nadu.**

Another award will be presented to a **Final Year Girl student** with excellent business idea. **CED** will be pleased to offer **incubator assistance** to such potential Women Entrepreneurs to experiment & test her business idea.

Selected candidates will receive a detailed questionnaire followed by an interview by a panel of judges.

Please submit your profile information etc., super scribed as **"Women Entrepreneurs - 2002"** to **Shriram Trust,** A7, 2nd Avenue, Anna Nagar East, Chennai - 600 102. **Last date** for submitting your profice is **June 30th** 2003. The award will be presented to the recipients on **October 2nd** 2003 in Chennai.

***A.V.S. Raja***
***Managing Trustee, Shriram Trust***
***Vice-Chairman,***
***Shriram Group Companies***

***Dr. S. Jayaram***
***Member Secretary, CED***
***Professor,***
***Madurai Kamaraj University***

**Shriram - CED strive for Women Empowerment**

● ஜி. ஜெயராமன், கூத்தலூர்.

*? "சீறுவதற்கே மறந்து விட்ட பாம்பு" என அரசியல் சட்டத்தின் 356வது பிரிவு பற்றி கலைஞர் கருத்து தெரிவித்துள்ளாரே?*

! 'பாம்பைக் கடிக்க அனுமதிக்காவிட்டாலும் சீறுவதற்காவது பயன்படுத்த வேண்டும், அல்லது அதை ஒரேயடியாக அடித்துப் போட்டு விட வேண்டும். வெறும் ரப்பர் பாம்பாக வைத்திருக்காதீர்கள்' என்று விளக்கிக் கூறலாம்.

● கே.எம். ரவிச்சந்திரன், மதுரை. *

*? ''ஒவ்வொரு பள்ளிக் கூடத்திலும் தமிழைக் கட்டாயப் படிப்பு ஆக்க வேண்டும்'' என்ற கவிப்பேரரசு வைரமுத்து பற்றி...?*

! தாய் நாட்டில் பள்ளிகளில் குழந்தைகளுக்குத் தாய் மொழியில் கல்வி போதிக்கப்பட வேண்டும்; தாய் மொழி கற்றுத் தரப்பட வேண்டும் என்பதை வலியுறுத்த வேண்டிய துர்பாக்கியம் தமிழ் நாட்டைத் தவிர வேறு எந்த நாட்டிலும் காண முடியாது!

● கே.ஏ.ராஜேஸ்வரி, காட்டுக்கானூர்.

*! "2020ல் இந்தியா தன்னிறைவு பெற்ற வல்லரசாக மாற வேண்டும்'' என்ற கலாமின் கனவு மெய்ப்பட இன்றைய அரசியல்வாதிகள் எத்தனை சதவிகிதம் உதவுவார்கள்?*

! மொத்த ஜனத் தொகையில் அரசியல் வாதிகள் எத்தனை சதவிகிதமோ அத்தனை சதவிகிதத்தினர் வளம் பெற நிச்சயம் உதவுவார்கள்.

●அ. கோவிந்தன், சேலம்.

*! தற்போதைய தமிழ் இலக்கியச் சூழல் எப்படியுள்ளது?*

! நித்தம் ஒரு வசவும், மாதமொரு அடிதடியுமாகத்தான். சாருநிவேதிதா தாக்கப்பட்டதாகச் செய்தி வந்ததா? இப்போது லெக்ஷ்மி மணிவண்ணன் என்ற



• டொனேஷன் பேச்சு!

• கிடைக்காத பெருமை!



• துர்பாக்கிய மொழி!

கவிஞரை ஜெயமோகன் அடித்ததாக பிட் நோட்டீஸ் விநியோகித்திருக்கிறார்கள். வாழ்க இலக்கியம்! வாழ்க சண்டைக் காட்சிகள்!

● கே.சம்பத், திருக்கழுக்குன்றம்.

*? கருணாநிதிக்குப் பிறகு, ஜெயலலிதாவுக்குப் பிறகு என்று இந்த இரண்டு கட்சிகளுமே இதுவரை யாரையும் அடையாளம் காட்டாதது ஏன்?*

! தி.மு.கவிலாவது உட்கட்சி ஜனநாயகம் செயல்படுதுங்க; அது எப்படியும் பிழைச்சுக்கும். அ.தி.மு.க., அம்மா காலத்துக்குப் பிறகு அம்போ தான்!

● என். பாலகிருஷ்ணன், மதுரை.

*? கல்வி, மருத்துவம் - பணத்தை அள்ளித் தரும் சிறந்த வியாபாரம் எது?*

! கல்வி வியாபாரத்தில் முதலீடு, உடனுக்குடன் லாபம் தரக் கூடியது; மருத்துவத்தில் முதலீடு நாட்பட நல்ல பலன்தரும். என்றாலும் எல்லா வியாபாரங்களையும் போல இவற்றிலும் 'ரிஸ்க்' உண்டு.

● இ. மகாராசன், கடமலைக் குண்டு.

*? சந்தன வீரப்பனுடன் இருந்த அனுபவத்தைப் பற்றி, ராஜ்குமார் புத்தகம் எழுதினால், குழப்பம் தீர்ந்துவிடுமே!*

! ஹூம்... அப்பன் குதிருக்குள் இல்லை என்று அவர் எழுதுவாரா என்ன? ராஜ்குமாரின்

❑ ரூ.100/- பரிசு பெறுபவர்:
டி.கே.சுப்பிரமணியன்
8/87 (ப81),
சன்னதித் தெரு,
திருப்பரங்குன்றம் - 625 005.

* ரூ.50/- பரிசு பெறுபவர்:
கே.எம். ரவிச்சந்திரன்,
5/671, ஏ. கபிலர் தெரு,
சதாசிவநகர்,
மதுரை - 625 020.

# யாரெல்லாம்

மனைவி சொன்ன மாதிரி வீரப்பனே (சாட்சி சொன்னால் தான்) புத்தகம் எழுதினால் தான் உண்டு!

● உமரி பொ. கணேசன், மும்பை.

? தமிழக சட்டமன்ற வளாகத்தில் சட்டமன்ற உறுப்பினர்கள் பேட்டி கொடுக்க சபாநாயகர் தடை விதித்தது சரியா?

! சரிதான். எதை, எந்த இடத்தில், எப்படிச் செய்வது என்பதற்கெல்லாம் மரபுகளும் நியதிகளும் கடைப்பிடிக்கப்படத்தான் வேண்டும். ஆனால் இந்த ஒரு விஷயத்தில் கண்டிப்பைக் காட்டும் சபாநாயகர் வேறு பல ஜனநாயக மரபுகளைக் கோட்டை விடுவது வருத்தமே.

● டி.கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.❐

? இன்று இந்தியாவை அச்சுறுத்தும் பூதாகரமான பிரச்னை எது?

! தலைமைப் பொறுப்புக்குத் தகுதியில்லா அரசியல் தலைவர்கள். இது சீர்பட்டால்தான் மற்ற பிரச்னைகளை நாடு சமாளிக்க முடியும்.

● ரேவதிப்ரியன், ஈரோடு.

? ரேடியோ, டீ.விக்களுக்கு லைசென்ஸ் வரப் போகிறதாமே?

! இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் சுவாசிக்கக் கூட லைசென்ஸ் கட்டணம் செலுத்த வேண்டி வரலாம்.

● வைகை வளவன், முடக்காத்தான்.

? 'சண்டியர்' படத் துவக்க விழாவை மதுரையில் நடத்தி பெரும் புரட்சியைச் செய்து காட்டி விட்டாரே கமலஹாசன்!

! ஸ்டுடியோவுக்குள் இருந்த சினிமாவை வெளியே அழைத்து வந்தவர் என்ற பெருமை பாரதி ராஜாவுக்கு உண்டு. இப்போது ஸ்டுடியோவுக்குள்ளே இருந்த படப் பூஜையை வெளியே நடத்தியவர் என்ற பெருமை கமலுக்குக் கிடைத்திருக்கிறது. ஆனால் அவர் ரசிகர்கள் அன்று நடந்து கொண்ட விதம் அவருக்குப் பெருமை சேர்க்கவில்லையே!

● சிவ. இராமலிங்கம், ஆத்தூர்.



* வல்லரசுக் கனவு!



* அடிதடி இலக்கியம்

? "தமது கல்லூரியில் படிக்கும் மாணவர்கள் வரதட்சிணை என்ற பேச்சே பேசக் கூடாது" என்று விஜயகாந்த் கூறியுள்ளது பற்றி...?

! தமது கல்லூரியில் படிக்கும் மாணவர்களின் பெற்றோர்களிடம் 'டொனேஷன்' என்ற பேச்சே பேசக் கூடாது என்று சொன்னால் இன்னும் ஜோராகக் கைதட்டலாமே!

● விஜயலக்ஷ்மி முருகேசன், பொழிச்சலூர்.

? யாரெல்லாம் இன்று சண்டியர்கள்?

! தெரிந்தே வோட்டுப் போட்ட அத்தனை வாக்



* நம்பர் 1!

காளர்களும்தான்!

● ஜி. ராமதாஸ், ஆடுதுறை.

? எதிர்க்கட்சியினரை எள்ளி நகையாடுவதிலும், ஒடுக்குவதிலும் வல்லவராக இருப்பது ஜெயாவா? மாயாவா?

! ஒடுக்குவதில் இருவருமே ஸ்ட்ராங். ஆனால் எள்ளி நகையாடுவதில் துள்ளலுடன் செயல்படுகிறவர் ஜெ.தான்.

● ஆர்.ஜி.அம்பிகை ராமன், திசையன்விளை.

? ஆண் 'சதாமே' அஞ்சாறு பேர்கள் ஒரே மாதிரி உள்ளார்களாம்! பெண் 'சதாம்' மாடலில் எத்தனை பேர்கள் இருக்கக் கூடும்?

இந்தியாவில் இரண்டு பேரை நிச்சயம் இனம் காணலாம்.

# இன்று சண்டியர்கள்?

# ஜீவநதி

காட்சி: 14

**தெரு/பகல்**

**பாத்திரங்கள்: கண்ணன் - சேது.**

*தெருவில் ஆட்டோவில் போய்க் கொண்டிருக்கிறான் கண்ணன். சேது ஆட்டோவை ஓட்டிக் கொண்டிருக்கிறான். தெருவில், கண்ணன் இன்டர்வியூவுக்கு வந்த கம்பெனிக் கட்டடத்தைக் காண்கிறான்.*

**கண்ணன்:** நிறுத்துடா சேது.

**சேது:** (இலேசாகப் பிரேக் போட்டு ஓரமாக நிறுத்துகிறான்.) என்ன?

**கண்ணன்:** (ஒரு கட்டடத்தைக் காட்டி...) இங்கதான் இன்டர்வியூ நடந்துச்சு. என்ன முடிவுன்னு தெரிஞ்சுட்டு வரலாம்.

**சேது:** நானும் வரேன்டா.... ஆபீசை ஒரு 'லுக்' உட்டுட்டு வரலாம்.

**கண்ணன்:** வா..

*இருவரும் படி ஏறுகிறார்கள்.*

காட்சி : 15

**பகல்/அலுவலகம்**

**பாத்திரங்கள்: கண்ணன், சேது, தெய்வநாயகி, கீதா**

*படி முடியும் இடத்தில் டைப்பிஸ்ட் தெய்வநாயகி உட்கார்ந்திருக்கிறாள். ரிஸப்ஷனிஸ்ட்டும் ஆன அவள் வந்தவர்களைப் பார்க்கிறாள். ஒரு இளைஞனும், காக்கிச்சட்டை போட்ட ஆட்டோ டிரைவரும் வருவதைப் பார்க்கிறாள். 'என்ன' என்பது போல அவர்களைப் பார்க்கிறாள்.*

**கண்ணன்:** மேடம், நான் கண்ணன். பத்து நாளுக்கு முன்னால் இங்க ஒரு இன்டர்வியூவுக்கு வந்திருந்தேன். தபால் வரும்னு சொன்னாங்க. போஸ்டல் ஸ்டிரைக்கோ, போஸ்ட்மேன் ஸ்டிரைக்கோ, என்ன காரணம்னு தெரியலை. தகவல் வரலை. நேரிலையே, கேட்டுப் போகலாம்னு வந்திருக்கேன்.

*கண்ணனது கிண்டலைப் புரிந்து கொண்டவள் போலப் புன்னகை செய்கிறாள்.*

**தெய்வநாயகி:** *(சேதுவைப் பார்த்து)* இவர் யாரு?

**கண்ணன்:** என் நண்பர்.

**தெய்வநாயகி:** *(கண்ணனைப் பார்த்து)* சாரி மிஸ்டர் கண்ணன். அதுக்கு ஒரு மேடம் அப்பாய்ண்ட் ஆயிட்டாங்க.

**கண்ணன்:** இட்ஸ் ஆல் ரைட்... (தோளைக் குலுக்கியபடி...) அந்த மேடம் என்னைவிடத் தகுதி அதிகம் உள்ளவங்களா இருப்பாங்க...

*திரும்புகிறான்....*

*கேபின் கதவைத் திறந்து கொண்டு கீதா ஃபைலுடன் வெளியே வருகிறாள். கண்ணனும் கீதாவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்கிறார்கள். இருவரும், தம் நினைவைப் புதுப்பித்துக் கொள்கிறார்கள். சட்டென்று நினைவு வந்தவனாக-*

**கண்ணன்:** ஓ... நீங்கதான் அந்த அதிர்ஷ்டக்கார மேடமா?

**(கீதா புரியாமல் திகைக்கிறாள்... தெய்வநாயகி விளக்குகிறாள்.)**

**தெய்வநாயகி:** வேலை விஷயமா விசாரிச்சார். நீங்க அப்பாயிண்ட் ஆயிட்டதா சொன்னேன்.

தொலைக்காட்சித் தொடர்




**கண்ணன்:** *(கீதாவிடம்)* பாராட்டுகள்.

**கீதா:** *(தயக்கத்துடன்)* தேங்க்ஸ்... இந்த வேலையை ரொம்ப எதிர்பார்த்தீங்களோ? *(சேது முந்திக் கொண்டு...)*

**சேது:** ரொம்ப... ஊர்லேந்து பணம் அனுப்புறதை நிறுத்திட்டார், அவங்க அப்பா...

*கீதா ஒரு கணம் யோசிக்கிறாள்.*

**கீதா:** என் கேபினுக்கு வர முடியுமா, ப்ளீஸ்...

*அவள் கேபினுக்குள் மூவரும் நுழைகிறார்கள். மிகச் சிக்கமான தடுப்புகள் கூடிய அறை. அவள் அமர, அவள் முன் இருவரும் அமர்கிறார்கள். கீதா, சேதுவைப் பார்க்கிறாள்...*

**கண்ணன்:** மேடம், இவன் என் ஃப்ரெண்ட். ஒரே ஊர். பத்து வருஷம் ஒரு பள்ளிக்கூடத்துல ஒண்ணா படிச்சோம்... எனக்கிருக்கிற ஒரே நண்பனும் இவன்தான். ஆட்டோ ஓட்டறான்... எனக்கும் அப்பப்போ உதவுகிறவன்.

*கீதா அவனை மரியாதையுடன் பார்க்கிறாள்.*

**கீதா:** *சார்...* எனக்கு மிஸஸ் அம்சான்னு ஒரு ஃப்ரெண்ட். அவங்க கம்பெனியில எனக்கு ஒரு வேலை ஏற்பாடு பண்ணியிருந்தாங்க. அது இன்னும் 'வேகன்டா' இருக்கான்னு தெரியலை... நீங்க விரும்பினா, நான் அதை விசாரிக்கலாமா?

**கண்ணன்:** ஓ... அவசியம் செய்யுங்க மேடம். வேலை அவசியம்...

**சேது:** வேலை இல்லாதவனை தெரு நாய்கூட கடிக்க வருது, மேடம்.

**கீதா:** *(சிரித்தபடி)* புரியலையே....

**சேது:** வேலைல இருக்கிறவன், வேளையோட வீட்டுக்கு வருவான். வேலை இல்லாத

**பிரபஞ்சன்**

தால, இவன் ராத்திரி பத்துக்கும் பன்னி ரண்டுக்கும் வீடு திரும்பறான். தெரு முனையில ஒரு நாய் இவனைப் பார்த்தா, அதுக்கு என்ன தோணுதோ? வீடு வரைக்கும் துரத்திட்டு வந்து விட்டுட்டுப் போவுது.

(எல்லோரும் சிரிக்கிறார்கள்)

**காட்சி 16**

**மாலை/விளையாட்டுத் திடல்**

**பாத்திரங்கள்: அம்சா, கீதா, ஒரு சிறுவன்**

குடியிருப்பு வீடுகளுக்கு மத்தியில் இருக்கும் சின்ன விளையாட்டுத்திடலில், சிறுவர்கள் சிலர் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். திடலைச் சுற்றி நடந்து கொண்டிருக்கிறார்கள் அம்சாவும் கீதாவும். அம்சா, சுடிதாரில் இருக்கிறாள். கீதா, வழக்கம் போல் (பெரும் பாலும் புடைவையில், சில வேளைகளில் வேறு விதமான ஆடைகளில்) பேசிக் கொண்டிருக் கும்போதே, குடியிருப்பு வீடுகளில் விளக்குகள் ஏற்றப்படுகின்றன. அவ்வப்போது - கேமரா, தூரத்திலிருந்து அவர்களை நோக்கி நெருங்கி வருகிறது.

**அம்சா:** பையன் எப்படி இருக்கான்... சூப் பர்பா...

**கீதா:** ஆ... சும்மா இருங்க... எனக்கு ஒரு சின்ன குற்ற உணர்வு. அவன் வேலையை தட்டிப் பறிச்சிட்டேன்னு நினைச்சுடுவா னோன்னு...

**அம்சா:** கீ.நீ என்னடி பண்ணுவே... வேலை கிடைக்கிறது, லாட்டரியில பரிசு விழறது மாதிரிதானே... அதிர்ஷ்டமா இல்ல போச்சு...?

**கீதா:** கிராமத்துப் பையன் போல. சுமா ரான வசதி உள்ள குடும்பமாம். அப்பா உதவி இல்லாமே வாழணும்னு ஆசைப்படறானாம். புத்திசாலி மாதிரிதான் இருக்கு.

**அம்சா:** சொல்லு.

**கீதா:** கவலைப்படாதே... எங்க அம்சா மாமி எனக்கு பார்த்து வச்ச வேலையை நான் உனக்கு வாங்கித் தர்றேன். எங்க மாமி...

**அம்சா:** (அம்சா வெட்டியபடி) ஊருக்கு உழைக்கிற உத்தமத் தியாகின்னு சொன் னியோ?

**கீதா:** அப்படிச் சொல்லலை.

**அம்சா:** வேற எப்படி?

**கீதா:** மெழுகுவத்தின்னு...

(முறைப்பது மாதிரி பாவனையுடன்...)

**அம்சா:** பயங்கரக் கில்லாடிங்கப்பா, நீங் கல்லாம்...

**கீதா:** ஏன் மாமி?

**அம்சா:** குச்சி ஐஸ், கோன் ஐஸ்-னா தேவ லாம். ஐஸ் வண்டியே இல்ல வைக்கிறே...

சிரிக்கிறார்கள்.

**பாசம்...நேசம்...பூவாசம்....!**

❖ பாரதிபாஸ்கரின் 'பூப்போல... பூப் போல..' மினிதொடர் சமூக அக்கறையுடன் செதுக்கப்பட்டிருந்தது.

தஞ்சாவூர் - 12, ஜி. ராமதாஸ்.

❖ இன்றைய வாழ்க்கை முறையில் தவிர்க்க முடியாத அம்சமாகிவிட்ட தத்து எடுக்கும் முறையை எப்படி அணுகவேண்டும் என்பதை

**கீதா:** அப்படி இல்ல மாமி... தேடி வந்து, ஆபீசர்கிட்டே சொல்லி, ஏற்பாடெல்லாம் பண்ணி... எத்தனை அக்கறை எடுத்துக்கிறீங்க... யார் செய்வா?

**அம்சா:** போறும்....போறும்...

(ஒரு சிறுவன் ஓடி வந்து)

**சிறுவன்:** மாமி... மாமாவுக்கு காபி வேணு மாம். வர முடியுமான்னு கேட்டார்.

(சொல்லிவிட்டு ஓடுகிறான்)

**அம்சா:** காபி ஞாபகம் வந்தாத்தான் நான் ஒருத்தி இருக்கிறதே தெரியறது உங்க மாமாவுக்கு... காபி பிசாசு.

**கீதா:** பாவம் வயசாச்சு...

**அம்சா:** (கோபமாக) யாருக்குடி?

**கீதா:** மாமாவுக்கு... உங்களுக்கு ஆயிடுமா? (சிரிப்பு)

**காட்சி : 17**

**பாத்திரங்கள்: கீதா, தெய்வநாயகி, செல்வம், குழந்தைகள்.**

நகரத்தின் ஒரு பெரிய தியேட்டரில் இருந்து, படம் முடிந்து, மக்கள் வெளியே வருகிறார்கள். தமிழ்நாடே, தியேட்டரின் வெளியே வருவதும், போவதுமாக இருக்கிற பிரமை தருகிறது. முக்கிய வீதியில், விளங்கும் பெரிய பெரிய பிராந்தி மற்றும் ஒயின் கடைகள் தெரிகின்றன. துணிக்கடைகள், நகைக்கடைகள், இக் காட்சி களின் ஊடே, பள்ளிக்கூடம் விட்டுப் போகும் குழந்தைகள்... என நகரக் காட்சிகள் பலப்பல தெரிகின்றன.

ஏதோ ஒரு பஸ்ஸிலிருந்து கீதாவும், தெய்வ நாயகியும் இறங்குகிறார்கள். கீழ் மத்திய தர வீடுகள் மற்றும் குடிசைப் பகுதி என்று பார் வையில் தெரிகிற பகுதியை நோக்கிச் செல் கிறார்கள்.

இவர்களின் பேச்சுக்கிடையே 'நடந்தவை' பின் திரும்பல் (ஃபிளாஷ்பேக்) முறையில் சொல்லப்படுகின்றது.

அவர்கள் முதுகு தெரிகிறது. நடக்கும் அவர்களை நோக்கி, கேமரா மெல்ல நகர்கிறது.

**தெய்வநாயகி:** நம் ஆபீசில்தான் செல் வத்தை சந்திச்சேன். ஏதோ நன்கொடை வாங்க வந்த நபர்னு முதலில் அவரைச் சாதாரணமா

அழகாக உணர்த்திவிட்டார்.
சென்னை - 61, ஆர். நாகராஜன்

❖ 'நாலு பேர் கொண்ட சிறு குடும்பம். நால்வரும் வெவ்வேறு வீட்டிலிருந்து வந்தவர்கள்'_ சின்னக் கருவை வைத்துக் கொண்டு, பாசமும் நேசமும் கொண்ட மனிதர்கள் எப்படிப் பின்னிப் பிணைந்தனர் என்பதை, பூப்போன்ற மென்மையுடனும், பூவின் வாசத்துடனும் படைத்திருந்தார். பாராட்டு.
சென்னை - 78, ராதா ஸ்ரீதர்



நினைச்சுட்டேன்... (சந்திப்பு நிகழ்ச்சி வருகிறது)

**செல்வம்:** (அலுவலகத்தில் இந்த உரையாடல்) நாங்க நடத்தறது வெறும் ராப் பள்ளிக்கூடம் இல்லைங்க. 'டியூஷன்' எடுத்துச் சம்பாதிக்க அந்தப் பகுதியைத் தேர்ந்தெடுக்க வேண்டாமே எங்களுக்கு. இந்தப் பள்ளிக்கூடம், அங்கு நடத்தற பாடத் திட்டம், எதுவும் பிடிக்கலை. இந்தப் படிப்பு, குழந்தைகளை, குழந்தைகளா மதிக்கலை. அவர்கள் எதிர்கால வாழ்க்கைக்குப் பயனுள்ளதா இல்லை.. கூவத்து ஓரம் வாழுற குழந்தைக்கு, கூவத்தைப் பற்றித் தெரியலை. கங்கை, கோதாவரி, டைகிரீஸ்னு சொல்லித் தரது, அபத்தம் இல்லையா? இருநூறு வருஷத்துக்கு முன்னால, பச்சையப்ப முதலியார் கூவத்துல குளிச்சிருக்கார். அவர் வெள்ளைக்காரன் துபாஷி. அப்போ, கூவம் சுத்தமா இருந்துச்சு. எதனால கூவம் அழுக்காச்சி? அது புறப்பட்டு வர்ற இடங்களே, தொழிற்சாலைக் கழிவு சேர்றதும், சாக்கடை கலக்கறதும், குப்பை கொட்டறதும்தான், ஒரு நல்ல நதியைக் கெடுத்துடுச்சு. இதைச் சொல்ல வேண்டாமா, வரலாற்றுப் பாடம்? சொல்லித் தந்தாதானே சுற்றுப் புறச் சூழல் பத்தின ஞானம் குழந்தைகளுக்கு ஏற்படும்?

(காட்சி மாறுகிறது... குடிசைப் பகுதியை கீதாவும், தெய்வநாயகியும் அணுகுகிறார்கள்)

**கீதா:** நல்லா இருக்கே... இப்படித்தான் குழந்தைக்குச் சொல்லிக் கொடுக்கணும்னு தோணுது. அரசாங்கப் பாடம் நடத்தறது இல்லையா?

**தெய்வநாயகி:** சிலபஸ் பாடத்தையும் நடத்தறாங்க... அதை விட முடியாதே.. அதைக் கத்துக்கத் தானே இவங்க டியூஷன் கிளாசுக்கு பிள்ளைங்க வரது. ஆனா, பள்ளிக் கூடத்துல தராத விளக்கத்தையும் தர்றாங்க. ஒரு பாட்டு. 'கான மயிலாடக் கண்டிருந்த வான் கோழின்னு'

**கீதா:** நானும் படிச்சிருக்கேன்.

**தெய்வநாயகி:** அந்தப் பாட்டோட கருத்தே தப்புன்னு செல்வம் சொல்வாரு...

(காட்சி மாறுகிறது. செல்வமும், தெய்வநாயகியும் ஒரு சின்ன, அலங்காரம் அற்ற உணவு விடுதியில் பேசிக் கொண்டிருக்கிறார்கள்)

**செல்வம்:** மயில் ஆடறதைப் பார்த்து ஒரு வான்கோழி தானும் தன்னோட அழகில்லாத சிறகை விரிச்சு ஆடற மாதிரின்னு பாட்டு சொல்லுது. குழந்தைங்க மனசுல, வான் கோழியைப் பத்தி அன்போ, அக்கறையோ வருமா? குழந்தைங்க, பறவையை வெறுக்கத் தொடங்கினா, போகப் போக மனுஷ குலத்தையும் வெறுக்கத் தொடங்காதா?

(காட்சி மாறுகிறது.. குடிசைப் பள்ளிக்கூடம். தரையில் அமர்ந்திருக்கும் குழந்தைகள் சொல்கிறார்கள்...)

**குழந்தை- 1:**
சின்னஞ் சிறு குருவி போலவே - நீ
திரிந்து பறந்து வா பாப்பா

**குழந்தை -2:**
வண்ணப் பறவைகளைக் கண்டு - நீ
மனதில் மகிழ்ச்சி கொள்ளு பாப்பா

**குழந்தை - 3:**
கொத்தித் திரியும் அந்தக் கோழி

**குழந்தை - 1:**
பாலைப் பொழிந்து தரும் பாப்பா - அந்தப்
பசு மிக நல்லதடி பாப்பா...

(காட்சி மாறுகிறது. தெய்வநாயகியும் கீதாவும்)

**தெய்வநாயகி:** உண்மையான மனுஷன் இந்த செல்வம்னு புரிஞ்சுது.

**கீதா:** அவசியம் சந்திக்க வேண்டியவர் தான், செல்வம்.

(குடிசைக்குள் நுழைகிறார்கள். ஒன்றிரண்டு குழந்தைகள் எழுதிக் கொண்டும் படித்துக் கொண்டும் இருக்கிறார்கள். ஒரு சிறுவன், தெய்வநாயகியை அடையாளம் கண்டு சிரிக்கிறான்)

**தெய்வநாயகி:** எங்கப்பா உங்க அண்ணன்?

**சிறுவன் தாமு:** இப்பத்தாங்கா, யாரோ ரெண்டு பேர், வெள்ளை வெள்ளையா சட்டை போட்டவங்க, வந்து அண்ணனை இட்டுக்குனு போனாங்க...

**இன்னொரு சிறுவன்:** காரில போனாங்கக்கா, அண்ணன்.

**தெய்வநாயகி:** (கீதாவிடம்) வருவார்: வெயிட் பண்ணுவோம்...

(தொடரும்)




தனித் தன்மை மிக்க கலைஞர்கள் ஐம்பது – அறுபது பேரை நாடு பெயர்த்து அழைத்து வந்து நிகழ்ச்சிகள் நடத்துவது ஒன்றும் இலேசான வேலையில்லை. ஆகவே, க்ளீவ்லேண்டில் நடைபெறும் தியாகராஜ ஆராதனையில் சென்னை இசை விழாவில் கேட்கக் கூடிய சங்கதிகளும் ஒலிக்கின்றன; சந்தடிகளும் இருக்கின்றன!

ஆனால், சென்னையில் கிடைத்தற்கரியதொரு விஷயமும் இங்கே உண்டு. இசை விழா நடக்கின்ற பத்து நாட்களும், கலைஞர்கள், ரசிகர்கள், விழா அமைப்பாளர்கள் ஆகிய மூன்று பிரிவினரும்


• அலங்கரித்த மேடை


• ஆராதனை

# சங்கதிகள்; சந்தடிகள்!

ஒரே இடத்தில் தங்கி உறவு கொண்டாடுகிறார்கள். சில நேரங்களில், உறவுக்கே உரிய ஒட்டுதல் பூக்கிறது; வேறு சமயங்களில் உரசல்கள் நிகழ்கின்றன. ஆனால் பெரும்பாலான பொழுதுகளில் உறவு, நட்பு, ஒற்றுமை, வேற்றுமை யாவையும் கடந்த கலைப் பிணைப்பு அனைவரையும் இணைக்கிறது.

'லால்குடி லாவண்யம்' என்ற நிகழ்ச்சியில் நடனக் கலைஞர் ராதா, லால்குடி ஜெயராமனின் வர்ணங்கள், தில்லானாக்களின் நயங்களை அலச, பார்வையாளர்கள் வரிசையில் பி.எஸ். நாராயணசாமி, எஸ். ராஜாராம், சுகுணா புருஷோத்தமன் என்று மூத்த வித்வான்கள், அமர்ந்து ரசிக்கிறார்கள். நீலாம்பரி வர்ணத்தின் நெளிவு சுளிவுகளை லால்குடி விஜயலக்ஷ்மி பாடிக் காட்ட, நம் அருகே அமர்ந்திருக்கும் வித்வான்கள் சுதா ரகுநாதன், ஸ்ரீராம் குமார், அருண்பிரகாஷ் கற்பனை தூண்டப்பட்டு ஆளுக்கொரு


• 'ஸரோஜ தள நேத்ரி' பாடிய ஷ்யாமளா

நீலாம்பரி முனகிப் பாடுகிறார்கள்.

தமது நாட்டிய நிகழ்ச்சியை முழுவதும் அமர்ந்து பார்த்து ரசித்த சுதா ரகுநாதனுக்கு அபிநயத்திலேயே மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவிக்கிறார் அலர்மேல்வள்ளி.

"நிஷா ராஜகோபால் பாடி நான் கேட்டதில்லையே...?'' பெரியவரின் கேள்விக்குப் பாட்டையே பதிலாக்குகிறார் நிஷா - அரங்க வாசலில் நின்றபடி தாளம் போட்டுக் கொண்டு 'யாரோ, இவர் யாரோ?' என்ற அருணாசல கவிராயரின் பாடலைப் பாடுகிறார்!

தாத்தா மைசூர் வாசுதேவாச்சார்யார் பற்றி பேரன் ராஜாராம் இந்தத் தலைமுறைக் கலைஞரான ஸ்ரீராம்குமாரிடம் சிரிக்கச் சிரிக்கக் கதை சொல்கிறார். பேண்ட் சட்டையில் ஸ்ரீ முஷ்ணம் ராஜாராவையும் முல்லை வாசல் சந்திர மௌலியையும் அடையாளம் காணத் தடுமாறுகிறோம். தம் வீட்டுக் கல்யாணம் போல் ரவிகிரண் "சாப்பிட்டீங்களா?'' என்று விசாரித்துக் கொண்டிருக்கிறார்.

**ப**ல்கலைக் கழக வளாகத்தில் நிகழ்ச்சிகள். அதன் எதிரே 'கம்ஃபர்ட் இன்'. அனைவரும் தங்கும் இடம். இங்கே காலை உணவு நேரத்தில், அப்பாவுக்கு மைக்ரோவேவ் அடுப்பில் காபி சுட வைத்து எடுத்துப் போகும் லால்குடி கிருஷ்ணனைப் பார்க்கலாம். பின் மாலையில் சஞ்சய் சுப்ரமண்யன், மணிமாறன், பாலசுப்ரமண்யன், அமர்ந்து ப்ருகாக்கள் பற்றியொரு பிரைவேட் 'லெக் - டெம்' நடத்தக் காணலாம்.

கலைஞர்களை இப்படி ஒன்று சேர்க்கும் இந்தக் 'கல்யாணம்' நடக்கிற க்ளீவ்லேண்ட் நகரம் ஒஹையோ மாநிலத்தில் இருக்கிறது. ஒஹையோ, அமெரிக்க நாட்டின் மைய மேற்கு (mid-west) மாநிலங்களுள் ஒன்று. க்ளீவ்லேண்டின் தமிழர் மக்கள் தொகை சுமார் ஐயாயிரம். இவர்கள் கால் நூற்றாண்டுக்கு முன் ஆசைக்காக ஆரம்பித்த தியாகராஜ ஆராதனை, இன்றைக்குப் பெரிய வளர்ச்சி கண்டிருக்கிறது. அமெரிக்கா முழுவதிலுமிருந்து இதற்கு ரசிகர்கள் திரள்கிறார்கள். ஏப்ரல் 19 அன்று நடைபெற்ற ஆராதனையில் சுமார் அறுபது கலைஞர்கள் பஞ்சரத்னக் கீர்த்தனைகள் இசைக்க, இரண்டாயிரம் ரசிகர்கள் கேட்டு மகிழ்ந்தார்கள்.

தியாகராஜ ஆராதனை நடைபெற

• பரிசு பெற்ற குழந்தைகள்



க்ளீவ்லேண்டிலிருந்து... சீதா ரவி

• சுதாரகுநாதன், ஸ்ரீராம்குமார்



வேண்டிய வகுள பஞ்சமியை (தை மாதம்), சென்னைவாசிகள் செளகரிய பஞ்சமியாக மாற்றிக் கொள்ளவில்லையா...? அதே பாணியில் க்ளீவ்லேண்ட் ஆராதனை ஈஸ்டர் விடுமுறையையொட்டி ஆண்டு தோறும் நடைபெறுகிறது.

இதற்கென்றே சென்னையிலிருந்து தருவிக்கப்படும் கலைஞர்கள் ஒருபுறம், வேறு அமைப்புகளின் அழைப்பை ஏற்று அமெரிக்க சுற்றுப்பயணம் மேற்கொண்டு, க்ளீவ்லேண்டையும் தொட்டுச் செல்லும் கலைஞர்கள் இன்னொருபுறம்; அமெரிக்க வாசிகளாகிவிட்ட இந்தியக் கலைஞர்கள் மற்றொருபுறம்; அமெரிக்காவில் பிறந்து வளர்ந்து உள்ளூர் ஆசிரியர்களிடமும் வந்து போகும் கலைஞர்களிடமும் கஷ்டப்

• அரங்குக்கு வெளியே...



பட்டுப் பயின்று தேறிய கலைஞர்கள் மேலும் ஒரு ரகம்... இத்தனை பேருக்கும் பத்து நாள் விழாவில் சுமார் அறுபது கச்சேரிகளில் வாய்ப்புகள் கிடைக்கின்றன; மிதமான சன்மானம் கிடைக்கிறது; ஒரு மிகப் பெரிய ரசிகர் வட்டத்தின் அறிமுகம் முக்கியமாகக் கிடைக்கிறது.

கடல் கடந்து உருவாகியுள்ள இந்த ரசிகர் வட்டம், திறந்த மனத்தோடு கச்சேரிகளுக்கு வருகிறது. நட்சத்திரக் கலைஞர்களைக் கண்டும் கேட்டும் பரவசமடைகிறது; ஜனரஞ்சக லால்குடி பாணியையும் ரசிக்கிறது; சம்பிரதாயத்துக்குப் பெயர்பெற்ற ஆர்.கே.ஸ்ரீகண்டனின் கச்சேரியையும் கவனமாய்க் கேட்கிறது.

அமெரிக்காவில் கர்னாடக சங்கீதம் எத்தனை வளர்ச்சியுற்ற, எந்த கைய இடத்தை (இந்தியர்களிடையே) பெற்றுள்ளது என்பதற்கு மிகச் சிறந்த அறிகுறி அங்குள்ள குழந்தைகளின் பாட்டுந் திறன்தான்! வயதுக்கு மீறிய முதிர்ச்சியும் கச்சிதமும் நிரம்பப் பல குழந்தைகள் பாடுகின்றனர். ஆராதனை இசைப் போட்டியில் எட்டு வயது ஷ்யாமளா பாடிய 'ஸரோஜ தளநேத்ரி' கண் பனிக்க வைத்தது. பல்லவி ஸ்ரீராமின் 'ஆரகிம்பவே' நிமிர்ந்து உட்கார்ந்து கவனிக்க வைத்தது. பதினொரு வயது ராமகிருஷ்ணன், ரக்தி குன்றாமல் 'ஸ்ரீரகுவர' பாடுகிறான். கல்கி நினைவாக பாவத்துக்கு அளிக்கப்படும் சுருதிப் பெட்டி பரிசு பெற்றுள்ளனர் ராமகிருஷ்ணன், ஷில்பா கிருஷ்ணன். இவர்களைப் போல் நூற்றுக்கணக்கான குழந்தைகள் ஆசையோடு பாடுகிறார்கள். இவர்கள் பேச்சில் தான் அமெரிக்க மழலை குலாவுகிறது; பாடல்களில் உச்சரிப்பு சுத்தமாக இருக்கிறது.

இசையைக் கற்பிக்க இத்தனை முயற்சி மேற்கொண்டுள்ள பெற்றோர் தமிழ் மொழிக்கு என்ன செய்யப் போகிறார்கள்? "தமிழ் பேச வருமா?" என்று கேட்டால், "ஓ, நோ, ஐ கேன்ட் ஸ்பீக் டாமில்!" என்றல்லவா பதில் வருகிறது!

(தினசரி க்ளீவ்லேண்ட் செய்திகளுக்கு கல்கி ஆன்லைனை 'கிளிக்' செய்யவும்.)

(அடுத்த வாரம்)

## நவக்கிரக ஆன்மீக பயணம்

நாள் : சென்னையில் இருந்து 10.5.03 இரவு புறப்பட்டு 13.5.03 காலை திரும்புதல்.

**2 தினங்கள் ரூபாய் 900/-**

வசதி : இரயிலில் படுக்கை வசதியுடன் சென்று வருதல்.
இரவு தங்க வசதியான அறைகள், திருத்தலங்களை சுற்றிப் பார்க்க வேன் வசதி உட்பட. (சாப்பாடு நீங்கலாக)
மற்றைய தேதிகளில் சிறு சிறு குழுக்களாகவும் அழைத்துச் செல்லப்படும்.

சென்னையில் தொடர்பு போன் : 24720885

**VISWAM TOURS & TRAVELS**
**VISWAM GUEST HOUSE**

33, திருமஞ்சன வீதி, திருவிழந்தூர்,
மயிலாடுதுறை - 609 001.
போன் : (04364) 227228

## இலவச வாழ்வியல் பயிற்சி!

80 நூல்கள் எழுதி தமிழ்நாடு அரசு முதல் பரிசு பெற்ற வாழ்வியல் எழுத்தாளர் **மெர்வின்** பயிற்சி தருகிறார்.

**"வெற்றி மேல் வெற்றி!"**



இடம் : மீடியா சென்டர்,
47 எல்டாம்ஸ் சாலை,
சென்னை - 600 018.
தேதி : 4.5.2003 ஞாயிறு
நேரம் : மாலை 4 மணியிலிருந்து 7 மணி வரை

*அனைவரும் வாரீர்! வளர்வீர்!! உயர்வீர்!!!*

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி...
**தொழில் & வணிகம் மாத இதழ்.**
தொலைபேசி : 24710716, 28153742

## ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்தோத்ரமாலா

தமிழ்க் கடவுள் முருகப்பெருமானை மனதார த்யானித்து வழிபட சஷ்டி கவசம், ஸ்கந்தகுரு கவசம், சண்முக கவசம், கந்தரநுபூதி, கந்தர் கலிவெண்பா, சுப்ரமண்ய புஜங்கம், சுப்ரமண்ய வல்லீ, தேவஸேனா அஷ்டோத்ரம் மற்றும் ஸஹஸ்ரநாமம் அடங்கிய புத்தகம் விலை ரூ. 10.00

## ஸேது, ப்ரயாகை, காசீ, கயை, பத்ரி, கேதார யாத்ரா விளக்கம்

ஆசிரியர் ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா
க்ஷேத்ர யாத்திரை செல்வதின் நோக்கம், எந்தெந்த அனுஷ்டானங்களைக் கடைப்பிடித்து, எப்படி யாத்திரை செல்ல வேண்டும் என்னென்ன கார்யங்களை எப்படியெப்படி செய்ய வேண்டும் யாத்திரை செல்வதின் காரணம் காரியம் முறைகள் தாத்பரியம், தத்துவம் பலன் ஆகியவை விளக்கமாக உள்ள நூல். விலை ரூ. 20.00

## தர்ம சாஸ்திரம்

S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி ரூ. 35.00
தமிழில் வர்ணாஸ்ரம தர்மம், ஆந்ஹிக தர்மம், ச்ராத்த முறை முதலியவற்றை சூழ்நிலைக்கேற்ப சுருக்கியும் தெளிவாகவும் தமிழில் அரிய நூல்களில் இருந்து திரட்டி தொகுத்தளித்துள்ள அரிய நூல்

## நாற்பது ஸம்ஸ்காரங்கள்

விலை ரூ. 50.00
ஆசிரியர் ஸ்ரீவத்ஸ ஸோமதேவ சர்மா
மனிதனின் ச்ரேயசுக்கு அஸ்திவாரமான நாற்பது ஸம்ஸ்காரங்களின் உட்கருத்தும், மந்த்ரார்த்தங்களும் தெளிவாக ப்ரயோகத்துடன் விளக்கப்பட்டு புண்யாகவாசனம், முகாந்தம், ஜயாதி ஹோமம், நாந்தி ஹோமம் ஆகியவை அடங்கியது.

## BIOGRAPHY - THE SAGE OF KANCHI

The succint Biographical sketch of The Sage of Kanchi Events spread over nearly hundred years.Bird's eyeview of the History of the Great Acharya Swami Rs. 25.00

**ஸ்ரீ குரு ஜகத்குரு ஸதாப்தி பப்ளிகேஷன்ஸ்**

எண் 84/12(158/12), லேக் வியூ ரோடு
மேற்கு மாம்பலம் (Station Rd.Junction)
சென்னை – 600 033. போன் : 24747066

# இந்த நூற்றாண்டில் இந்து மதம் 4

பாற்கடலை தேவர்களும் அசுரர்களும் கடைந்தார்கள். அகோரமாய் வெளிப்பட்டது ஆலகால விஷம். சுற்றிச் சுழன்று துரத்திய அதனிடமிருந்து தப்பிக்கச் சிவன் காலடியில் சென்று பணிந்தார்கள். அவரோ ஆலகாலத்தையே விழுங்கி நீலகண்டன் ஆனார்.

வேடிக்கையாய்க் கேட்டார் ஆதிசங்கரன். "ஆலகாலக் காற்று பட்டவுடனேயே அண்டமெல்லாம் நடுங்கியது. நீர் மட்டும் அதென்னவோ குளிகை என்று நினைத்து உருட்டியெடுத்து வாயில் இட்டுக் கொண்டீரே!" என்று சிவனையே சீண்டிப் பார்த்தார்.

நஞ்சுண்டவர் நலமாய் இருப்பது எப்படி? அதற்கும் சங்கரரே விளக்கம் தந்தார். கண்டம் கறுத்தவனின் அருகில் அண்டநாயகி அம்பிகை இருக்கிறாள். அவள் காதுகளில் அணிந்திருக்கும் தாடங்கங்களின் (காதணி - தோடு) திறனால் ஆலகாலம் அருந்தியவர் காப்பாற்றப் பட்டார்.

"கராலம் யத் க்ஷ்வேலம் கபலிதவத காலகலனா

நசம்போஸ் தன்மூலம் தவஜனனி தாடங்க மஹிமா" - 'மிகக் கொடுமையான விஷமுண்டவர்கூட காலனால் பிடிக்கப்படாமல் இருப்பதன் காரணம் யானறிவேன்; அது உன் தாடங்கச் சிறப்பு!' என்பதாகக் கூறுகிறார்.

அம்மையப்பனாய் நிற்கும் அந்தப் பரமானந்தப் பரம்பொருளின் உன்னதத்தை உரைக்க வந்த அபிராமி பட்டரோ, அப்பனின் கழுத்து விஷம் அம்மா கைபட்டதால் அமுதாகவே மாறிவிட்டது என்றார். அப்பா விழுங்கும்போது அது விஷம்;

அவர் தொண்டைக்குள் இறங்கும் போதும் அது விஷம்; ஆனால், அதை இன்னமும் அதிகமாக இறங்கி விடாமல் அம்மா, அப்பா கழுத்தில் கை வைத்து அழுத்தித் தடுத்தாளே - அப்போது அவள் கை பட்டதால் அது அமுதமாகவே மாறிவிட்டது. வார்சடையோன் அருந்திய நஞ்சை அமுதாக்கிய ஆரணங்கு அவள்.

ஏதோ மனிதர்களுக்குள்ளே உறவுகளும் உணர்வுகளும் பின்னல்களும் பிரிவுகளும் இருப்பது மாதிரியே, தெய்வ வடிவங்களுக்கிடையேயும் இருப்பதாகச் சொல்லி.... அவர்களும் சண்டையிட்டார்கள்... சேர்ந்து கொண்டார்கள்... உறவு பூண்டார்கள்... உருகி நின்றார்கள்... இதெல்லாம் என்ன? சாத்தியமா? சாத்தியப்படலாமா?

மனிதனையும் தெய்வத்தையும் மருவிலும் மலையிலும் நிற்க வைத்து இடையே பெரும் பள்ளத்தையும் வெட்டி வைக்கவில்லை இந்து தர்மம்.

தெய்வம், சமயம், தெய்வீகம், ஆன்மிகம் - இவை யாவுமே மானுட இனம் மேம்பட்டு வாழ்ந்து இறைநிலை எய்துவதற்காகவே என்பதில் இந்து மதத்திற்கு எவ்வித ஐயமும் கிடையாது.

உண்டாக்கிக் கொள்ளும் முறை. எங்கேயோ எட்டத்தில் இருக்கிற பரம்பொருள், அச்சுறுத்தல் தருகிற பரம்பொருள், ஓரத்தில் நின்று எடை போடும் பரம்பொருள் என்று எண்ணினால், தெய்வத்தைக் காவல்காரனாய்க் காணத் தோன்றுமே தவிர, அன்பினனாய் நோக்கத் தோன்றாது. தெய்வமும் மனிதனும் நீதிபதி - குற்றவாளி என்பதாகி விட்டால் அங்கு அணுக்கம் வர முடியாது. மொத்தமான ஒரு பொது நீதிபதியாகக் கடவுள் இருப்பதைவிட, ஒவ்வொரு மனிதனும் மேம்பட்டு மேம்பட்டு கடவுள் தன்மை பெறும் உயர்வை எட்டுவதற்கு, உறவு முறை, நம்பிக்கையோடு நல்வழியும் காட்டுகிறது.

இத்தகைய உறவு மனப்பான்மையின் விரிவாக்கம்தான் இறைவனும் இறைவியும் ஆடிக் கொள்வதும் பாடிக் கொள்வதும் விளையாடிக் கொள்வதும்!

அன்பை வெளிப்படுத்த உறவு மனப்பான்மை உதவுகிறது. பக்தியின் ஆத்மார்த்த அன்பைக் காட்டவும் அதுவே வழியாகும்.

# ஏதேனுமானாலும்...

அதேபோன்று, ஒவ்வொரு தனிமனிதனும் தெய்வநிலையைத் தொட முடியும் என்பதிலும் தெளிவாக உள்ளது இந்து தர்மம்.

மனிதனை தெய்வத்திற்கும் தெய்வீகத்திற்கும் அருகாமையில் அழைத்துச் செல்லவும், உணர்வும் உள்ளமும் ஒன்றிடச் செய்யவும் ஏற்படுத்தப்பட்ட எளிமையான வழிதான், இறைமையுடன் உறவு

ஒரு கணவனும் மனைவியும் இருவருமே இறை நம்பிக்கை மிக்கவர்கள். தினமும் திருக்கோயிலுக்குச் சென்று தூய்மைப்படுத்தி, அபிஷேக ஆராதனைகள் செய்து ஆண்டவனை வழிபடக் கூடியவர்கள். அன்றும் அப்படித்தான். திருக்கோயில் திருக்காப்பு நீக்கினார் அவர். அருகில் எப்போதும் போல் மனைவி இடுப்பில் குடத்துடன் நின்றாள். குடத்தை விட்டெறிந்துவிட்டு

டாக்டர் சுதா சேஷய்யன்



மனைவி உள்ளே ஓடுவதை மட்டுமே கண்டார். அடுத்து அவர் பார்த்தது - அவள் உள்ளிருந்த சிவலிங்கத்தின் மீது எச்சில் உமிழ்ந்து கொண்டிருந்தாள்.

ஆண்டவன் மீது எச்சில் உமிழ்வதா? அபசாரமல்லவா! ஆகம விதியுணர்ந்த அந்த பக்தருக்கு நெஞ்சைப் பிசைந்தது. இவளா என் மனைவி? முறை தெரியாத முட்டாள், இவளா என் மனைவி?

வழிபாடு தெரியாதவள் வாழ்க்கைத் துணையாக வரவும் தகுதியற்றவள் என்று துறந்தார். மனைவியல்ல என்று சபதம் பூண்டார். அபசாரம் துடைக்க அதிகப் படி பூசை செய்தார். திருக்காப்பிட்டு விட்டு இல்லம் திரும்பினார். மனைவியோ, மனைவி யல்லவென்று துறக்கப்பட்டதனால், அங்கேயே தூண் அடியில் துவண்டு கிடந்தாள்.

இரவு எவ்விதக் கலக்கமுமின்றி கண்ணுறங்கினார் கணவர். துயிலில் வந்து தட்டினார் திருநீற்றுக்காரர். நெடிய திருமேனி. ஆனால்... ஆனால்... உடலெங்கும் கொப்புளங்கள். 'அட ஆண்டவா! ஆண்டவனுக்கே கொப்புளமா? சிவனே உன்னை யார் இப்படிச் செய்தார்கள்?' துடித்தார், தவித்தார் பக்தர். 'உடல் எரிகிறதா ஐயனே?'

'ஆமாம். உடலெங்கும் எரிச்சல். ஆனால் நல்லவேளை. உன் மனைவி எச்சில் உமிழ்ந்தாளே, அந்த இடது தோளில் மட்டும் கொப்புளமுமில்லை, எரிச்சலுமில்லை. அந்தக் குளிர்ச்சி உடல் முழுவதும் பரவுகிறது' -ஆடவல்லானின் பதிலில் ஆடிப் போனார் பக்தர்.

மெல்ல விளக்கினார் பெருமான்.

கோயில் கதவைத் திறந்தபோது சிவலிங்கத்தின் மீது சிலந்திப் பூச்சி ஓடுவதைப் பார்த்துவிட்டாள் அம் மாதரசி. சிவன் எங்கே, சிலந்தி எங்கே, என்றெல்லாம் கணக்குப் போட அவளுக்கு அவகாசமில்லை. 'என் குழந்தை மீது சிலந்தியா?' விஷமேறி விடுமே... ஓடினாள்.

---

**கடவுள்களுக்கு நான்கு கைகள்... சில சமயம் எட்டுக் கைகள் கூட எதற்காக?**

கடவுள் தன்னைவிட உயர்ந்தவர் என்பது மனிதனுக்குத் தெரியும். கடவுளின் அளப்பரிய ஆற்றலையும் திறமையையும் சர்வ வல்லமையையும் காட்டும் அடையாள உருவகங்கள்தான், கடவுளர் திருமேனிக்கு நான்கு கரங்கள், எட்டுக் கரங்கள் என்றெல்லாம் அமைத்துக் காட்டுவது. பலவிதமான செயல்களையும் ஒரே சமயத்தில் செய்ய முடியும் என்பதை விளக்க பற்பல கரங்களைத்தானே காட்ட வேண்டும்! அதேபோலத்தான் சில தெய்வத் திருமேனிகளுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட முகங்களைக் காட்டியதும். முருகப் பெருமானுக்கு ஆறு முகங்கள். அதனாலேயே அவர் சண்முகர் அல்லது ஆறுமுகம். சிவபெருமானின் ஐந்து முகங்கள் + அதோமுகம் - இவைதாம் ஆறுமுகங்கள். அவற்றை இப்படியும் பார்க்கலாம். நம்முடை புலன்கள் ஐந்து + மனம் - இந்த ஆறையும் நெறிப்படுத்தினால் 'முருகு' என்னும் அழகை அடையலாம்.

சிலந்தி ஓடிய இடத்தில் எச்சில் உமிழ்ந் தால் விஷமேறாது என்னும் கிராமத்து நம்பிக்கையைக் கடைப் பிடித்தாள்.

சியாத்தமங்கை என்னும் ஊரில் வாழ்ந்தவர்கள் நீல நக்கரும் அவர் மனைவியும். அவர்கள் வாழ்வில் நடந்த இந்த நிகழ்ச்சி எதைக் காட்டுகிறது?

அவன் சொல் கேட்டு மீண்டும் போய் மனைவியை அழைத்து வந்தாராம் நீல நக்க நாயனார்.

இறைவனோடு உறவுக்கோல் நட்டு உணர்வுச் செம்மையில் ஒன்றுபட்டாள் அப் பெண்மணி.

சராசரி மனித உணர்வுகளையும் தடம் புரளாமல் செம்மைப்படுத்திச் சமு தாயப் பெருமிதத்தோடு ஆன்மிகப் பரி ணாமத்தையும் வேரூன்றச் செய்வது தான்.

அம்மா, அப்பா, குடும்பம், குழந்தை என்றெல்லாம் கடவுளுக்கே உறவுகள் அமைத்ததால் இன்னொரு நலமும் உண்டு. தெய்வங்களுக்குள் உறவு இருந் தால் பக்தர்களுக்குள்ளும் உறவு வந்து விடுமல்லவா?

அன்பான தெய்வத்திற்கும் அன் போடு உறவு கொடுக்கும்போது, அன்பு

ராஜராஜேஸ்வரி அன்னைக்கு நான்கு கைகள். ஒன்றில் கரும்பு வில்; ஒன்றில் மலர் அம்புகள்; ஒன்றில் பாசம் (கயிறு); மற்றொன்றிலோ அங்குசம். கரும்பு வில் நமது மனது. மலர் அம்புகள் நமது ஐந்து புலன்கள். மனதோடு புலன்களை ஒன்றச் செய்து கட்டுக்கோப்பாக வைக்கிறாள் அம்பாள். எல்லை மீறினால் பிடித்து இழுக்கவும், தடம் மாறினால் குட்டி சரிப்படுத்தவும்தான் - பாசமும் அங்குசமும்.

இப்படியே ஒவ்வொரு திருமேனிக்கும் செம்மையான அடையாளங்களும், அர்த்தங்களும் உண்டு. ஒரே சமயத்தில் பல செயல்கள் என்பது மட்டுமில்லை. ஒரே சமயத்தில் கோடானுகோடி பக்தர்களுக்கும் உலகின் வெவ்வேறு மூலை முடுக்குகளில் இருக்கும் ஜீவராசிகளுக்கும் அருள் பாலிக்க வேண்டியிருக்கிறதே. அதற்கு நிறைய கைகள் வேண்டாமா? அடுத்தடுத்து வேலைகள் வந்தாலே (எல்லாம் சின்னச் சின்ன வேலைகள்)

''எனக்கென்ன நாலு கையா இருக்கு?'' என்று கேட்கிறோம் அல்லவா? பிரபஞ்சம் முழுமையும் ஏதோ ஒரு லயத்தில், தொடர்ச்சியாக தொய்வே இல்லாமல், எந்த நினைவூட்டலோ,



அசதிமறதியோ இல்லாமல் இயங்கிக் கொண்டிருக்கிறதே! அப்படியானால் கடவுளுக்கு எத்தனை கைகள் வேண்டும்!

குழந்தையாய் கிருஷ்ணன், இளை ஞனாய் முருகன், அம்மையப்பனாய் பார் வதி பரமேஸ்வரன், மாதா பிதாவாய் மகாலட்சுமி - விஷ்ணு, உலக உறவு களைக் காட்ட மாமன் மாயோனும் மரு கன் சேயோனும் – இவ்வாறெல்லாம் உற வுச் செம்பயிரை வளர்த்ததன் காரணமே,

தானே அதில் பொங்கிப் பெருகிப் பிர வகிக்க முடியும்? – அதனால்தான் அம் மாவின் பெருமையைச் சொல்லி ஆனந்தப் படுகிறார் ஆதிசங்கரர். பரிவின் அன்பு பரமானந்தமாய்ப் பரி மளிக்கிறது.

(தொடரும்)



# குல்லு மல்லு

—கதிர்



ஏய்... வெளியில போலாம்னு சொல்லிட்டு நடந்து வர... பைக் எங்க?
வண்டில பெட்ரோல் இல்ல! எல்லாம் லாரி ஸ்டிரைக் மகிமை.






ஏன், தூக்கி உன் தலைமேல வேணா வைச்சுக் கோயேன்...
இந்தப் பொன்னான பாதம் மண்ணுல படலாமா...?




அங்கேயும் அதானே இருக்கு?
ஹிஹி... நல்லாப் பேசற!






சின்னப் புள்ளைலேர்ந்தே இப்படித்தான் உளறுவியா?
இல்லயே, உன்னை சந்திச்ச நாள்லேர்ந்துதான்!




ம்... ஏண்டா மல்லு, நீயும் ஒரு சங்கம் ஆரம்பிக்க லாமேடா... குண்டர்கள் சங்கம்னு"
ஏன், குண்டர்கள் சட்டத்துலே தூக்கிப் போடவா?




உன்னைத் தூக்கிப் போட முடியுமா! கிரேன்தான் வரணும்!




இப்படி லடாய் பண்றாங்களே தவிர, உள்ளூர விஷயம் வேற!



“புது இடம். புத்தம் புதிய சூழல். முன்பின் தெரியாத ஒருவரை, ஒரு முக்கியமான காரியமாகச் சந்திக்கிறீர்கள். கையில் சிபாரிசுக் கடிதமோ, விஸிட்டிங் கார்டோ இல்லை. கவலைப்படாதீர்கள். விஷயம் நல்லபடியாக முடியும், உங்கள் உடல் மொழி மட்டும் சரியாக அமைந்துவிட்டால்! ஏனென்றால் நம்முடைய உடை, நடை, பாவனைகள் நமக்கு முகவரி தருபவை. இந்த உடல் மொழியை நமக்குச் சாதகமாக ஆக்கிக் கொள்வதன் மூலம், நாம் பல காரியங்களைச் சுலபமாகச் சாதிக்கலாம்” என்கிறார் ‘டெலிஸ்க்ரீன்’ இயக்குநர் ஜானகி ரவிச்சந்திரன். இவர் சுய முன்னேற்றம் மற்றும் மனோதத்துவ அணுகுமுறைப் பட்டறைகள் நடத்துவதில் அனுபவம் வாய்ந்தவர்.

இளம் நடிகை ஒருவர் கலந்து கொண்ட நிகழ்ச்சி அது! ரசிகர்களின் கனவுக் கன்னி அல்லவா? கூட்டம் மொய்த்தது. மேடையேறிய அந்த நடிகை, கொஞ்சம் தமிழில் நன்றாகவே பேசினார்.

திரும்பி வரும்போது, டிரைவரிடம் அந்த நிகழ்ச்சியைப் பற்றி பேச்சுக் கொடுத்தேன். நிகழ்ச்சிக்கு வந்திருந்த என் கணவர், குழந்தைகளிடமும் கருத்து கேட்டேன். மறுநாள் அலுவலகப் பணியாளர்களிடம் நடிகையின் பேச்சு பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். அதே நிகழ்ச்சிக்கு வந்திருந்த சில நண்பர்களிடமும் அவரது குடும்பத்தாரிடமும் நிகழ்ச்சியைப் பற்றி பிரஸ்தாபித்தேன்.


• ஜானகி ரவிச்சந்திரன்

தோராயமாகக் கணக்குப் போட்டுப் பார்த்ததில், தெரிந்த உண்மை இதுதான்: பொதுவாக, ஒருவரிடம் பேசும்போது, அதில் உள்ள கருத்துக்களில் கவனம் செலுத்துபவர் ஆறு சதவிகிதம் மட்டுமே! பேச்சின் ஒலி, குரல், அது தெரிவிக்கும் பொருள் போன்றவற்றில், இருபது சதவிகிதத்தினர் கவனம் செலுத்துகிறார்கள். முப்பது சதவிகித மக்கள், முகபாவம், அது தெரிவிக்கும் குறிப்புகள் போன்றவற்றில் ஆர்வம் காட்டுகிறார்கள். மீதமுள்ள நாற்பத்து நான்கு சதவிகிதத்தினர், நடிகையின் உடை, நகை, செருப்பு, மேக்கப் போன்றவற்றினாலேயே வசீகரிக்கப்பட்டு விட்டனர் என்பது தெரிய வந்தது.

இதை மனவியலாரும் ஒப்புக் கொண்டு,



"பாடி லாங்வேஜ் ஈஸ் நாட் ஒன்லி தி பேஸிக் லாங்வேஜ், பட் ஆல்ஸோ தி பெஸ்ட் லாங்வேஜ்"என்கிறார்கள். எனவே முதல் பார்வையிலேயே நன்மதிப்புப் பெற நீங்கள் கொஞ்சம் மெனக்கெடத்தான் வேண்டும். இதோ சில அடிப்படை டிப்ஸ்கள்:

- முதல் சந்திப்பில் நம்மைப் பற்றி ஒருவருக்கு ஏற்படுகின்ற முதல் அபிப்பிராயம், கல்வெட்டைப் போன்றது. ஏதோ காரணத்தால், சொதப்பி விட்டால், அதை அழிக்கவோ, மாற்றவோ ரொம்ப சிரமப்பட வேண்டியிருக்கும். எனவே, மிகவும் கவனத்துடன் அணுகுங்கள். யாரோடு அறிமுகம் ஆனாலும், முதல் சந்திப்பிலேயே ஆளை அசத்திவிடுவது என்று தீர்மானித்துக் கொள்ளுங்கள்.
- உடல் மொழிப் பரீட்சையில், மிகவும் சுலபமானதும், சுளையாக மதிப்பெண்கள் பெற்றுத் தருவதும் எது தெரியுமா? உடைகள்! சுத்தமான, அழகான, தோற்றத்துக்கும் வயசுக்கும் பொருந்தக் கூடிய உடைகளை, நறுவிசாக அணிந்த யாரையுமே நமக்கு முதல்

பார்வையிலேயே பிடித்துப் போகிறது.

கடைத்தெரு முதல், கல்யாண மண்டபம் வரை, டிரஸ்ஸுக்குத் தான் முதல் மரியாதை. "பார்க்க டீஸண்டா, டீக்கா டிரஸ் பண்ணியிருந்தான். கண் அசந்த நேரம் சூட்கேஸைக் கிளப்பிக்கிட்டுப் போயிட்டான்" என்று புலம்புவதைப் பார்த்திருக்கிறோம். எனவே, முன்பின் தெரியாதவர் மீதும், நம்பிக்கை வைக்கத் தூண்டுவது அவரது உடைகளே!



"ஆச்சரியமா இருக்கு சார். இத்தனை பேரில் அவர் மட்டும் கண்ணை மூடிட்டு யோசனை செய்யறார்னு எப்படித்தான் சொல்றீங்களோ?"

மட்டமான, பொருந்தாத உடைகளை எப்போதும் அணியாதீர்கள். நல்ல தோற்றத்துடன் இருப்பதால் நமக்கே ஒரு உற்சாகம் பிறக்கும். யாரையும் தன்னம்பிக்கையுடன் அணுக முடியும்.

- அடுத்தது கொஞ்சம் கஷ்டமான பயிற்சி. உடைகளைத் தேர்வு செய்யும்



போதாவது ஆளுயரக் கண்ணாடி, தவிர, டெய்லர், துணிக்கடைக்காரர், ஃப்ரெண்ட்ஸ், குடும்ப நண்பர்கள் போன்றவர்களின் உதவியை நாடலாம். அவர்களுடைய ஆலோசனை பெரிதும் உதவத்தான் செய்யும். ஆனால் குரல்? அதிலிருக்க வேண்டிய காற்றலை வரிசையின் தரம், குரலின் ஏற்ற இறக்கம், தெரிவிக்க வேண்டிய பாவம்... இப்படி ஏகப்பட்ட விஷயங்கள் தொண்டையிலிருந்து வரவேண்டியிருக்குமே! உடனே குரலின் இனிமையைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். எல்லாருக்குமே லதா மங்கேஷ்கர், ஜேசுதாஸ் போல் ஐஸ்கிரீம் குரல் வந்து விடாது. ஆனால் இருக்கும் குரலை, பயிற்சியின் மூலம் இனிமையானதாக்க முடியும்.

"உடம்பு எப்படி?" என்பதைக் குரலை உயர்த்திச் சொன்னால், காரியம் கைகலப்பில் முடியும். அதையே தழைத்து, வேறு வித மாடுலேஷனில் சொன்னால், எதிராளி நெகிழ்ந்தே போயிடுவார். இதெல்லாம் இலவச இணைப்

புப் படித்தவுடன் வரும் விஷயமில்லை. சூழ்நிலைக்கும், மனிதர்களுக்கும் ஏற்ப குரலை 'டக் டக்' என்று மாற்ற நிறைய பயிற்சி தேவை!

● அடுத்தது பேச்சு. எடுத்த எடுப்பிலேயே எட்டு ஊருக்கு மைக் வைத்தது போல ஆரம்பிக்கக் கூடாது. அதற்காக கிசுகிசுக்கவும் வேண்டாம். இது இன்னும் எரிச்சலைக் கிளப்பும். ஹோட்டலில், சுடச்சுட மசால் தோசை வந்ததும், நேராக தோசையின் மையப்பகுதியில் கையை வைப்பது போல, சுற்றி வளைக்காமல், பாயிண்டைப் பிடித்து விடுங்கள். பேசும் போது, முகபாவத்திலும் கவனம் இருக்கட்டும். கண்களில் பிரகாசமான உணர்வை வரவழைத்துக் கொண்ட மறுகணம், உதட்டில் சிறு புன்னகையையும் ஒட்டவைத்துக் கொண்டுவிட வேண்டும். கட்டளையோ, மறுப்போ, தர்க்கமோ, கசப்பான விஷயமோ, எதைச் சொன்




● தலையை வேகமாக அசைப்பது, "சீக்கிரம் சொல்லி முடியேன்" என்ற செய்தியை வெளிப்படுத்துகிறது.

னாலும், குரலில் நல்ல தணிவு இருக்க வேண்டும். புன்னகையின் ஒளி மாறக் கூடாது.

● சின்ன தவறு நேர்ந்துவிட்டது. உண்மையில் இந்த பாராதான் முந்தியிருக்கணும்... ஏனென்றால், பேச்சை விட



கேட்பதுதான் முக்கியம். அதனால்தான் ஒரே ஒரு வாயைக் கொடுத்து, அதை மூடவும் வசதி செய்து கொடுத்துள்ளது இயற்கை. ஆனால் காதுகள்?... டபுளா இருக்கே! யாரையாவது கவரணும்னா, மிகச் சிறந்த வழி அவங்க பேச்சைக் கேட்பது தான். யாராவது, நாம் பேசும் போது, உண்மையான அக்கறையுடன், ஆர்வம் மேலிடக் கேட்டால், அவர்களை நமக்கு மிகவும் பிடித்துப் போகிறது. "அறுக்காதே... வாயை மூடு... லொடலொடன்னு" என்றெல்லாம் முகபாவனையால் காட்டி விட்டாலே, நட்புக்குக் கத்திரி போட்டாச்சு என்று அர்த்தம்.... எனவே, முதலில் காது கொடுத்து, அமைதியாக, ஆவலாகக் கேளுங்கள். கூடவே, மேலும் பேசவும் தூண்டி விடுங்கள். அவர் பேச்சை, நீங்கள் மிகவும் ரசித்ததாகக் காட்டிக் கொள்ளுங்கள். ஆள் அம்பேல் ஆகிவிடுவார்!

● யாரைப் பார்த்தாலும், சென்டி மீட்டர் அளவுக்காவது புன்னகை செய்து வைப்பது, உடல் மொழியின் ஜாலி விஷயம். சிலர், மூடுக்கு ஏற்ப, ஆளுக்கு ஏற்ப, விகிதாச்சார சிரிப்பு சிரிப்பார்கள். அதை மாற்ற முயற்சி செய்யுங்கள். ஏனென்றால் மனம் நிறைந்த புன்னகைக்குக் கிடைக்கும் மதிப்பே தனி! புன்னகைக்கு இருக்கிற மாபெரும் சக்தி, இதயங்களின் நடுவில் இருக்கின்ற இடைவெளிகளைக் குறைக்கும் என்பதுதான்.

- அடுத்தாக தொட்டுப் பேசுவது... முன்பின் தெரியாதவர்கள், உயர்ந்தவர்கள், எதிர்பாலினர், பெரியோர்களிடம் நிச்சயம் செய்யக் கூடாது. குடும்பத்தினர், நண்பர்கள், வயது குறைந்தவர்களிடம் மட்டுமே பயன்படுத்த வேண்டும்.

"ஹாய் லட்சுமி" என்று ஐந்தடி தள்ளி நின்று கேட்காமல், அருகே வந்து தோளை அணைத்து கையைப் பற்றி, "எப்படி இருக்கே லச்சு?" என்றும் கேட்கலாம். பின்னதில் நெருக்கமும் பாசமும் அறிவிக்கப்படும். பார்த்துப் பிரயோகிக்கவும். பின் விளைவுகளுக்கு நான் பொறுப்பல்ல...

- விரல் ரேகைகள் எப்படி ஒரே மாதிரி இருக்காதோ, அதே போலத்தான் பல்வேறு மனிதர்களின் உடல் மொழியும் மாறுபட்டே இருக்கும்.


'சோதனை செய்து பார்க்க வேணாம். இவருக்கு உடல்மொழி தெரியும்கிறதை ஒப்புக்கறேன்."



**இதோ பொதுவான சில மனவியல் கணிப்புகள்; இனிவரும் பக்கங்களில் ஆங்காங்கே...**

## பேசாமல் பேசுங்க!

நாம் ஒருவருக்கொருவர் சொல்ல வரும் விஷயத்தை எப்படிச் சொல்கிறோம்? 'ரொம்ப சிம்பிள். வார்த்தைகளின் மூலமாகத்தான்' என்கிறீர்களா? அது சரி. நேரிலோ, கடிதத்தின் மூலமாகவோ, தொலைபேசியிலோ - எப்படியிருந்தாலும் தகவல் தொடர்பு என்பது வார்த்தைகளின் மூலமாகத்தானே!

இந்த முடிவு மிகவும் லாஜிக்காகத் தோன்றினாலும், தகவல் தொடர்பில் வார்த்தைகளின் பங்கு அப்படியொன்றும் அதிகமில்லை என்பதே உண்மை. இதை உணர்ந்து கொள்ள இதோ நமக்கு மிகவும் தெரிந்த சில சூழல்களைப் பார்ப்போம்.

ஒருவர் அற்புதமாகப் பேசிக் கொண்டிருக்கிறார். மிகச் சிறப்பான கருத்து ஒன்று வெளியாகிறது. பார்வையாளர்கள் கை தட்டுகின்றனர். இந்தக் கைத்தட்டலுக்கு என்ன பொருள்? "பிரமாதமான கருத்து. இது எங்களுக்கு மிகவும் பிடித்திருக்கிறது" என்பதுதானே? இதை வார்த்தைகளால் சொல்லவில்லையே. கைதட்டலே உணர்த்துகிறதே!

வேறொருவர். இவர் அறுவைப் பேச்சாளர். நீட்டி முழக்கிப் பேசுகிறார். நடுவில் "அடுத்த அரை மணி நேரத்துக்கு நான் வலியுறுத்தப்போகும் கருத்து என்னவென்றால்...." என்று பேசுகிறார். உடனே பார்வையாளர்கள் பலமாகக் கை தட்டுகிறார்கள். இந்தக் கைத்தட்டலுக்கு என்ன அர்த்தம்? "உன் பேச்சு எங்களுக்குப் பிடிக்கவில்லை. உடனே நிறுத்திக் கொள்" என்பதுதானே? ஆக, கை தட்டல் என்ற ஒரே சங்கதியே இருவேறு சந்தர்ப்பங்களில் இருவேறு பொருட்களை உணர்த்துகிறது.

ஆக வார்த்தைகள் பயன்படுத்தப்படாமலேயே 'பேச்சு' நடந்து விடுகிறது. அதாவது தகவல் தொடர்பு ஏற்பட்டுவிட்டது.

## உடல் மொழி!



● கண்களை நேருக்கு நேராகப் பார்த்துப் பேசுவது, "நான் சொல்வது உண்மை" என்ற கருத்தைத் தெரிவிக்கிறது.

இங்கே பேசியது வாய் அல்ல. உடல். அதாவது உதடுகளல்லாத உடலின் பிற பாகங்கள்.

சொல்லப்போனால் வார்த்தைகளை விட அதிகம் நம்பக் கூடியவை இந்த உடல் ‘பேசும்’ வார்த்தைகள். மாடத்திலிருந்து சீதையும், வீதியிலிருந்து ராம பிரானும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டபோது, அண்ணலும் அவளும் நோக்கியபோது, பாய்ந்த செய்திகள்தான் எத்தனை!

கணவனிடம் மனைவி “வர ஞாயிற்றுக் கிழமை எங்கம்மா வீட்டுக்குப் போயிட்டு வரலாமே’’ என்கிறாள். கணவன் “அன்னிக்கு நான் ஆபீஸ் போக வேண்டியிருக்குமே” என்கிறான். உடனே மனைவி



தன் முகவாய்க் கட்டையில் இடித்துக் கொள்கிறாள். அதாவது "உங்களுக்கு எப்போதுதான் ஒழிந்திருக்கிறது, எங்கம்மா வீட்டுக்கு வர?" என்ற கேள்வி வார்த்தைகள் இல்லாமலேயே வீசப்படுகிறது. கணவன் தன் தோள்களைக் குலுக்கிக் கொண்டு பேப்பர் படிப்பதைத் தொடர்கிறான். "நீ எப்போதுதான் நான் சொல்வதை நம்பியிருக்கிறாய்? உன்னைத் திருப்திப்படுத்தவே முடியாது" என்கிற செய்தி அதில்.

"எனக்கு இன்னிக்கு சாப்பாடு வேணாம்" என்றால் பசி இல்லை என்பது மட்டும்தான் அதற்குப் பொருளாக இருக்க வேண்டுமென்பதில்லை. 'சாப்பிடப் பிடிக்காத அளவுக்கு ஏதோ நடந்திருக்கிறது. கேட்டால் சொல்கிறேன்' என்பதாக அது இருக்கலாம்.!



"புடைவை வேணும்னு என் மனைவி கேட்டா, மேலும் கீழுமாத் தலையாட்டினா அதுக்கு நான் ஒத்துக்கிட்டேன்னு அவ புரிஞ்சுக்குவா."

"இடவலமாகத் தலையாட்டினா புடைவை வேணாம்னு சொல்வதாப் புரிஞ்சுக்குவாளா?"

"அப்பவும் நான் ஒத்துக்கிட்டதாத்தான் புரிஞ்சுக்குவா."

## எண்ண ஓட்டம் என்ன?

ஒரு திரைப்படத்தில் பாபுவான ரஜினி, கோபு என்ற பெயரில் மாறுவேடத்தில் வருவார். அவர் பாபுதானோ என்ற சந்தேகம் வில்லனுக்கு எழுந்துவிடும். உடனே பாபுவின் அம்மாவைத் தான் கற்பழித்துக் கொன்றதைக் கூறுவான். அதாவது பாபுவாக இருந்தால் உடனே கோபத்தில் துடித்தெழுந்து "எங்கம்மாவையா இப்படி செய்தே?" என்ற கர்ஜனையுடன் தன்மீது பாய்வான் என்பது அவன் திட்டம். ஆனால் ரஜினியின் முகத்தை மட்டும் ஆராயாமல் அவர் புன்னகையுடன் இத்தனையையும் கேட்டுக் கொண்டிருப்பார். அவர் கோபுதான் என்று நம்பி வில்லன் சென்றுவிடுவான். இப்போது காமிரா ரஜினியின் கைப் பகுதியை நோக்கிச் செல்லும். அவர் கையிலுள்ள சாத்துக்குடி ஒன்று பிழியப்பட்டிருக்கும். அதாவது வார்த்தைகளின் மூலம் ரஜினியின் கோபம் சூழ்நிலை காரணமாக வெளிப்படவில்லையென்றாலும், உடலின் மற்றொரு பகுதி அவரது உணர்ச்சிகளை வெளிப்படுத்தியிருக்கிறது.



இதில் அந்த வில்லன் ரஜினி

கைகளையும் பார்த்திருந்தால் உண்மை தெரிந்திருக்கும். அதாவது எதிரியின் எண்ண ஓட்டத்தை அவரது உடலின் பல்வேறு நிலைகளைக் கொண்டு அறிந்து கொள்ளலாம்.

நம்மைச் சுற்றியிருப்பவர்களின் உண்மை மனநிலையை உணர்ந்து கொள்ள முடிந்தால், பலவிதங்களில் அது நமக்கு நன்மை பயக்கும். அதற்கு மனிதர்களின் 'உடல் மொழியை' அறிந்து கொள்வது நல்லது.

## மறைமுக அறிவிப்பு!

உடல் மொழி என்பது ஏதோ சமீப கால ஆராய்ச்சி அல்ல. 'கண்ணொடு கண் நோக்கின் வாய்ச் சொற்கள் என்ன பயனுமில' என்று திருவள்ளுவர் கூறுவது இதைத்தான். காதலுக்கு மட்டுமல்ல, வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலுமே உடலின் அத்தனை பாகங்களுமே தங்களை வெளிப்படுத்திக் கொள்கின்றன.

உதாரணமாக, நெருக்கமான சூழலில் பேருந்தில் செல்வதாக வைத்துக் கொள்ளுங்கள். இது பிடிக்காத சூழல். கசகசவென்று வியர்வை பொங்குகிறது. என்றாலும் சுற்றிலும் மனிதர்கள். மிக

### உடல் மொழி!



● கை கூப்பி 'வணக்கம்' தெரிவித்தலோ, கை குலுக்கி நட்பாகச் சிரித்தலோ, "நான் நம்பத் தகுந்தவன்" என்று சொல்லத்தான்.



நெருக்கமாக நிற்க வேண்டிய இந்த நிலைமையில் நம் கண்கள் அருகிலுள்ளவர்களின் கண்களை சந்திப்பதைத் தவிர்க்கும். உடலில் கொஞ்சம் விறைப்புத்தன்மை வரும். "ஏதோ வேறுவழியில்லாமல் நிற்கிறேன்" என்ற செய்தி அதில் புதைந்திருக்கும்.

இதிலிருந்து நம்மால் வேறொரு முடிவுக்கும் வரமுடியும். மிக அருகில் இருக்கும் ஒருவர் (காதல் விவகாரத்தை விட்டுவிடுங்கள்) கண்கள் சந்திப்பதைத் தவிர்க்கிறார் என்றால், நம்மை அவருக்குப் பிடிக்கவில்லை என்று பொருள்!

நமக்கு நெருங்கியவர்களின் சில உடல் மொழிகளை நாம் உணர்ந்து கொண்டிருப் போம். அதனால்தான் உபதேசம் செய்யும் அப்பா திடீரென்று "நான் சொல்லிக்கிட்டே இருக்கேன். உனக்கென்ன அவ்வளவு அலட்சி யம்?" என்று கத்துவார். காரணம், அப்போது அந்த மகன் வேறெங்காவது பார்த்துக் கொண்டிருப்பான். அல்லது தோளைக் குலுக்கிக் கொண்டிருப்பான். அல்லது கேலி செய்வது போல் புன்னகை செய்து கொண்டி

ருப்பான்.

## உள்ளுணர்வு உணர்த்தும்!

எனக்குத் தெரிந்த ஒரு டீனேஜ் இளைஞன். பதினாறு வயதே நிரம்பவில்லை என்பதால் லைசன்ஸ் பெற முடியவில்லை. என்றாலும் அப்பாவின் ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு அவ்வப்போது அருகிலிருக்கும் நண்பர்கள் வீட்டுக்குக் கிளம்பி விடுவான். நன்றாக ஓட்டுவான் என்பதால் அப்பாவும் கண்டு கொள்ளாமல் இருந்து விடுவார். ஒருமுறை அந்த இளைஞன் என்னிடம் சொன்னது இது. "இன்னைக்கு ட்ராஃபிக் போலீஸ்கிட்ட மாட்டிக்கிட்டேன் அங்கிள். சொன்னா அப்பா திட்டுவார்ங்கிறதாலே, பாக்கெட் மணியிலே சமாளிச்சுட்டேன். தெருவிலே எவ்வளவோ பேர் போயிட்டிருக்கிறச்சே அதெப்படி அந்தப் போலீஸ்காரர் என்னை மட்டும் நிறுத்தினார்? என்னைப் பார்த்தா பதினெட்டு வயசுக்காரன்



''உறுதியாகக் கைகுலுக்கினா அவங்களுக்கு நட்பு ஏற்படும்னாங்களே, பின் ஏன் விரோதம்?''

''ரொம்ப உறுதியாகக் கைகுலுக்கினதிலே அவரோட கையிலே எலும்பு முறிவு ஏற்பட்டுடுச்சே.''

மாதிரிதானே இருக்கு?" என்றான்.

அவன் கீழ்க்கண்டவாறு நடந்து கொண்டிருக்கக் கூடும். சற்றுத் தொலைவில் போலீஸ்காரரைப் பார்த்தவுடனே ஒரு நடுக்கம் தோன்றியிருக்கலாம். வண்டி ஷேக் ஆகியிருக்கக் கூடும். முகத்தில் ஒருவித படபடப்பு. அவரைத் தவிர்க்க நினைத்து, அவரிடமிருந்து சற்றே விலகி வண்டியைச் செலுத்தும் முயற்சி – இவையெல்லாம் போதாதா அனுபவஸ்தரான போலீஸ்காரருக்கு



எச்சரிக்கை மணியை அடிக்க?

ஆக நெருக்கமானவர்களாக இருந்தால் மட்டுமென்றில்லை, யாருடைய மனப்போக்கையும் அவரது உடல் மொழியின் மூலம் அறிந்து கொள்ளலாம். வெறும் உள்ளுணர்வு என்றோ குத்துமதிப்பான யூகம் என்றோ இல்லை, அறிவியல் பூர்வமாகவே இந்த உடல் மொழி குறித்து அலசியிருக்கிறார்கள். இதோ சில விவரங்கள்.

## கவனம் இருக்கிறதா?

எதிரே இருப்பவர் நீங்கள் சொல்வதைக் கவனமாகக் கேட்கிறாரா என்பதை

நிச்சயம் செய்து கொள்வது?

கவனம் செலுத்துபவர் தம்மையும் அறியாமல் கொஞ்சம் முன்புறமாக வளைந்திருப்பார். அவரது கைகள் திறந்தவாறு இருக்க வாய்ப்பு அதிகம்.

நீங்கள் சொல்வது எதிரில் இருப்பவரின் மனத்தில் பதிகிறதா என்ற சந்தேகம் வந்தால், அந்த ஆசாமியைக் கொஞ்சம் உற்றுப் பாருங்கள். (அவர் நின்று கொண்டிருந்தால்) பின்புறம் அவர் கைகள் இருக்கிறதா? அப்படியானால் நீங்கள் சொல்வது அவர் மனத்தில் பதிவதாகத்தான் அர்த்தம். கால்களும் ஒன்றோடொன்று நெருங்கியில்லாமல் சற்றுத் தள்ளியிருந்தால் உங்கள் வார்த்தைகள் விழலுக்கு இறைத்த நீர் இல்லை என்பது உறுதி.

## சுவாரசியம் காட்டுகிறாரா?

நாற்காலியில் உட்கார்ந்தபடி எதிரெதிரே பேசிக் கொண்டிருக்கிறார் ஒருவர். முகத்தைப் பார்த்தால் நாம் சொல்வதை ஈடுபாட்டுடன் கேட்பது போலத்தான் இருக்கிறது. ஆனால் ஒரு வேளை நடிக்கிறாரோ என்ற ஐயமும் எழுகிறது. என்ன செய்ய?

சிம்ப்பிள். அவரது பாதங்கள் நாற்காலிக்குக் கீழே சென்றிருக்கிறது என்றால்






''உடல்மொழியை அறிந்து கொள்ள வேண்டும் என்ற தலைப்பில் கடந்த இருபது நிமிடங் களாகப் பேசும் நான் இன்னும் சில கருத்துக்களைக் கூறி....''

உங்கள் பேச்சில் அவருக்கு சுவாரசியம் வந்து விட்டது என்று அர்த்தம். முழுப் பாதமும் தரை யில் பதியாமல், பாதத்தின் நுனி மட்டுமே அழுத்தமாகப் பதிந்திருக்கும். உடல் முன்புறமாக வளைந்திருக்கும்.

ஓர் அறையில் பலர் இருக்க ஒருவரைப் பார்த்து உட்கார்ந்து கொள்கிறார். அந்தக் குறிப்பிட்ட நபரிடம் சுவாரசியம் ஏற்பட்டிருக் கிறது என்பதை அறிந்து கொள்ளலாம்.

## ஒப்புக் கொள்வாரா?

நீங்கள் ஒரு விஷயத்தை விளக்கிக் கொண்டி ருக்கிறீர்கள். அதை அவர் ஏற்றுக் கொள்ளப் போகிறாரா இல்லையா என்ற சஸ்பென்ஸ் தாங்கவில்லை உங்களுக்கு. அவரை உற்றுக் கவனியுங்கள். அதுவரை கையில் வைத்திருந்த பேனாவைக் கீழே வைக்கிறாரா? எதிரே இருக் கும் தாள்களை மூடி வைக்கிறாரா? எதிரே இருக்கும் மேஜைமீது அவரது கைகள் படுத்த

வாக்கில் இருக்கின்றனவா? இப்படியெல்லாம் இருந்தால் நீங்கள் சொல்வதை ஒப்புக் கொள்ள அவர் தயார் என்று அர்த்தம். சட்டென்று பேச்சை நிறுத்திவிடலாம். இப்படியெல்லாம் இல்லையென்றால் இன்னும் கொஞ்சம் பேசி அவர் மனத்தை மாற்றப்பாருங்கள்.

## காது கொடுத்துக் கேட்கிறாரா?

ஒருவர் வேறெங்கோ பார்த்துக் கொண்டிருந்தால் நம்மால் கண்டுபிடித்து விட முடியும். ஆனால் நாம் சொல்வது அவர் காதுகளில் விழுகிறதா என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது? கஷ்டம்தான். ஆனால் உடல் மொழி இதற்கும் உதவுகிறது.

எதிராளியின் தலை சற்றே சாய்ந்தவாறு இருக்கிறதா?

அவர் உங்களை நேருக்கு நேர் பார்த்துக் கொண்டே நீங்கள் சொல்வதைக் கேட்கிறாரா?

நடுநடுவே நீங்கள் கூறுவதை ஒப்புக் கொள்வது போல் இலேசாகத் தலையை ஆட்டிக் கொள்கிறாரா?




அடிக்கடி கண்களைச் சிமிட்டிக் கொள்கிறாரா?

இப்படியெல்லாம் ஒருவர் காணப்பட்டால், சந்தேகமே வேண்டாம். நீங்கள் சொல்வது

### உடல் மொழி!



● நாற்காலியில் சாய்ந்து அமர்ந்து, கை, கால்களைத் தளர்வாக வைத்திருந்தால், ரிலாக்ஸ்டாக இருக்கிறார் என்று தெரிந்து கொள்ளலாம்.

எல்லாமே அவர் காதுகளில் மட்டுமல்ல மனத்திலும் விழுகிறது.

## எடை போடுகிறார்?

நீங்கள் உங்கள் கோணத்தில் ஒரு விஷயத்தை விளக்குகிறீர்கள். அப்போது எதிராளி பென்சிலையோ அல்லது தம்ளரையோ உதடுகளில் அவ்வப்போது வைத்துக் கொள்கிறார். நடுநடுவே தன் முகவாயை விரலால் தட்டிக் கொள்கிறார். மேலே பார்த்துவிட்டு உடனே வலது பக்கம் திரும்பிப் பார்க்கிறார். ஒரு காலை மற்றொரு காலின் மீது போட்டுக் கொண்டு உட்காருகிறார்.

இவையெல்லாம் அந்த ஆசாமி தீவிரமாக யோசிப்பதைக் குறிக்கிறது. அதாவது நீங்கள் கூறுவதை அவர் எடைபோட்டுக் கொண்டிருக்கிறார் என்று அர்த்தம்.

## போரடிக்கிறீர்களா?

பொதுக்கூட்டமென்றால் அறுவைப் பேச்சாளர் பாதி பேசிக் கொண்டிருக்கும்போதே கை தட்டி தங்கள் வெறுப்பை பார்வையாளர்கள் வெளிப்படுத்திக் கொள்ள முடியும். ஆனால் இரண்டுபேர்

மட்டுமே பேசுகிறார்கள். அதில் ஒருவரின் பேச்சு மற்றவருக்கு மிகவும் போரடிக்கிறது என்றால் கைத்தட்ட முடியுமா என்ன? அதற்கு பதிலாக அவர் தன்னையும் அறியாமல் வேறு சில விதங்களில் தன்னை வெளிப்படுத்திக் கொள்வார்.

வெற்றிடத்தை அவர் உற்றுப்பார்ப்பார். உடல் கொஞ்சம் களைப்பில் தொய்ந்து போனது போல் இருக்கும். பாதங்களால் தரையில் தாளமிட்டுக் கொண்டே



இருப்பார்.

இப்படியெல்லாம் எதிராளி நடந்து கொண்டால் அவரைத் தொடர்ந்து சோதிக்காமல் பேச்சின் திசையை மாற்றுங்கள். அப்போதும் எதிராளியின் உடல் மொழி மேலே கூறியது போலவே தொடர்ந்தால் வாயை மூடிக் கொள்ளுங்கள்.

## "ப்ளீஸ், கொஞ்சம் போறேனே"

திடீரென்று பாதங்கள் கதவுப் பக்கமாகத் திரும்பும். சம்பந்தமே இல்லாமல் பார்வை சுற்று முற்றுமாகத் திரும்பும். ஏதோ இப்போதுதான்



"சி.எம்மோட பாடி லாங்குவேஜை வைச்சு, அமைச்சர்கள் யாரும் எதுவும் யூகிச்சுடக் கூடாதாம். அதான் இப்படி ஒரு செட்-அப்."

நினைவுக்கு வந்ததுபோல் சட்டை பட்டனைப் போட்டுக் கொள்வார். (ஏற்கெனவே போட்டுக் கொண்டிருந்தால் அதைக் கழற்றிவிட்டுப் போட்டுக் கொள்வார்!)

இப்படி ஒருவர் நடந்து கொண்டால் அவர் அந்த இடத்தைவிட்டு நகரவேண்டும் என்று விரும்புகிறார் என்று பொருள். நினைத்ததை உடனே செயல்படுத்த முடியாததால் பல்லைக்கடித்துக் கொண்டு அங்கேயே இருக்கிறார் என்று அர்த்தம். இப்படி ஒருவர் காட்சி தந்தால் "உங்களுக்கு அவசர வேலை ஏதோ இருக்குன்னு நினைக்கறேன். கிளம்புங்களேன். அப்புறமா சந்திக்கலாம்" என்று சொல்லுங்கள். வேகமாக வெளியேறுவார். கூடவே உங்களுக்கு அவர் மனத்தில் கோவில் கட்டிக் கும்பிட்டுக் கொண்டிருப்பார்.

## ஒதுக்குகிறார்

நீங்கள் சொல்லும் யோசனை

எதிராளிக்குப் பிடிக்கவேண்டும் என்பது கட்டாயமா என்ன? கொள் கையளவில் அதை அவர் ஒதுக்க லாம். அதே சமயம் ஏதோ ஒரு காரணத்துக்காக வாயைத் திறந்து தன் மறுப்பை அவர் வெளிப் படுத்திக் கொள்ளாமல் இருக்கக் கூடும். அதனால் என்ன? உடல் அதை வேறு விதங்களில் காட்டிக் கொடுத்துவிடுமே!

தன்னையும் அறியாமல் நாற் காலியின் பின்புறமாகச் சாய்வார். நின்று கொண்டிருந்தால் பின்புற மாகச் சில அடிகள் வைப்பார். கைகளை மடித்துக் கொள்வார். தலை கொஞ்சம் குனிந்திருக்கும். முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிப்பதுபோல் இருக்கும்.

## உடல் மொழி!



● உங்களிடம் பேசிக் கொண்டிருக்கும் போதே, அடிக்கடி வாட்சைப் பார்த் தால், "பிளேடு தாங்கலை... பார்ட்டிக்கு டென்ஷன் ஏறுகிறது'' என்று புரிந்து கொண்டு நடையைக் கட்டி விடுங்கள்.

## தற்காப்பு முறை

எதிராளியை நீங்கள் குற்றம் சுமத்திக் கொண்டே இருக்கிறீர்கள். "கொஞ்சம் இருங்க. எனக்கும் வாய்ப்பு வரும். அப்போ என் தரப்பை நான் சொல்லும்போது நீங்க பணால்தான்'' என்று எதிராளி மனத்தில் கறுவிக் கொண்டிருந்தால் அவர் உடலில் சில மாறுதல்கள் நடைபெறும். பாதங் களில் விரல் பகுதிகள் ஒன்றை ஒன்று நெருங்கும். அதாவது பாதத்தின் முன்புறம்

## உடல் மொழி!



● நாற்காலியின் முனையில் உட்கார்ந்து, நகத்தைக் கடிப்பதும், கைகளைத் தேய்ப்பதும் பதைப்பாக இருக்கிறார் என்பதன் அறிகுறிகள்.

நெருங்க, பின்புறம் விலகும். கைகள் கெட்டியாகப் முஷ்டி பற்றிக் கொண்டிருக்கும். நம்மை தற்காத்துக் கொள்ள உடனடியாக அவரைப் பேசவிடுவதே முறை.

குற்றச் சாட்டு என்று சுமத்தாமலேயே கூட சில பேர் தொடர்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள். அவர் கொஞ்சம் இடைவெளிவிட்டால்தானே எதிராளியால் பேச முடியும். "ஐயோ, எனக்கும் பேச கொஞ்சம் சான்ஸ் கொடுங்க" என்று வாய் விட்டுக் கேட்காவிட்டாலும் அவரது விரல்களும் பாதங்களும் தாளம் போட்டுக் கொண்டிருக்கும். பேசுபவரையே மிகவும் உற்றுப் பார்க்கத் தொடங்கிவிடுவார். கவனித்துவிட்டு பேச்சைக் கொஞ்சம் நிறுத்திக் கொள்வது நல்லது.

## பதுங்கும் புலி

திடீரென்று ஒருவரின் உடல் முன்புறமாகச் சாய்கிறது. மடிந்திருந்த அவர் விரல்கள் நீளுகின்றன. முஷ்டியை நீக்கிக் கொள்கிறார்.

இவையெல்லாம் தாக்குதலுக்கு (பேச்சளவில் தான்) அவர் தயாராகிவிட்டார் என்பதை உணர்த்துகின்றன. எனவே மனதளவில் உங்களை இதற்காகத் தயார் படுத்திக் கொள்ளுங்கள்.

## சந்திரஹரி என்றால்...

ஒருவர் பொய் சொல்வதை எப்படி கண்டு பிடிக்கலாம்?

பேசும்போதே ஒருவரது கை வாய்ப் பக்கம் அதை மூடிக் கொள்வதுபோல் செல்கிறது. தன் காதுகளை அவர் இழுத்துக் கொள்கிறார். கண்கள் கீழே பார்க்கின்றன. தம்மை அட்ஜஸ்ட் செய்து கொண்டு அதே இருக்கை யில் உட்கார்ந்து கொள்கிறார். எந்தக் குறிப் பிட்ட காரணமும் இன்றி முகத்தைத் தொட்டுக் கொள்கிறார். கீழேயும் இடப்பக்கமுமாகப் பார்க்கிறார்.

இவற்றில் பெரும்பாலான விஷயங்களை அவர் செய்து கொண்டிருந்தால் அவர் கூறு வதை அப்படியே நம்பி விடாதீர்கள். கவனம் தேவை!

## தொடு உணர்ச்சி

ஆறுதல் கூறுவதற்குத் தொடு உணர்ச்சி



யைவிட ஒரு அற்புத உணர்வு உண்டா என்ன? பக்கம் பக்கமாகக் கூறும் ஆறுதல் வார்த்தைகளைவிட அதிகப் பரிவை எதிராளியின் தலை யைத் தடவி விடுவதன் மூலமோ,



"பதினான்கு மொழிகள் ஆட்சி மொழியாக இருக்கும்போது இந்த உடல் மொழி என்கிறார்களே அதையும் அரியணைக் கட்டிலில் ஏற்றினால் என்ன குடியா முழுகிவிடும்?"

அவரது தோளை ஆறுதலாகத் தட்டிக் கொடுத்து சமாதானப்படுத்துவதன் மூலமோ ஒருவர் வெளிப்படுத்தி விட முடியும்.

தொடு உணர்வு என்ற அற்புத மந்திரத்தின் தாக்கத்தை அறிந்து கொள்ள, கைக் குழந்தை ஓர் அற்புதமான உதாரணம். உச்சஸ்தாயியில் அழுது கொண்டிருக்கும் குழந்தை, தாய் அதைத் தூக்கிக் கொண்டவுடன் ஸ்விட்சு போட்டதுபோல் அழுகையை நிறுத்திக் கொள்கிறதே, இது தொடு உணர்வினால்தான். "இதோ நான் வந்துவிட்டேன் உன்னை கவனித்துக் கொள்ள" என்ற தகவல், இந்தத் தொடு உணர்வில் குழந்தைக்குக் கிடைக்கிறது.

இரண்டு பேர் தோளில் கைபோட்டுக் கொண்டு சென்றால் அவர்கள் நெருக்கமானவர்கள் என்று நாம் முடிவெடுப்பது இந்த ரீதியில்தான்.

## இடம் கொடுப்பாரா?

ஒவ்வொருவருக்கும் தான் சுதந்திரமாக

இயங்க தன்னைச் சுற்றிக் கொஞ்சம் இடம் தேவை. அதனால்தான் "உட்காருங்க" என்று ஒருவர் தனக்கு மிக அருகிலுள்ள நாற்காலியைக் காட்டினாலும் அதைச் சற்றுத் தள்ளிப் போட்டுக் கொண்டு உட்காருகிறோம். அதனால்தான் பேருந்தில் ஏறினால் ஜன்னலோர இருக்கையைத் தேர்ந்தெடுக்கிறோம் (மழைக்காலமென்றால் அது வேறு விஷயம்)_ அதாவது உட்காரும் சமயத்திலாவது நமக்குப் பக்கத்தில் யாரும் இருக்க மாட்டார்கள்.

பொதுக் கூட்டத்திலோ, பார்ட்டியிலோ ஒருவர் மற்றவர்களுக்கு நடுவில் உட்கார்ந்து கொள்கிறாரா அல்லது மூலையைத் தேர்ந்தெடுக்கிறாரா என்பதைக் கொண்டு அவர் குணநலனைத் தீர்மானிக்கலாம். ரொம்பவும் ரிசர்வ் தன்மை உடையவர்கள் மூலையைத்தான் தேர்வு செய்வார்கள். கலகலப்பாகப் பேசக் கூடிய ஒருவர் மூலையைத் தேர்தெடுக்கிறார் என்றால் அவர் பாதிக் கூட்டத்தில் எழுந்து போகப் போகிறார் என்று அர்த்தம். அதனால்தான் வசதியாக மூலையில் உட்காருகிறார்.

பல இருக்கைகள் காலியாக இருக்கும் போது கூட, ஒருவர் கதவுக்கு முகத்தைக் காட்டியபடி உட்கார்ந்து கொள்கிறார்

## உடல் மொழி!



• வேகவேகமாக சுவாசித்து, முகம் ஜிவு ஜிவு என சிவந்தால், "வெடிக்குத் திரி கொளுத்தியாச்சு" என்று காதைப் பொத்திக் கொள்ளலாம்.



## உடல் மொழி!

- கைகளைக் கட்டிக் கொண்டு, கால்களை அழுந்தப் பதித்து நின்றால், "ஐ டோண்ட் கேர்" என்கிறார்.

என்றால் அந்த நிகழ்ச்சியில் அவருக்கு நாட்டம் இல்லை என்று பொருள்.

### தாங்க முடியாத வருத்தத்தில் இருந்தால்?

தொய்ந்து போன தோள்களும் மற்ற எவரையும் கண்களைப் பார்த்துப் பேசாத நிலையுமாக ஒருவர் காணப்பட்டால் அவருக்கு ஆழ்ந்த சோகம் என்று பொருள். "சுற்றுப் புறத்தைப் பற்றி எனக்குக் கவலையில்லை. என் துக்கமே பெரும் துக்கம்" என்கிற செய்தியும் அதில் உண்டு.

### குரல் மொழி

"நாளைக்குக் காலையிலே ஆறு மணிக்கே வந்துடு" என்று வேலைக்காரப் பெண்மணியிடம் முதலாளியம்மாள் சொல்கிறாள். "ச....ரி...ம்மா" என்று பதில் வருகிறது. உடனே முதலாளியம்மாவுக்குத் தெரிந்து விடுகிறது, "என்ன இப்படி இழுத்துப் பேசுகிறாள்; இவள் கூறுவதைப் பார்த்தால் ஆறு மணிக்கு வராதது மட்டுமில்லை, மொத்த நாளைக்குமே வேலைக்கு வராம மட்டம் போட்டு விடப் போகிறாள் இவள்!" என்று. "சரி" என்று ஒப்புக்

கொள்ளும் விதத்தில் பதில் வந்தாலும் அதில் கலந்திருந்த தயக்கமும், வார்த்தையின் நடுவில் புலப்பட்ட இடைவெளியும் பணிப் பெண்ணின் உள்மனத்தை உணர்த்திவிட்டது.

தொலை தூரத்திலுள்ள மகனை தொலைபேசியில் தொடர்பு கொள்ளும் அம்மாவின் குரல் "எப்படிடா இருக்கே?" என்று கேட்கும். அந்தக் குரலில் உள்ள நடுக்கமும் அழுகையை அடக்கிக் கொள்ளும் முயற்சியுமே மகனுக்குப் பல செய்திகளைப் புலப்படுத்தும். "உன் உடல் நிலையைப் பற்றி எனக்குக் கவலை. நீ இல்லாமல் எனக்கு வருத்தமாக இருக்கிறது. உன் ஆரோக்கியத்தை சரியாகக் கவனித்துக் கொள்" என்ற பல செய்திகள் அந்தக் கேள்வியின் மூலம் வெளிப்பட்டு சம்பந்தப்பட்டவரை அடைகின்றன.

சில சமயம் பேசாமலிருப்பது கூட செய்தி தரும். 'மௌனம் சம்மதம்' என்பது இப்படித்தான். ஆனால் எல்லா மௌனங்களும் சம்மதமாக இருக்க முடியாது. 'என்னை மாதிரி ஒரு நல்லவன் இந்த உலகத்திலேயே கிடையாது. என்ன சொல்றீங்க?'



என்ற கேள்விக்கு விடை மௌனம் என்றால் அது உணர்த்துவது சம்மதம் இல்லையே!

## ரொம்ப முக்கியம்

மென்மையான உறவுகளை

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05* Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka. Supplement to the Kalki issue Dated 4.5.2003



நன்கு செழிக்க வைக்க உடல் மொழி பயன்படும். முக்கியமாக நேர்முகத் தேர்வுகளில். எல்லாக் கேள்விகளுக்கும் சரியான பதிலளித்தால் கூட கால்மீது கால் போட்டுக் கொண்டு பதிலளிப்பவருக்கு வெற்றி பெறும் வாய்ப்பு குறைவுதான். கேள்விகளை கவனமாகக் கேட்டும், மரியாதையுடனும் நம்பிக்கையுடனும் பதிலளித்தாலே (அவை முழுமையான பதில்கள் இல்லையென்றாலும் கூட) வெற்றிவாய்ப்பு அதிகம்.

ஒருவருக்கொருவர் தெரிவித்துக் கொள்ளும் தகவல்களில் சுமார் எழுபது சதவிகிதம் வார்த்தைகளினால் அல்ல, உடல் மொழியால்தான் என்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள். உடல் மொழியின் முக்கியத்துவத்தைக் குறிக்க இதைவிட வேறென்ன வேண்டும்?

தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்., அனுராதா சேகர்

ஜோக்ஸ்: குல்லூ மாடல்: ஜெகதீஷ்

அட்டைப்படம்: ஸ்ரீ ஹரி

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka



PARLE








பார்லே-ஜீ மில்க் சக்தி ஆற்றலுடன்
ரூ.4# மதிப்புள்ள புத்துணர்வூட்டும்
ரஸ்னா உத்சவ் இலவசம்.




ரூ.7*

Offer valid in Tamil Nadu till stocks last. Stock also available without this offer.

Visit : www.parleproducts.com

everest/2003/PP/12 tm

*MRP incl. of all taxes. Net wieght 100g. #MRP incl. of all taxes. This pack of Rasna Utsav Orange soft drink concentrate contains 3g powder and 2.2ml liquid.